நாராயணவரம்

# சுரைக்காய் சுவாமிகள்

(வரலாறு, அற்புதச் செயல்கள், வருமுன்னுரைத்தல்.)



ஸ்ரீ கிருஷ்ண சைதன்யர், தமிழ் வரலாற்று நூலாசிரியர்
சென்னை, புரசை.

தி. பக்தவத்சலம், B.A., M.B.P.I.,

அவர்கள் எழுதிய

ஆங்கில நூலின் மொழிபெயர்ப்பு

ஆங்கில முதல் நூலில்
அனுபவக் குறிப்புக்கள் தொகுத்தவர்:

N. இராஜு நாயுடு, M. B. P. I.,

தமிழில் மொழிபெயர்த்து
வெளியிடும் உரிமையாளர்கள்:

வ. ஆ. தேவசேனபதி, M.A. Ph.D.
செ. பாரிஜாதம், B.SC., B.T.

தாரா அச்சகம்
நாகப்பட்டினம்.

1957

# ஆங்கில நூல்
# இரண்டாம் பதிப்பின் முகவுரை



இந்நூல் 1911-ம் ஆம் ஆண்டு மே மாதத்தில் முதல் முதலாக வெளியிடப்பட்டது. வேறு பல அடியார்களின் அனுபவங்களையும் இரண்டாம் பதிப்பில் சேர்த்து வெளியிடலாம் என்று எண்ணியிருந்தோம். ஆனால் பல இடர்ப்பாடுகளினால் அவ்வெண்ணம் நிறைவேறுவதற்கில்லை.

தென் இந்தியா ஏற்றுமதி கம்பெனியின் துபாஷான திரு R. கிருஷ்ணசாமி நாயுடு, B.A., அவர்கள் இவ்விரண்டாம் பதிப்பை வெளியிடுவதற்கு மனமுவந்து செய்த உதவிக்காக நாங்கள் பெரிதும் கடமைப்பட்டிருக்கிறோம்.

சென்னை
1-10-1951

வ. ஆ. தேவசேனபதி
செ. பாரிஜாதம்

# ஆசிரியர் முன்னுரை

---

ஹைதராபாத் ரெஸிடென்ஸி கவர்ன்மெண்ட் அச்சகத்தின் ஹெட் அக்வுண்டண்ட் ஆக இருந்து ஓய்வு பெற்றிருப்பவரும், சுரைக்காய் சுவாமி சமாஜத்தின் மானேஜராக இருப்பவருமான என் நண்பர், திரு. N. ராஜூ நாயுடு M. B. P. I. அவர்கள் சில்மாதங்களுக்கு முன் சுரைக்காய் சுவாமி அவர்களின் வரலாற்றை ஆங்கிலத்தில் வெளியிடுவதுபற்றி என்னிடம் பேசினார்கள். வேண்டிய அளவிற்கு நம்பத்தகுந்த செய்திகள் கிடைத்தல் அருமை என்று நினைத்துத் தயங்கினேன். எனினும், அமெரிக்காவிலுள்ள ஹார்வர்ட் பல்கலைக் கழகத்தின் பேராசிரியர் ஆகவுள்ள ஜேம்ஸ் என்பவர் வெளியிட்ட நூல் (The Varieties of Religious Experience) என் உள்ளத்தில் பெரியதொரு கிளர்ச்சியை உண்டாக்கியது. நேராகப்பார்த்தவர்கள் சொல்லுவதைக் கொண்டும், கிடைக்கும் செய்திகளைச் சீராக அலசிப்பார்த்தும் மஹாத்மாக்கள் காட்டிய ஆன்மீய ஆற்றல் பற்றியும் இயற்றிய அருஞ்செயல்கள் பற்றியும் ஒரு நூல் எழுதலாம் என்று எண்ணினேன். இந்தக் கருத்துடனிருக்கும்போது. திரு. V. M. செங்கல்வராய முதலியார் அவர்களும் வேண்டிய செய்திகள் தர உடனே முன்வந்ததால் நண்பர். N. ராஜூ நாயுடு வெளியிட்ட விருப்பத்தை நிறைவேற்றலாமென்று துணிந்தேன். கனவுஉலகத்தைச் சேர்ந்தன போலத் தோன்றக்கூடிய செய்திகளைப்பற்றி எழுதும் அருமைப்

பாடுள்ள இவ்வேலையைச் செய்வதற்கு நாயுடு அவர்களின் இடைவிடா ஊக்கமும் சமய ஆர்வமுமே எனக்குத் துணையாக நின்றன.

இந்நூல் இரண்டு பகுதிகளாக அமைந்துள்ளது. முதல் பகுதி, திரு. செங்கல்வராய முதலியார் தந்த செய்திகளையே பெரிதும் கொண்டு நான் எழுதியதாகும். இரண்டாம் பகுதி சுவாமிகளின் அடியார்கள் தங்கள் அனுபவங்களைப்பற்றி எழுதியதாகும்.

நம்பத்தகாதன என்று எண்ணிவிடக் கூடிய பொருள்களைப்பற்றித் தாம் உண்மையாகக் கண்டறிந்ததாகப் பலர் கூறுவதால் இவை உண்மையாயிருக்கக் கூடும் என்று வாசகர்கள் நினைப்பதோடு ஜான்ஸ்டுவர்ட் மில், (John Stuart Mill) அலெக்ஸாண்டர் பெயின் (Alexander Bain) ஆகியோர் நம்பத்தக்கவை எவை, தகாதவை எவை என்று கூறும் அளவை முறைகளைக் கொண்டு இவற்றை மறுக்க முடியாதென்றும் நினைக்கிறேன்.

என் நண்பர்கள், உயர்நீதி மன்றத்தின் வழக்கறிஞர் (Solicitor) திரு. விஜயராகவலு நாயுடு M.B.P.I. அவர்களுக்கும், கல்வித்துறை மேற்பார்வையாளர் (Sub. Asst. Inspector of Schools) ஆக இருந்து ஓய்வு பெற்றுள்ள திரு V. நாதமுனி முதலியார் F.T.S. அவர்களுக்கும் இந்நூலை வெளியிடுவதற்காக அவ்வப்போது அளித்த உதவிக்காகவும் காட்டிய அக்கரைக்காகவும், என் நன்றி உரியதாகும்.

சென்னை
மே, 1911

**T. பக்தவத்சலம்.**

# பதிப்பாசிரியர் முகவுரை

---

நாராயணவரத்திலிருந்த மஹான் ஸ்ரீ சுரைக்காய் இராமசாமி அவர்களுடைய திவ்விய வரலாற்றை ஒரு நூல்வடிவில் வெளியிட வேண்டு மென்பது என் நெடு நாளைய பேரவா. வியக்கத்தக்க அற்புதங்களும் முன் அறிவிப்புக்களும் செய்த அவரை உலகத்தின் தலைவரான கடவுளின் அவதாரமாகக் கருதலாம். இந்நூலைப் படிப் பவர்கள் அவருடைய பெருமையை உணராதிரார் என்று நினைக்கிறேன். தமக்குமட்டுமேயன்றி, நாட்டின் சமய மறுமலர்ச்சிக்காகத் தம் வாழ்நாளையே அர்ப்பணம் செய்து உழைக்கும் உண்மையான சிலருக்கும் கெட்ட பெயரைத் தேடித்தந்து நம்நாடு முழுவதும் ஏமாற்றிக் கொண்டு அலையும் கள்ளத்துறவிகளின் இனத்தைச் சேர்ந்தவர் அல்லர் சுரைக்காய் சுவாமிகள்.

சுவாமிகள் சமாதி அடைந்து இப்பொழுது ஒன்பது ஆண்டுகள் ஆகின்றன. ஜூலைமாதக் கடைசி அல்லது ஆகஸ்ட் தொடக்கத்துக்குச் சரியான ஆடிமாதத்தில் ஹஸ்த நக்ஷத்திரத்தில் சுவாமிகளுடைய குருபூஜை மிகச் சிறப்பாக நடைபெறுகிறது. குருபூஜையன்று ஏறக் குறைய ஆயிரம் மக்களுக்கு உணவு அளிக்கப்படுகிறது. நாட்டின் பல பகுதிகளிலிருந்தும் சுவாமிகளின் அடியார் கள் குருபூஜைக்குவந்து மஹா பிரஸாதத்தைப் பெற்றுக் கொண்டு தம் ஊருக்குத் திரும்புகின்றனர்.

வேண்டிய அளவு பணம் இல்லாததால் சுவாமிகளின் சமாதிக் கோயிலைக்கட்டி முடிக்கவில்லை.

இந்நூலில் இருக்கக் கூடிய குறைகளைப் பொருட்படுத்தவேண்டாம் என்று சமய உணர்ச்சியுள்ள வாசகர்களைக் கேட்டுக் கொள்ளுகிறேன். "கரும்பின் கோணலை நிமிர்த்திஞல் அதன் சுவை குறைந்துவிடுமா ?" என்பது தெலுங்குப் பழமொழி.

ரா. விவேகானந்தா அச்சு நிலையத்தின் உரிமையாளரும் பீ. ஏ. பட்டத் தேர்விற்குப் பாடமாக வைக்கப்பட்ட ஸ்ரீ கிருஷ்ண சைதன்ய சரித்திரம் என்பதன் ஆசிரியரும் என் நண்பருமான T. பக்தவத்சலம் பிள்ளை, B.A.,M.B.P.I. அவர்கள் என் வேண்டுகோளுக்கு இணங்கி இந்நூலின் முதல் பாகத்தை எழுதியதற்காக அவருக்கு என் நன்றியைச் செலுத்துகிறேன்.

இந்நூலை வெளியிடுவதற்கான உதவியும் சீரிய அறிவுரையும் அவ்வப்போது தந்த என் சகோதரர், சுரைக்காய் சுவாமி சமாஜத்தின் தலைவரும் P.W.D. எக்ஸிகூடிவ் எஞ்சினீயராக இருந்து ஓய்வு பெற்றுள்ளவருமான ராய்பஹதூர் N. இரத்தினசபாபதி பிள்ளை, B.A., B.C.E., F.M.U., F.T.S., M.B.P.I. அவர்களுக்கு நான் பெரிதும் கடமைப் பட்டிருக்கிறேன்.

என் நண்பரும் சகோதரருமான திரு. M. குப்புசாமி செட்டியார் M.A., அவர்கள், தம்முடைய அனுபவத்தை எழுதித் தந்ததற்காக என் நன்றி. ஓய்வு இல்லாததால் விவரமாகத் தம் அனுபவத்தை எழுதித்தர அவரால்

இயலாதென்று நினைத்தேன். ஆகையால், அவர் கடிதத்திலிருந்து ஒரு பகுதியை அச்சிட வேண்டியதாயிற்று. பின்னர், அவர் விடுமுறை பெற்று வந்து சுவாமிகளைப் பற்றித் தாம் அறிந்ததை விவரமாக எழுத வாய்ப்பு பெற்றதால், அவர் பின்னர் எழுதியதையும் இரண்டாம் பகுதியின் இறுதியில் சேர்த்துள்ளேன்.

முடிவாக, சத்குருவின் அடியார்களான சகோதர சகோதரிகள் இந்நூலில் வெளியிடுவதற்கெனத் தம் அனுபவங்களை எழுதித் தந்தமைக்காக அவர்களுக்கெல்லாம் நன்றி செலுத்துகிறேன்.

சென்னை }
மே, 1911 }

N. ராஜு நாயுடு

# மொழிபெயர்ப்பாளரின் முன்னுரை

சுரைக்காய் சுவாமி அவர்களின் வரலாறும் அடியார்களின் அனுபவங்களும் ஆங்கிலத்திலிருப்பதால் தமிழ் அல்லது தெலுங்கு மொழிகள் மட்டுமே அறிந்த அன்பர்கள் சுவாமியின் பெருமையைத் தெரிந்துகொள்ள முடியவில்லையே என்பது இதுவரை பெருங்குறையாயிருந்தது. 1911-ஆம் ஆண்டில் இந்நூலை முதல் முதல் ஆங்கிலத்தில் எழுதி வெளியிட்ட காலஞ்சென்ற தி. பக்தவத்சலம் பிள்ளை B.A. அவர்கள் 1929-ஆம் ஆண்டில் இந்நூலைத் தமிழில் மொழிபெயர்க்கத் தொடங்கினார்கள். ஆனால் 1930-ல் அவர்கள் இறைவனடி சேர்ந்தமையால் இம்முயற்சி கைகூடவில்லை. ஆங்கிலத்தில் எழுதுவதைப் போலவே தமிழிலும் அவர்களுக்கிருந்த பேராற்றலும் நடை அழகும் தமிழ் மொழிபெயர்ப்பை மிகச் சிறந்ததாகச் செய்திருக்கும் என்பதில் ஐயமில்லை.

எங்களால் இயன்றவரை முயன்று மொழிபெயர்த்து இந்நூலை வெளியிடுகின்றோம். இம் மொழிபெயர்ப்பில் உள்ள குற்றம் குறைகளைப் பொறுத்துத் தமிழ் அன்பர்கள் சுவாமியின் பெருமையை உணர்ந்துகொண்டால் எங்கள் முயற்சி வெற்றிபெற்றதாகக்கருதி மகிழ்வோம். இந்நூலைத் தெலுங்கிலும் தக்கவர்களைக்கொண்டு மொழிபெயர்க்க வேண்டுமென்பது எங்கள் பேரவா. இவ்விருப்பம் நிறைவேறச் சுரைக்காய் சுவாமி திருவருள் கூடுவதாக.

தமிழ் மொழிபெயர்ப்பு விரைவில் வெளிவர வேண்டுமென்று இடையறாது ஊக்கம் அளித்த

ஸ்ரீ B. V. நரசிம்மசுவாமிகள், ஸ்ரீ கேசவலு நாயுடு, ஸ்ரீ R. கிருஷ்ணசாமிநாயுடு, ஸ்ரீ V. தாமோதரம் நாயுடு ஆகிய பெரியோர்களுக்கு எங்கள் நன்றி உரியதாகும்.

ஆங்கில நூலில் தெலுங்கிலிருந்து மொழிபெயர்க்கப் பட்ட பகுதிகளை மீண்டும் தெலுங்கிலிருந்து தமிழில் மொழிபெயர்க்க உதவிய குமாரி ஜெயலக்ஷ்மிக்கும் திரு. விசுவநாதபிள்ளை B.A., B.T., அவர்களுக்கும் தமிழ் மொழி பெயர்ப்பையும் அச்சுத் தாள்களையும் பார்த்துத் திருத் தங்கள் செய்ய உதவிய திரு. வித்துவான். அம்பை. இரா. சங்கரன் அவர்களுக்கும் எங்கள் நன்றி.

இந்நூல் குறைந்த காலத்தில் அச்சாகி வெளிவர உதவிய நண்பர் ம. மு. தணிகைமலை அவர்களுக்கும் தாரா அச்சகத்தாருக்கும் எங்கள் நன்றி.

**வ. ஆ. தேவசேனுபதி**
**செ. பாரிஜாதம்**
**த. செங்கல்வராய பிள்ளை**
மொழிபெயர்ப்பாளர்கள்.

**பிரிட்டிஷ் உளநூல் ஆராய்ச்சி நிலையத்தின் தலைவரான டாக்டர் அலெக்ஸாண்டர் வெர்னர்**

(Ph. D. Psy. D. G.I.M.C.F.A.I.P.)

**அவர்களுடைய கருத்து :**

நாராயணவரத்து மஹானைப்பற்றிய நூலை மிகுந்த அக்கரையோடு படித்தேன். அவர் வியக்கத்தக்க ஆற்றலுடையவராகவும் உயர்ந்த ஆன்மீயப் பண்புடையவராகவும் இருந்திருக்க வேண்டும். அவர் உயர்ந்த ஆன்மீய நிலையில் வாழ்ந்திருந்திருக்க வேணடும். அவரை நான் அகக் காட்சியில் பார்த்துச் சில சுருக்கமான செய்திகள் கிடைக்கப் பெற்றுளேன். உளநூல், ஆன்மீய மறை பொருள்கள் பற்றிய ஆராய்ச்சி ஆகியவற்றில் ஈடுபட்டுள்ளோர் அனைவரும் வியக்கத்தக்க இந்நூலைக் கட்டாயம் படிக்க வேண்டும் என்று கருதுகிறேன். இந்நூலில் அருமையான பல செய்திகள் இருக்கின்றன. இதைப் படிப்பவர்கள் சிறந்த அறிவைப் பெறுவார்கள்.

(கையொப்பம்) **அலெக்ஸாண்டர் வெர்னர்** (F.A.I.P.)

செப்டம்பர் 25, 1911.

# பொருளடக்கம்






## முதல் பாகம்

### சுரைக்காய் சுவாமிகள் வரலாறு

## இரண்டாம் பாகம்

### பக்தர்கள் சிலர் எழுதித்தந்த தம் அனுபவக் குறிப்புகள்

பக்கம்

முதல் பாகம்

# ஸ்ரீ சுரைக்காய் சுவாமிகள்

வரலாறு, அற்புதச் செயல்கள்

வருமுன்னுரைத்தல்

# சுரைக்காய் சுவாமிகள்

## முன்னுரை

இந்தியா என்று பொதுவாக வழங்கப் பெறும் பரத கண்டம் தேனும் பாலும் பெருக்கெடுத்தோடும் வளம் படைத்த நாடு. ஆனால் அதன் பெருமை நாட்டு வளத்தால் மட்டும் ஏற்படுவதன்று. சமய அறிவிலும், ஆன்மீயப் பண்பிலும், அன்பு நெறியிலும், தத்துவ ஆராய்ச்சியிலும், இந்தியா தலை சிறந்து விளங்குகிறது. மலருக்கு நிறம் ஊட்டவும் புடமிட்ட பொன்னுக்கு மெருகேற்றவும் வேண்டாதவாறு இந்தியாவைப் புகழ்வதும் வீண் செயலே யாம். இந்தியாவின் சூழலே தெய்வீக மணம் கமழ்வதாகும். இந்நாட்டின் ஒவ்வொரு பழக்கவழக்கமும்—வாழ்க்கையின் அன்றாடச் செயல்கள் முதல் பேரறிஞர்தம் ஆராய்ச்சி வரையில்—சமயத்தொடர்போடும் சமய நோக்கங்கொண்டும் நிகழ்கின்றன. ஆம்; இந்தியாவின் சமயம் என்ற ரோஜா மலரில் முட்களும் தாம் இருக்கின்றன. பொய்யும், பாசாங்கும், அறிவின்மையும், குருட்டு நம்பிக்கையும், வெறியும், மாயவித்தையும், கொடுமையும் இழிதகைமையும் இங்கும் அங்குமாகக் காணப்படுகின்றன. எனினும், இந்தியா தான் முதல் முதலாக உலகத்தின் நிலையாமையை உணர்ந்து கவிதை, தத்துவ ஆராய்ச்சி ஆகிய துறைகளில் முன்னேறத் தொடங்கியது என்பது மறுக்கப்படாததும் மறுக்க முடியாததுமான உண்மை. பிற்காலங்களில் மேல்நாட்டினர் முறையாக மெய்ப்பிக்க முயலும் ஆழ்ந்த மெய்யுணர்வுக் கருத்துக்களை இந்தியாதான் முதல் முதலாக உலகத்திற்கே எடுத்தோதியது. அன்பே உருவாக வந்த புத்தர்பிரானின் தலைமையில் இந்தியாதான் வாயில்லா விலங்குகளிடம்

இரக்கங்கொண்டு எல்லா உயிர்களிடத்தும் அன்பும் அவ் வன்பின் அடையாளமாக மரக்கறி உணவும் மேற்கொள்ள வேண்டுமென வழிகாட்டியது. இன்றும் இந்தியாவின் சமயக் கொள்கையில் ஓர் இன்றியமையாத கூறுக மரக்கறி உணவு கருதப்படுகிறது. சென்னையிலுள்ள அடையாறி லும், இந்தியாவிலேயே மிகவும் புனிதமானது என்று கருதப்படும் காசியிலும் காலூன்றியுள்ள பிரும்மஞான சங்கத்தார்க்குக் கருத்து ஊற்ருக இருப்பது இந்தியாதான். இந்தியா தவறியிருக்குமாயின், அது, உலகியல் முன்னேற் றத்தைப் புறக்கணித்த தவருகுமே அன்றி, உள்ளுணர் வைப் பெறுவதிலும் ஆன்மீய விழிப்பு அடைவதிலும் இந்நாடு ஒரு போதும் தவறியதே இல்லை.

தங்கள் சமயத்தைப் பற்றியே இந்துக்கள் தலையாய பெருமை கொள்கிருர்கள். மனிதன் தன்உணர்வு பெற்ற காலம் முதல் இது வரையில் இந்தியாவில் தோன்றியுள்ள மஹாத்மாக்களும் ஞானிகளும் எண்ணிலடங்கார்—மிகப் பலர்—ஆவர். இந்தியாவின் சமய நூல்களில், முற்காலத்து ரிஷிகள், பிற்காலத்து ஆசாரியர்கள், வைணவ ஆழ்வார்கள், சைவநாயன்மார், வடநாட்டுத்தாசர்கள் தென்னுட்டுப் பாகவதர்கள் ஆகியோர் செய்த அருஞ் செயல்களைப்பற்றித் தெரிந்து கொள்ளலாம். காலமும் நிலையும் மாறிவிட்டதால் இந்துக்கள் கலியுகம் என்று குறிப்பிடும் இக்காலத்தில் மஹாத்மாக்கள் தோன்றுவது மிக அருமையாகிவிட்ட தெனினும், இந்தக் காலத்திலும்கூட, அவ்வப்போது இங்கும் அங்குமாக மஹாத்மாக்கள் தோன்றி 'இருள் தருமாஞாலத்தில்' தங்கள் அருளொளியைப் பரக்க வீசு கிருர்கள்.

இப்பொழுது சிலகாலமாக நாத்திகம் பேசுவதும், எதற்கும் ஐயங்கொள்வதும் படித்த அன்பர்களின் நாகரிக

வழக்கமாகி விட்டது—இதை ஒரு தொற்று நோயென்றே சொல்லலாம். இவர்கள் பிடிவாதமாக இக்கொள்கைகளை மேற்கொள்வதுமல்லாமல், எது ஏற்ற சமயம் என்று பாராமலும் இதனைப் பிறர்க்கு எடுத்துரைக்கவும் தொடங்கி விடுகிறார்கள். சிறந்த சமய முடிபுகளை அவமதித்துத் தங்கள் முடிபுகளைத் தவிர வேறொன்றும் தத்துவ ஆராய்ச்சிக்கு ஏற்றதல்ல என்று இவர்கள் முடிவு கட்டிவிடுகிறார்கள். பரம்பொருளைப்பற்றிய ஆராய்ச்சிக்கு இந்தச் சிறு நூலில் இடம் இல்லை. ஆனால் உண்மையாக மெய்யறிஞர் என்ற பெயருக்குத் தகுதி உடைய எவரும் நாத்திகராயிருக்க முடியாது என்றும் தற்காலத்துத் தத்துவ ஆராய்ச்சி ஆத்திகத்திற்கு ஒத்ததாக இருக்கிறது என்றும் இந்நூலிலிருந்து தெரியலாம் என்று கூறுவதோடு அமைகின்றோம். தத்துவ ஆராய்ச்சியில் செய்க்காட்சி முறைக்கு வழிகோலிய (Father of Experimental Philosophy, பேக்கன் Francis Bacon) என்பார், உண்மையான விஞ்ஞானப் போக்குடையோரின் உள்ளுணர்வோடு,

"சிறிதளவே தத்துவ ஆராய்ச்சி செய்தால் அதன் விளைவு நாத்திகம்தான். ஆனால், ஆழ்ந்து சென்றால், அவ்வாராய்ச்சி சமயத்தில் வந்துமுடிகிறது" என்கிறார்.

"இருண்டு தனித்துள்ள தன்னுடைய மறைவிடத்திலிருந்து, (கெடுதிக்கு முற்குறியாகத் தோன்றும்) நாத்திகம் என்கிற ஆந்தைக்குஞ்சு தன் புன்மையான இறக்கைகளை அடித்துப் பகலொளியில் பறந்து சென்று, தன் கண் இமைகளை இறுக மூடிக்கொண்டு, வானத்தில் ஒளிவீசிக்கொண்டிருக்கும் சூரியன் எதிர் நின்று "அது (சூரியன்) எங்கே இருக்கிறது?" என்று கூக்குரல் எழுப்புகிறது" என்று கோல்ரிட்ஜ் (Coleridge) என்ற தத்துவக் கவிஞர் கூறுவது நாத்திகத்திற்குப் பொருத்தமான விடையல்லவா?

யங் (Young) என்றவர், "இரவில் நாத்திகனுக்குக் கடவுள் உண்டு என்று அரை நம்பிக்கை பிறக்கிறது" என்று, நகைச்சுவையோடும், சுருக்கமாகவும், அழுத்தமாக வும் கூறினார்.

எனினும், சிலர் இவற்றிற்கெல்லாம் உடன்படாது, கடவுளே இல்லை என்கிறார்கள். ஆகையால், அவர்கள் உயிர், பரம்பொருள் இவற்றின் தொடர்பான கொள்கைகளைப் பொருட்படுத்தாது, அவற்றைப் பின்பற்றுவோரைக் கேலி யுடன் பித்தர்கள் என்று கூறுவது வியப்பன்று. கடவுள் கொள்கையில் உடன்பாடும் மறுப்பும் இல்லாமல் ஐயப் பாடு நிறைந்தவரான Agnostics என்பவர் பொருள் களை ஆராய்வதால், வியக்கத்தக்க சில நிகழ்ச்சிகள் உண்மையாகவே நிகழ்ந்தனவா இல்லையா என்று கூற முடியாதென்கிறார்கள். இவ்வுலகத் தொல்லைகளே நமக்குப் பெரிதாக இருக்க, ஏதாவது விளங்காத நிகழ்ச்சிகள் ஏற் பட்டாலல்லது ஆவிகள், காற்று, கறுப்பு என்பனபற்றிய கவலை நமக்கு உண்டாகாது என்கிறார்கள். சுருங்கக் கூறின், இதுவே அவர்கள் கொள்கை. "இல்லை" என்கிற வர்கள் ஓரளவுக்குச் சரியான முடிவுதான் காண்கிறார்கள். ஒளிப்பு மறைப்பில்லாமல் அவர்கள் உண்மை பேசுவதை நாம் பாராட்டுகிறோம். ஆனால், தங்கள் கொள்கைகளை விடாப்பிடியாகக் கொண்டு அவர்கள், தங்கள் அறிவுக்குத் திரைபோட்டு மறைத்துக் கொள்வதற்காக இரக்கப்படு கிறோம். "ஹொரேஷியோவே! உன்னுடைய தத்துவக் கொள்கைக்கு எட்டாத உண்மைகள் எத்தனையோ விண் ணிலும் மண்ணிலும் உண்டு," என்று ஒரு ஆங்கிலக்கவிஞர் குறிப்பிட்டபடி, புதிய உண்மைகளைப்பற்றியும் வியப்பான நிகழ்ச்சிகளைப் பற்றியும் தெரிந்துகொள்ளுவதற்கில்லாமல் இவர்கள் தங்கள் அறிவுக்குத் திரைபோட்டு விடுகிறார்கள். "இவ்வுலகக் கடமைகளே நமக்குப் போதுமானவை இருக்

கின்றன; நம் வாழ்நாளோ மிகக் குறுகியது, விரைவில் கழிந்துவிடுவது' என்பதெல்லாம் உண்மைதான். இது உண்மையாயிருப்பதால்தான் நாம் பார்வை தெளிவற்றவர்களாகிவிட்டோம். இது காரணமாக நம் உயர்ந்த எண்ணங்களையும் பண்புகளையும் புறக்கணித்துவிடக் கூடாது. அடிசன், (Addison) தம்முடையகட்டுரைகளில் (Spectator) அழகாகக் கூறுகிறது, "இதனுல்தான் (இவ்வுலகத்தின் இயற்கையை உள்ளபடி உணர்வதால்தான்) மக்கள் கடவுள் பற்றியும் மறுமைபற்றியும் தம் கருத்தைச் செலுத்தி, உலகத் தொழில்களுக்கெல்லாம் அடிப்படையாக அமைந்துள்ள முதன்மையான கடமைகளைச் செய்யவேண்டும் என்பதைத் தெரிந்துகொள்ள முடிகிறது''' என்பதாம்.

நம் மதிப்புக்குரிய அன்பர். கனம், P. இராமநாதன் அவர்கள் (Solicitor General, Colombo) சென்னைக்கு இரண்டு ஆண்டுகளுக்கு முன்புவந்து தம் இனிய சொற்பொழிவுகளை நிகழ்த்திய போது, இங்கே இருந்த சில அறிஞர்கள் ஆகாயக் கோட்டை கட்டுவதும் பயனற்றதுமான சமயம் என்ற பொருள் சென்னைக்குத் தேவை இல்லை என்று கூறியதைத் தவறென உறைப்பாகக் காட்டினுர். தமக்கே உரிய வழியில் அவர், பயனுள்ளதும் செயல் முறைக்கேற்றதுமாக ஏதாவது இவ்வுலகில் உண்டென்றால் அது சமயம்தான்—சமயத்தைத் தவிர வேறெதுவும் இல்லை என்று காட்டி எதிரிகள் பேச்சின் போலியை வெளிப்படுத்தினுர். ஏமாற்றுதல், மாய வித்தைகள் ஆகியவை ஒருபுறமிருக்க, இறந்தவர்களின் ஆவிகள் பற்றிய நிகழ்ச்சிகள் போன்றவற்றை ஆராய்ந்து பார்த்ததில், கணிசமான அளவுக்கு உண்மை இருக்கிறது என்று தெரிகிறது. ஹார்வர்ட் பல்கலைக் கழகப் பேராசிரியர் காலஞ்சென்ற ஜேம்ஸ், என்பவர் இயற்கைக்கு மேற்பட்டதொரு ஆற்றல் இயற்கை நிகழ்ச்சிகளில் தோன்றுவதை மெய்யென்று காட்டும் எண்ணிறந்த சான்று

கள், Varieties of Religious Experience என்கிற தம் நூலில் தருகிறுர். எதிர்காலத்தைப் பற்றி முன் அறிவிக்கும் ஆற்ற லும் உள்ளுணர்வும் பெரியார்களுக்கு அடையாளமாக எல்லா இடங்களிலும் எல்லாக் காலங்களிலும் கருதப்பட்டு வந்திருக்கின்றன. காசு பெறுவதற்காகவோ அல்லது வேறு தீய நோக்கத்துடனே இவை நிகழவில்லையென்றுல் உண்மையிலேயே இவை பெருமைக்கு அடையாளம்தான். நிகழ்ச்சிகளை முன் அறிவிப்பது என்பது ஒரு தொழி லாகவோ வாணிபமாகவோ நடைபெறுகிறது என்றுல் அது அறியாதவர்கள் கண்ணில் மண்ணைப் போடுவது தவிர வேறென்று மில்லை. மேல் நாட்டில், 'எதிர்காலத்தைப் பற்றிச் சொல்லுவது என்பது போலி' என்று இகழப் படுவதற்கு இந்த இழிமுறையே காரணமாயிற்று. நம் நாட்டில் எதிர்காலத்தைப்பற்றிய இத்தகைய அறிவிப் புக்குக் குறி சொல்லுதல் என்ற பெயர் வழங்குகிறது.

இவ்வாறிருப்பினும், ஆன்மீய ஆற்றல் பெரிதும் படைத்து, இவ்வுலக இன்பங்களை வெறுத்து இறைவ னிடத்துத் தம்மை ஒப்படைத்து அவனை வணங்கி, கீழ்நிலை யிலுள்ள மக்களுக்கு உதவுவதற்காக வாழும் பெரியார் களும் இல்லாமல் இல்லை. இவர்கள்தாம் உண்மையான குரு, ஆசாரியர், மஹாத்மா என்போர். விஞ்ஞான முறை யில் ஆராய்ச்சி செய்வதும், எங்கிருந்து கிடைத்தாலும் எந்த உருவில் வந்தாலும் உண்மையை உண்மை என்று ஒப்புக் கொள்ளவேண்டும் என்ற பரந்த மனப்பான்மையும் மிகுதி யாக உள்ள இக்காலத்தில்,சென்ற முப்பது நாற்பது ஆண்டு களுக்குள் நம் நாட்டில் நடமாடிய மிகச்சிறந்த பெரியார் ஒரு வரைப்பற்றி, நன்றுகப் படித்துப் பண்பட்டவர்களும் மதிப் புக்குரியவர்களுமான சிலர் கூறியுள்ள அனுபவங்களை இங்கே இந்நூல் வடிவில் தருவது தவருகாது என்று நினைக் கிறேன். இவ்வாறு எண்ணித் துணிவுகொண்டு, திட்ட

மாகக் கிடைக்கூடிய சான்றுகளைக் கொண்டு, நாராயண வரத்தில் இருந்த மஹானின் வரலாற்றையும், அவர் நிகழ்த்திய அற்புதங்கள், எதிர்காலத்தைப் பற்றிக்கூறிய முன் அறிவிப்புக்கள் ஆகியவற்றையும் இச்சிறு நூல் வடிவில் தருகின்றேன். தர்க்க முறையில் ஆராய விரும்புவோர் இங்கே கூறப்பட்டுள்ளவற்றைச் சீர்தூக்கி ஏற்ற முடிபுக்கு வரலாம்.

சுவாமியை முதலில் பார்த்தவர்கள் (P. W. D. Retd. Executive Engineer) ஆன ராய் பஹதூர் N. இரத்தின சபாபதி பிள்ளை, B. A., B. C. E., F. M. U., அவர்களும் அவருடைய நண்பர்களான டோக் நாரயணசாமி நாயுடு அவர்களும் V. M. செங்கல்வராய முதலியார் (நல்லஸ்வாமி) அவர்களும் ஆவர். துறவற வாழ்க்கை நடத்திய நாயுடு அவர்கள் இரண்டு ஆண்டுகளுக்குமுன் காலமானுர். அவர் ஒரு பெரிய குடும்பத்தைக் சேர்ந்தவர். அவருடைய உடன் பிறந்தாருள் ஒருவர், டெபுடி கலெக்டர் ஆகவும் வேறொருவர் சென்னை நகராண்மைக் கழகத்தில் சிறிது காலம் ரெவினியூ ஆபீஸராகவும் இருந்திருக்கின்றனர். திரு. செங்கல்வராய முதலியார் வேளாள உயர்குடியிற் பிறந்தவர். அன்பும் அமைதியும் வாய்ந்தவர். அவருக்கு இப்போது வயது 75. சுவாமியை நாராயணவரத்தில் இவர்கள் மூவரும் பார்த்தது முதல் சுவாமி உடல் நீத்துச் சமாதி அடையும் வரை, முதலியார் அவர்கள் சுவாமியுடனேயே பெரும்பாலும் இருந்தார். இங்கே கூறப்படும் வரலாறு, முதலியார் அவர்கள் கூறியதை அடிப்படையாகக் கொண்டு அமைந்தது. இந்நூலின் இரண்டாம் பகுதியில் வரும் வேறு பலர் கூறும் அனுபவ உரைகள் முதல் பகுதியில் கூறப்பட்டிருப்பதை ஓரளவிற்காவது உறுதி செய்கின்றன என்று நினைக்கிறோம்.

# திருவுருவம்

## அத்தியாயம் 1

திருத்தணிகைக்கும் திருப்பதிக்கும் இடையில் உள்ள புத்தூருக்கு மூன்று மைல் தூரத்திலிருப்பது நாராயண வரம் என்னும் ஒரு பெரிய ஊர். இப்பழமையான கிராமம் இயற்கை வளத்தால் சூழப்பெற்று எழிலுடன் விளங்கு கின்றது. இவ்விடத்தின் குளிர், வெப்பநிலை யாவருக்கும் நன்மை பயக்கக்கூடிய சிறப்பு வாய்ந்தது. பசுமையான வயல்களும் சோலைகளும் கண்களைக் கவர்கின்றன. ஆகா யத்தில் குளிர்ந்த மேகங்கள் தவழ்ந்து செல்வதும் முத்து மழை பெய்வதும் குதூகலத்தை உண்டுபண்ணும். கரு மேகங்களையும் வ ளாவிய மரங்களையும் பகலவன் பொன் ஞெளி பரப்பி அழகுபடுத்துவது ஒரு அரிய காட்சி. பல வர்ணத் திரைகளை விரித்ததுபோல ஜொலிக்கின்ற அந்த வானத்தே அமைதியோடும் பெருமிதத்தோடும் விளங்கும் நெடிய குன்றுகளின் தோற்றம் பார்ப்போரைப் பரவச மாக்கும். குளிர்ந்த காற்று, கதிரவன் உதயம், குயில்களின் இனிய ஓசை, சோலைகளின் வளம், ஊற்றுப் பெருக்கால் உவகையூட்டும் நீரோடைகள், அந்தி வானத்தின் சுந்தரத் தோற்றம், அனைத்தும் ஐம்புலன்களை அமைவுறச் செய்து அடியவர் உள்ளத்தை ஆண்டவன் திருவடி யிணையில் பிணைக்கும் தன்மை வாய்ந்துள்ளன. இவ்விதச் சீரிய இயல்புகள் வாய்ந்த நாராயணவரத்தில் நம் குருநாதன் சுரைக்காய் சுவாமிகள் வந்து தங்கி அடியார்களை ஆட் கொண்டருளியது வியப்பன்று. சுவாமிகளின் முழுப்பெயர்

சுரைக்காய் இராமசுவாமி என்பதாகும். இரண்டு பெரிய சுரைக்குடுக்கைகளை இரு பாத்திரங்களாக இவர் எக்காலத்தும், எப்போதும் தம்முடன் எடுத்துச் சென்றதால் அப் பெயர் வழங்கலாயிற்று. உண்ணும் உணவையும் குடிக்கும் தண்ணீரையும் இந்தச் சுரைக் குடுக்கைகளிலேயே இவர் வைத்துக் கொள்ளுவார்.

சுவாமியின் உயரம் சற்றுக் குறைவு. மாநிற முடையவர். கிழிந்த உடையையும் பெரிய தலைப்பாகையை யும் அணிந்திருப்பார். இவரை ஊர் ஊராய்ச் சுற்றித் திரியும் ஒரு பேயாண்டி என்று பார்ப்பவர் நினைப்பர். ஆனால் இவர் முகத்தில் விளங்கும் அறிவின் பொலிவையும் கண்களில் பிரகாசிக்கும் ஞானச் சுடரொளியையும் காண் பவர் இவர் கரைகண்ட ஞானி என்பதை உணர்வர். இவர் பேசும் சொற்களிலிருந்து நேரான பொருள் அறிய இய லாது. மறைபொருள் அடங்கிய அவர் மொழிகளை, சிந்தித் துப் பார்க்கும் அறிஞர்கள் தாம் உணர்ந்துகொள்ள முடி யும். சில சமயங்களில் தம்மிடம் வந்து தங்கள் குறைகளைக் கூறிக் கொள்ளுவோர்க்கு ஆறுதல் சொல்லுவார். நோயுற்று நலிந்தவருக்கு நோயைப் போக்கியருள்வார்; இடருற்றவருக்கு இடர்களைவார்; சிக்கல்களைப் போக்க வழிகாட்டுவார். கெடுதி வருமுன்னரே குறிப்பாக எச்சரிக்கை செய்து துன்பப்பட வேண்டியவர் மனதைத் திடப்படுத்தி வைப்பார்.

இம்மஹான் எப்போது பிறந்தார், எங்கே பிறந்தார் என்று எவராலும் திட்டமாகக் கூற இயலவில்லை. செவி வழிச் செய்திகளாக வழங்கும் கதைகள் சில உள. இடை யர் குலத்தில் பிறந்து ஆடு மாடு மேய்க்குங்கால் ஒரு மஹாத்மாவிடம் யோகப்பயிற்சி கற்றார் என்பது ஒருகதை. திருப்பதிக் கருகில் ஒரு கிராமத்தில் பிறந்து செங்கற்பட்டு

ஜில்லா திருவள்ளூரில் ஒரு கையில் கருடனை ஏந்திக் கொண்டு நெடுங்காலம் பிச்சையெடுத்து நாளடைவில் அற்புதமான மனோ சக்தியை வளர்த்துப் பின்னர் புகழடைந்தார் என்பது மற்றொரு கதை. இவர் இருநூறு ஆண்டுகளுக்கு மேல் இருந்து சமாதியடைந்தார் என்று வேறு சிலர் கூறுவர். இவைகளுக்கெல்லாம் தக்க ஆதாரங்கள் இல்லை. மிக மிக நீண்ட காலம் மானிட உடல் தாங்கியிருந்தார் என்பதில் எவரும் ஐயங்கொள்வதற்கில்லை. தம் தளர்நடைப் பருவமுதல் தடியூன்றி நடக்கும் தள்ளாத காலமாம் முதுமைப் பருவம் எய்திய வரையில் சுவாமிகள் அன்று பார்த்த கண்ணுக்கு அழிவில்லாது என்றும் ஒரே ஒளி பொருந்திய மாறாத மாண்புமிக்க தோற்றத்தோடு விளங்கினார் என்று அவரை நேரிற்கண்ட 80, 90 வயதுள்ள முதியவர்களெல்லாரும் சொல்வதுண்டு. அவர் மார்பை அணிபெறச் செய்து விளங்கிய பால் நிறம் பொருந்திய அவரது நீண்ட தாடி அவரது அருள் தோற்றத்திற்கு ஓர் ஏற்றம் கொடுத்துப் பார்ப்போரைப் பரவசமடையச் செய்தது. பல்லாண்டு, பல்லாண்டாக அவர் இம் மண்ணுலகில் உடலைத் தாங்கி நின்றாலும் கண்ணொளி குன்றாது, பற்கள் தளராது, வேறெவ்விதக் குறைபாடுகளுமில்லாது விளங்கினார்.

சுவாமிகளது சமயம் வைணவமென்றேனும் சைவமென்றேனும் பாகுபாடு செய்ய இயலாது. ஒன்றற்கொன்று மாறுபட்டுத் தத்தம் மதமே சிறந்ததென்று சாற்றுகின்ற எந்த மதமும் அவருக்குச் சம்மதமானதல்ல. குறுகிய நெறிகளைப் பின்பற்றும் சமயங்களைக் கடந்து நின்ற இம்மஹானுக்கு எல்லா மதங்களுக்கும் ஏற்ற மதங்களே. சுவாமிகளின் திருமுன்னர் எப்போதும் பக்தர்கள் அடிகளது விருப்பத்திற்கிணங்கக் கட்டைகளை எரித்து அழல் ஓம்பிக் கொண்டிருப்பர். அந்த அக்னி குண்டத்தில் உள்ள சாம்

பலைச் சைவர்கள் விபூதியென்றும் வைணவர்கள் எக்கு சேஷம் என்றும் எடுத்து அணிந்து இன்புறுவர். சமயக் குறிகளை நெற்றியில் அணிந்துகொள்ளும் நியமம் சுவாமிகளுக்கில்லை. ஆனால் எவரேனும் திருநீறாவது திருமண்ணாவது சுவாமிகளது நெற்றியில் அணிவித் தால் அதற்காகச் சுவாமிகள் முகஞ்சுளிப்பதில்லை. அவரவர்கள் திருப்தியடையட்டுமென்று சும்மா இருந்துவிடுவர். விரிந்த நோக்கத்தோடு கருதுவோமானால் அவரது சமயம் உண்மையைக் கடைப்பிடிக்கும் சமயம். அன்பே அவரது சமயத்திற்கு அடிப்படை. மக்களாய்ப் பிறந்தார் மாட்டு மன்றி வாயில்லாப் பிராணிகள் முதலிய உயிர்களிடத்தும் அன்புகாட்ட வேண்டுமென்பது அவர் சொல்லாலும் செயலாலும் புகட்டிய உபதேசம். சுவாமிகளிடத்தில் இரண்டு நாய்கள் இருந்தன. அவர் அவற்றை அன்புடன் நடத்தியதும் உண்பித்ததும், அவை இறந்தபோது கண்ணீர்வடித்து வருந்தியதும், விலங்குகளை அன்பாய் நடத்த வேண்டும், மற்றும் எவ்வகையிலும் அவற்றைக் கொடுமையாக நடத்துவதும் துன்புறுத்துவதும் கூடாதென்னும் இந்து-பௌத்த சமயக் கொள்கைகளைப் படிப்பினையாக எடுத்துக்காட்டுவனவாக இருந்தன. சர்வ சமயங்களுக்கும் பொதுவான நன்னெறிகளையே அவர் பொது மக்களுக்கு எடுத்து ஓதிக்கொண்டிருப்பார். மக்களிடத்தில் அவர் காட்டிய உயரிய கனிவும் அன்பும் அளவில்லாதன. தனவந்தர்கள், எளியவர்கள் என்ற வேறுபாடு அவருக்கில்லை. யாவரும் அவர் அருள் நோக்கிற்கு ஒன்றே. அவருடைய வாழ்த்துக்கும் ஆறுதலான மொழிகளுக்கும் ஏற்றத்தாழ்வென்பதில்லாமல் அனைவரும் பாத்திரராக விருந்தனர். சில சமயங்களில் பொன்னுடையவரும் பொருளுடையவரும் நெடுங்காலம் சுவாமிகளது அருளுக்காக ஏங்கிக் காத்திருக்க ஒன்றுமில்லா வறியவர்கள் எளிதாக அவரது அருள் நோக்கைப் பெறுவதுமுண்டு.

உணவு விஷயத்தில் இதைத்தான் சாப்பிடுவது என்று கட்டாயமான விதிவிலக்கு ஒன்றும் சுவாமிகளிடத்து இல்லை. அவருக்கிட்டதையெல்லாம் மிக இனிதாக ஏற்று உண்பார். அறுசுவைமிக்க சிறந்த பண்டங்களானாலும் கூழானாலும், வெறும் மிளகாய்த் தண்ணீர் சேர்ந்த சோரு ஞலும் ஒன்ருகவே கருதுவார். பசியாற வேண்டுமென்பது தான் நோக்கம். வகை வகையான பலகாரங்களையும் பதார்த்தங்களையும் செய்து சுவாமிகளுக்குப் படைப்பதற் காக ஜனங்கள் செய்யும் முயற்சி வீண் முயற்சியாகத்தான் முடியும். இத்தகைய உயரிய குணங்கள் அவர் சாதாரண மானவரல்லர் என்பதை நிரூபித்தன. அவர் பெரிய மஹான் என்பது அறிந்து ஆயிரக்கணக்கான மக்கள் அவரைத் தரிசிக்குமாறு வந்து கூடலாயினர்.

சுவாமிகள் முற்றுந்துறந்த முனிவராக விளங்கிய போதிலும் தமது உடலை வருத்தி ஒடுக்குவதோ அல்லது பிறருக்குத் துறவறத்தைப் போதிப்பதோ இல்லை. பக்குவ மடைந்தவர்களே ஞானோபதேசம் பெறுதற்கு அருகர் என் பது சுவாமிகளுடைய கருத்துப்போலும். எனவே போகிற வர் வருகிறவர்களை எல்லாம் இழுத்து நீ உபதேசம் பெற்றுக் கொள் என்று சொல்வதில்லை. மற்றும் உலக வாழ்க்கை யில் ஈடுபட்டுள்ள மக்களைக் காட்டிலும் தாம் மிக உயர்ந்த மஹான் என்பதைக் காட்டிக் கொள்ளுகின்றதுமில்லை. மற்றைய மானிடரைப் போலவே தாமும் ஒருவராக உலகில் வாழ்ந்தார். ஆனல் உலக சுகபோகங்களைத் துறந்திருந்தார். மனச்சாட்சியின் கட்டளைகளைச் சிரமேற்கொண்டு வாழ் வதே சீலமும் சிறப்புமுடையதென்பதைப் பிறருக்கு விளக் கும் இலக்கியமாக விளங்கிஞர்.

சுரைக்காய் சுவாமிகள் அன்பே உருவெடுத்த அண்ணல். பெருமிதமான தோற்றம், தண்ணளி பெருகும் உள்ளம்

உடையவர். இடுக்கண் உற்றவருடைய இடரைக் களைவதும் தாழ்வுற்றவர் சோர்வு நீங்கி ஓங்குமாறு துணைபுரிவதுமே அவர் கொள்கை. முக்காலங்களையும் அறியும் திரிகால ஞானியாதலால் அவர் கடந்தவைகளையும் வருகின்றவை களையும் பற்றி ஞானக்கண் கொண்டறிந்து பேசுவதை ஊனக்கண் கொண்டு நோக்கும் மானிடர்கள் இன்னதென் றறிந்து கொள்ள இயல்வதில்லை. சிற்சில சமயங்களில் திடீரென்று சீற்றம் பொங்கியவராய்த் தோன்றுவார். அடுத்த கணத்திலேயே குளிர்ந்த நோக்கோடு குழந்தை போல அமைதி பெற்று விளங்குவார். ஒருகணம் சிரிப்பார், மறுகணம் அழுவார். இந்நிகழ்சிகளின் குறிப்பை எவரால் அறிய இயலும்! அகக்கண் காட்சிகளால் விளைகின்ற பயனைப் புறத்தின் நிகழ்ச்சிகளின் பொருளைப் பகுத்தறிய பரஞான மில்லாதவருக்கு இயலுமோ?

சுவாமிகள் மிக்க சுருசுருப்பான பழக்க வழக்கங் களுடையவர். அடிகள் எங்குச் சென்றாலும் எவ்வளவு தூரமானாலும் நடந்தே கடுவேகமாகச் செல்வது வழக்கம். திடகாத்திர தேகமுள்ள எவ்வளவு பலசாலியானாலும் அவரோடு போட்டியிட இயலாது. தொலைதூரம் நடப்பார்; காடுமேடுகளைக் கடந்து செல்வார்; கட்டைகளைப் பிளப் பார். வண்டிகளில் ஏறுவதில்லை. தமது தண்டுகள், கோடரி, துணிமூட்டை, சுரைக்குடுக்கைகள் ஆகிய அனைத்தையும் தாமே சுமந்துகொண்டு நடப்பார். அவரது போக்குவரவு பெரும்பாலும் நாராயணவரத்திற்கும் நாகலா புரத்திற்கும் இடையில் தானிருக்கும். சுவாமிகள் சமாதி யடைவதற்குச் சில ஆண்டுகள் முன்புதான் சென்னைமா நகரத்திற்கு அடிக்கடி வருதற்குத் திருவுளங் கொண் டருளினார்கள்.

---

# அடிகளாரின் பெருமை புலப்படுதல்

## அத்தியாயம் 2

1875-ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் எஞ்சினீயர் N. இரத்தினசபாபதி பிள்ளையும் அவர் நண்பர்கள் நாராயணசாமி நாயுடுவும் செங்கல்வராய முதலியாரும் எஞ்சினீயருடைய அரசாங்க காரியத்திற்காக நாராயண வரத்தில் தங்கியிருந்தார்கள். மே மாதத்தில் ஒரு நாள் காலை 9 மணிக்குக் கடுமையான வெயிலிருக்கும்போது முதலியார் தெருத் திண்ணையில் உட்கார்ந்திருந்தார். அப்போது, இரண்டு நாய்களைக் கயிற்றில் பிணைத்து அக்கயிற்றை ஒரு கையிலும் மூங்கிற் கழியொன்றை மற்றொரு கையிலும் பிடித்துக்கொண்டு ஒருதுணி மூட்டையைத் தோளில் போட்டுக்கொண்டு தெருவிற் செல்லும் ஒரு வயோதிகரைக் கண்டார். (இந்த மூங்கிற்கழி இப்போதும் முதலியாரிடம் இருக்கிறது. சுவாமிக்குரிய மதிப்புடன் இக்கழியை முதலியார் வழிபாட்டில் வைத்திருக்கிறார்.) அவ்விடத்திலிருந்த சுந்தரசுப்பராயலு நாயுடு முதலியாரைப் பார்த்துத் தெருவிற் செல்லும் பெரியவர் சாதாரண மனிதரல்லர், அவர் ஒரு மஹாத்மா என்று அறிவித்தார். விந்தை நிறைந்த உள்ளத்தோடு பக்திமிக்க முதலியாரவர்கள் அப்பெரியாரைப் பின்பற்றிச் சென்று அவர் செயல்களைக் கவனித்தார். அவர் வீடுதோறும் சென்று உணவு ஏற்றுத் தாம் உண்டு மிகுதியை நாய்களுக்கிட்டார். முதலியார் வீடுதிரும்பி தாம் கண்டதை யெல்லாம் நண்பர்களுக்குப் புகன்றார்.

அன்று பொழுது போயினபின் சுமார் 7 மணிக்கு மூன்று நண்பர்களும் சுவாமிகளிடம் அவர் பெருமையை மேலும் அறிந்துகொள்ளச் சென்றனர். சுவாமிகள் சுந்தர செட்டியார் வீட்டின் முன்புறம் தெருவில் அமர்ந்து "அம்மா, அம்மா," என்று கூப்பிட்டுக் கொண்டிருந்தார். ஒரு கறுப்பு நாய் குரைத்துக்கொண்டே சுவாமியின் அருகில் சென்றது. வழியே செல்பவர்களில் ஒருவர், "இராமசாமி, உன்னிடம் இரண்டு நாய்களிருக்க இந்த மூன்றாவது நாய்க்கு இங்கு என்ன வேலை?" என்றார். சுவாமிகள் முதலியாரைச் சுட்டிக்காட்டி, "இதோ இந்த நாய் சென்னைப்பட்டினத்திலிருந்து வந்திருக்கிறது!" என்று வரவேற்றார். சுவாமிகளின் கருணைக்கு ஏங்கி எதிர்நோக்கி நின்ற முதலியார் தம்மை அவருக்கு அறிமுகப் படுத்திக் கொண்டு தாம் செய்ய வேண்டிய பணி யாதேனுமுளதோ என்று பணிவுடன் கேட்டார். சுவாமி, அருந்துதற்குத் தண்ணீர் வேண்டு மென்றார். உடனே கொண்டுவந்து தந்தார். புகைகுடித்தற்குப் புகையிலை தேவை என்றார். இரண்டுமணி நேரம் களிப்புடன் புகை குடித்துவிட்டுப் படுக்கைக்குச் சென்று தூங்கினார். சுவாமியைக் காணச் சென்ற நண்பர் மூவரும் தமது இருப்பிடம் சென்றனர்.

முதலியாருக்கு மிக்க ஓய்வு உண்டு. சுயேச்சையாக வாழ்க்கை நடாத்தும் நிலைமையுடையவர். சமயப்பற்றும் அளவுகடந்த ஊக்கம் நிறைந்த உள்ளமும் படைத்த அவர் அடிக்கடி அடிகளிடம் சென்று பக்தியுடனும் பணிவுடனும் வந்தித்து வழிபடுவார். ஒரு நாள் சுவாமிகள் அவரைத்தம்முடன் அருகிலிருந்த அடவிக்கு அழைத்துச் சென்றார்கள். அது பயங்கரமான இடம். புதர்களும் செடி கொடிமரங்களும் அடர்ந்து நெருங்கிய இடம். வானுற ஓங்கி வளர்ந்த மரங்களின் விசாலமான கிளைகள் பந்தல் போல் படர்ந்து வானை மறைத்துப் பகலவன் கிரணங்கள்

நுழைவதற்கிடமின்றிச் செய்தன. அதனால் இருண்டிருந்தது. ஆங்கு அச்சம் விளைக்கக் கூடிய அமைதி நிலவியிருந்தது. அவ்விருண்ட அடவியில் முதலியாரை அழைத்துச் சென்ற அடிகளார் இலிங்கம் ஒன்று நிலை நாட்டியுள்ள இடத்திற்குப் போய் இலிங்கத்தை வலம் வந்து கொண்டிருந்தார். பெரியார் பிரதக்ஷணம் செய்து கொண்டிருக்கையில் மெய்சிலிர்த்து நின்ற முதலியார் இருநாய்களைக்கட்டிய கயிற்றைப் பிடித்துக் கொண்டிருந்தார். அப்போது ஓர் அற்புதச் செயல் நிகழ்ந்தது. அண்டையில் நெருங்கியிருந்த நாய்கள் திடீரென ஐம்பது கஜதூரத்திற்கப்பால் நின்று குரைக்கின்ற காட்சி புலனாயிற்று. அடுத்த விநாடியில் அவைகள் அருகிருக்கக் கண்டார். மறுகணத்தில் மறுபடியும் அவைகள் முன்போல் அப்பாலிருக்கக்கண்டார்! மெய் மறந்து விதிர்விதிர்த்து நின்ற முதலியாரைச் சுவாமி விளித்து இலிங்கப்பிரதக்ஷணம் செய்யுமாறு கட்டளையிட்டார். சுவாமிகள் கட்டளையை நிறைவேற்றிய பின்னர் இருவரும் நாராயணவரம் திரும்பினர். அடியவருக்கு அடிகள்பால் அளவில்லாத நம்பிக்கை ஏற்பட்டது.

அடிகளுக்கு அமுதுபடைக்க வேண்டுமென்ற பேராவல் செங்கல்வராய முதலியாருக்கு இருந்தது. ஆனால் சுவாமிகள் சாப்பிட இணங்கவில்லை. சுவாமிகளுக்கென்று ஒவ்வொரு நாளும் சிறப்பான வகையில் சமையல் நடைபெறும். ஆனால் ஒவ்வொரு நாளும் முதலியாருக்கு ஏமாற்றம்தான். ஒரு நாள் அயல் வீட்டார் துணையினால் சுவாமிகளை 'எஞ்சினீயரும் அவர் நண்பர்களும் தங்கியிருந்த வீட்டிற்கு அழைத்து வந்தார்கள்.' அங்கு வந்தவுடனே, சுவாமிகள் முதலியாரை நோக்கித் தம்மை அங்குவரவழைத்த காரணத்தைக் கேட்டார். பக்தியோடு அடிபணிந்து வணங்கி நின்ற முதலியார் அடிகள் அங்கு அன்னம் புசித்தருள வேண்டுமெனப் பிரார்த்தித்தார். புன்னகை பூத்த பெரியார், "ஓ! நீர் இப்

போது எனக்கு உணவளிப்பீர், பிறகு கழுத்தை அறுப்பீர்!" என்றார். அவ்விதக்கருத்துத் தமக்கு எள்ளளவுமில்லை என்று வணங்கி யுரைத்து மறுமுறையும் மன்றாடி வேண்டிக்கொண்ட அவ்வடியார்பால் சுவாமிகள் இரக்கங் கொண்டு சில கவளங்கள் வாங்கிப் புசித்தார். அன்று முதல் ஒவ்வொருநாளும் சுவாமிகள் அங்குச்சென்று சாப்பிட்டுவந்தார். திடீரென்று ஒரு நாள் சுவாமிகள் அவர்களை நோக்கி, "நான் கிழக்கு நோக்கிப் பிரயாணஞ் செய்கிறேன், நீங்கள் மேற்கு நோக்கிச் செல்லுங்கள்." என்று புகன்றார். அதன் பொருள் அப்போது புலனாகவில்லை. ஆனால் இரண்டு மூன்று நாட்களில் எஞ்சினீயரைச் சித்தூருக்கு மாற்றியதாக அரசாங்கக் கட்டளை வந்தது. வருவதை யறிந்து முன்னர் மொழிந்த மஹாத்மாவின் தீர்க்கதரிசன மொழிகள் மெய்யாயின. எஞ்சினீயர் இரத்தின சபாபதி பிள்ளையும் இருநண்பர்களும் உடனே சித்தூருக்குப் புறப்பட்டனர். பிள்ளையவர்கள் தருணம் வாய்த்தபோதுதான் சுவாமியைத் தரிசித்து வழிபட வருவார். முதலியாரும் நாராயணசாமி நாயுடுவும் அடிக்கடி நாராயணவரம் சென்று சுவாமியை வணங்கி வருவார்கள். இவ்விருவரில் முதலியார் பெரும்பாலும் சுவாமியைப் பிரியாதிருப்பது வழக்கம். அடிகள் இயற்றிய அற்புதச் செயல்களையும் பின்னர் வரும் நன்மை தீமைகளை முன்னரே அறிவித்த பொய்யா மொழிகளையும் கண்கூடாகக் கண்டறிந்தவர் முதலியார். அவைகள் இதைத் தொடர்ந்து பின்வரும் பக்கங்களில் விவரிக்கப் பெறும்.

---

## அற்புதச் செயல்கள் (முதற்பகுதி)

### அத்தியாயம் 3

சுவாமிகள் இயற்றிய அற்புதச் செயல்கள் அளவற்றவை. ஒவ்வொன்றும் ஆச்சரியத்தை விளைக்கின்றது. கழைக்கூத்தன் நடுத்தெருவில் காட்டும் ஜால வித்தைகளையும் நாடு சுற்றும் பைராகிகளின் மதவெறி பிடித்த மாயச் செயல்களையும் போன்றவை அல்ல நமது மஹானின் மாண்புமிக்க திருவிளையாடல்கள். தருக்க ஆராய்ச்சியாளரின் நிர்மாணங்களையும், விஞ்ஞான அறிஞரின் முடிந்த முடிபுகளையும் போன்ற சிறப்பு வாய்ந்தவை இத்திருவிளையாடல்கள். இவைகள் வெறும் கட்டுக்கதைகள் என்று எவரும் புறக்கணிக்க இயலாதவை யாகும். சுவாமியின் பரம வல்லமையும், மிக நுண்ணிய மனோ சக்தியும், துன்பமும் துயரமும் உற்றோர் பால் அவர் காட்டும் உண்மையான அன்புப் பரிவுகளிலிருந்து விளக்கமாயின. அவரது அன்பு எங்கும் பரந்தது. மக்களிடத்தும் செல்லும், மாக்களிடத்தும் செல்லும் அவர் அருள். மன்பதை புகழும் மானிடர் மாண்டாலும், விண்ணிற் பறக்கும் புள்ளினம் வீழ்ந்தாலும், இருவகை உயிர்களிடத்தும் ஒரே விதமான இரக்கங்காட்டும் பண்பு வாய்ந்தவர் இப்பரம புருஷர்.

ஒருநாள், வெயில் மிக்க உச்சி வேளையில் நாராயணவரத்திற்குப் பன்னிரண்டு மைல் அப்பாலுள்ள தென்னம்பேடு கிராமத்தில் பிறர் போக்குவரவு இல்லாத ஒரு புளிய மரத்தடியில் சுவாமி அமர்ந்து புகை குடித்துக் கொண்டும் பேசிக்கொண்டுமிருந்தார். அச்சமயம் திடீரென ஒரு கிழவி தன்பேத்தியை அழைத்துவந்து தன் விதியை நொந்து புலம்பி

ளுள். நெடுநாளாக அப்பெண் காய்ச்சலில் வருந்திக்கொண்டிருந்தாள். வைத்தியர்கள் கைவிட்டார்கள். எலும்புக்கூடு போலிருந்த அப்பெண் மூச்சு விடவும் இயலாது திணறிக்கொண்டிருந்தாள். சுவாமி அந்த நோயாளியிடத்து இரக்கங் கொண்டு அவளை ஆசீர்வதித்து, பின்னர் தரையிலிருந்து சிறிது மண்ணை எடுத்துக் கொடுத்து அப்பெண்ணுக்கு அதை மருந்தாக அளிக்கச் செய்தார். அவ்வாறு செய்த சில நாட்களுக்குள் நெடுங்காலம் பீடித்திருந்த பிணி ஆச்சரியமாய் அகன்றது. ஓரே மாதத்திற்குள் அப்பெண் நல்ல உடல்நிலையை எய்தலானுள்.

* * *

ஓர் இரவு செங்கல்வராய முதலியார் கொசுக்கடி தொந்தரவு பொறுக்கலாற்ருது படுக்கையில் எழுந்து உட்கார்ந்து என்ன செய்வதென்று புரியாமல் இருந்தார். இவர் இவ்வாறு வருந்துகிருர் என்பதைக் கேட்ட சுவாமி, "ஓ, பாவி அப்படியா செய்தான் !" என்று சொல்லிக்கொண்டே திண்ணையில் படுத்துக் கால்மேல் கால்போட்டு வலது கையை அப்புறமும் இப்புறமும் வீசிப் பிறகு தரையில் கைபடாமல் ஆகாயத்தில் ஒரு வட்டமான கோட்டை வரைந்து முதலியாரைப் படுக்கும்படி கட்டளையிட்டார். கொசுக்கள் மாயமாக மறைந்தன. கொசுக் கடியால் ஏற்பட்ட உபாதை உடனே விந்தையாக நீங்கிற்று. முன்னேரத்தில் தூக்கங் கெட்டிருந்த பக்தர் ஆழ்ந்த நித்திரை எய்திஞர்.

* * *

இது நிகழ்ந்த சில நாட்களுக்குப்பின் சுவாமி, முதலியாரை விளித்து, "அவன் சாப்பாடின்றி வாடுகிருன். நாம் அங்குச் சென்று வேண்டியதைச் செய்வோம், வா," என்றழைத்தார். இருவரும் புறப்பட்டார்கள். சில வீதிகள் வழியே சென்று கொண்டிருக்கையில் திடீரென ஒரு வீட்டின் முன்பு நின்று "இந்த இடத்திற்குத்தான் நான் வர

விரும்பியது" என்று சுவாமி சொன்னார். அங்கு ஒருவரும் இல்லை. ஒரு எருது மாத்திரம் தெருவாயிலுக் கருகில் கட்டியிருந்தது. சுவாமி இந்த எருதுக்காகத்தான் அங்குச் சென்ருர். முதலியார் அந்த வீட்டில் நுழைந்து வீட்டுக்காரனை அழைத்து வந்தார். அவன் தன் மாடு ஒன்றன்பின் ஒன்ருக ஏதாவது ஒரு நோயினுல் கஷ்டப்பட்டு வருவதால் எதையும் தின்பதில்லை, தண்ணீரும் குடிப்பதில்லையென்று முறையிட்டான். சுவாமி மும்முறை அம்மாட்டைச் சுற்றிவந்து பின்னர் ஏதாவது சிறிது உட்கொள்ளுமாறு கட்டளையிட்டார். அண்டையிலிருந்த அனைவரும் ஆச்சரியப்படத் தக்கவாறு அந்த மாடு உடனே சிறிது வைக்கோல் தின்று தண்ணீர் குடித்தது. அந்த மாட்டிற்காக ஏன் அவ்வளவு கவலை சுவாமி கொண்டார் என்ற ஐயம் முதலியாருக்கு ஏற்பட்டது. முற்பிறப்பில் அது ஒரு வைணவ பக்தனுகத் துவாதச நாமங்களோடும் துளசி மணியோடும் இருந்து பிறப்பு, இறப்பு என்னும் சுழலில் இந்த நிலைமைக்கு வந்து விட்டதைக் குறித்துச் சுவாமி வருத்தமுற்ருர்.

* * *

இம்மஹானின் மகாத்மியம் நாடெங்கும் பரவிற்று. பல்வேறிடங்களிலிருந்து சுவாமியின் புகழைக் கேள்வியுற்ற மக்கள் கூட்டம், கூட்டமாக வந்து அவரைத் தரிசிக்கலாயினர். ராஜகட்டியின் வேதனையால் அளவில்லாத துன்பமுற்ற ஒரு வண்ணுன் அங்கு வந்தான். சுவாமியின் திருவடியில் வீழ்ந்து வணங்கினுன். புளியை அரைத்து கழுத்திலும் முதுகிலுமுள்ள பிளவையில் தடவி விட்டால் ஆறிவிடும் என்று சொல்லி சுவாமி அவனை ஆசீர்வதித்து அனுப்பினுர். அவன் இரண்டு வாரத்தில் பூரண தேக செளக்யமடைந்து எப்போதும் போலத் தனது தொழிலைச் செய்வதற்கு ஏற்ற தோள் வலிமையோடு விளங்கினுன்.

* * *

மற்ருெரு முறை செங்கல்வராய முதலியார் சுவாமியிடம் சென்றபோது அவருடனே சுவாமியைத் தரிசிப்பதற்காக சுப்பராய முதலியார் என்பவர் சென்ருர். அவ்விருவரும் சுவாமி செல்லுமிடங்களெல்லாம் சென்று கடைசியில் ராமகிரி மலை அடிவாரத்தில் உள்ள சிவன் கோயிலுக்குச் சென்ருர்கள். சுப்பராய முதலியாருக்கு இடுப்பில் சுளுக்கிக் கொண்டதால் தாங்க முடியாத வலி இருந்தது. அதைப் பொறுத்துக் கொண்டே அவர் அவ்வளவு தூரம் சென்ருர். அந்தத் தருணத்தில் தமது கால்களையும் இடுப்பையும் பிடிக்கும்படியாகச் சுவாமி சுப்பராய முதலியாருக்குக் கட்டளையிட்டார். தமது வலியைத் தாங்க முடியாத சுப்பராய முதலியார் சுவாமியுடைய கட்டளையை நிராகரிப்பதா அல்லது தமது நோயைப் பொருட்படுத்தாது பொறுமையுடனும் தைரியத்துடனும் கட்டளையை நிறைவேற்றுவதா என்று சிந்தனையில் ஆழ்ந்தார். இவ்வாறு அவர் சிந்தனையிலாழ்ந்து தாமதித்து இருப்பதைக் கண்ட செல்கல்வராய முதலியார் சுவாமி கட்டளையை உடனே விரைந்து நிறைவேற்றுமாறு சுப்பராய முதலியாரைத் தூண்டிஞர். அவருடைய கட்டளையில் ஓர் அந்தரங்கமான குறிப்பு இருக்குமாகையால் அதை நிறைவேற்றுவது நலம் என்று எடுத்துக் காட்டிஞர். உடனே, சுப்பராய முதலியார் தமக்கிட்ட பணியைச் சிரமேற் கொண்டார். அதனல் விளைந்த பயன் அற்புதமானது. சுவாமியின் கை கால்களைப் பிடித்துவிட்டு சுப்பராய முதலியார் தம் படுக்கைக்குச் சென்ற உடனே அவருக்கிருந்த வலி அனைத்தும் இருந்த இடம் தெரியாது அவரைவிட்டு அகன்றது.

* * *

திருவாளர்கள் ஆராவமுத நாயுடு, K. பார்த்தசாரதி நாயுடு ஆகிய இருவரும் மதிப்பிற்குரிய அரசாங்க உத்தியோகஸ்தர்கள். அவர்களிருவரும் சுவாமியிடத்தில்

பரமபக்தி உடையவர்களாயிருந்தார்கள். அவர்கள் தனி வந்தர்களாயிருந்தாலும் அவர்களது பக்தி மேலீட்டால் நாட்டுப்புறங்களில் நெடுந்தூரம் பிரயாணம் செய்வதால் ஏற்படும் இன்னல்களை ஒரு சிறிதும் பொருட்படுத்தவில்லை. அவர்களிருவரும் ஒருமுறை செங்கல்வராய முதலியாருடன் சேர்ந்து சுவாமியைத் தொலை தூரத்திலுள்ள ஒரு கிராமத்திலிருந்து நாராயணவரத்திற்கு அழைத்து வந்தார்கள். சுவாமி வண்டியில் ஏறும்பொழுது சிறிது மழை பெய்யத் தொடங்கிற்று. அப்போது ஒரு குரல் கேட்டது. "அம்மா, குழந்தைகள் புறப்படுகின்றன. அவைகளை நனைக்காதே" என்ற சொற்கள் காதில் விழுந்தன. எந்தத் திசையிலிருந்து அந்தச் சொற்கள் கிளம்பினவென்று அவர்கள் அறிந்துகொள்ள இயலவில்லை. ஆனால் திரு. முதலியார் அவர்கள் வண்டியின் பின்னால் நடந்து செல்ல மற்றைய இருவரும் சுவாமியுடன் வண்டியில் அமர்ந்திருந்தனர். அப்போது ஒரு வியக்கத்தக்க அற்புதம் நிகழ்ந்தது. அருகில் அவர்களைச் சுற்றி எல்லாப் பக்கங்களிலும் பெருமழை பெய்து கொண்டிருந்தது. பாதையின் இரு திசைகளிலும் போகின்றவர்களும் வருகின்றவர்களும் நனைந்திருந்தார்கள். ஆனால் வண்டி சென்று கொண்டிருந்த இடத்திலும் முதலியார் நடந்து சென்ற இடத்திலும் ஒரு துளி மழைகூட விழவில்லை. இந்த ஆச்சரியமான நிகழ்ச்சியை முதலியார் அவர்கள் மற்றைய இருவருக்கும் சுட்டிக் காட்டினார். நாராயணவரம் செல்லும் வரையிலும் சுற்றிலும் விடா மழையாகப் பெய்து கொண்டிருந்தும் வண்டியின் மேலும் வண்டியின் பின் நடந்து சென்ற முதலியார்மீதும் ஒரு துளியும் விழாதிருந்ததைக் கண்ட அவர்களது வியப்பிற்கு அளவே இல்லை. அந்த அற்புதம் சுவாமியுடைய திருவருளால் நிகழ்ந்தது என்பதை அவர்கள் திண்ணமாக உணர்ந்தார்கள்.

* * *

ஒரு நாள் சுவாமியும் செங்கல்வராய முதலியாரும் நாராயணவரத்திற்குப் பதின்மூன்று மைல் அப்பாலுள்ள ஒரு சிவாலயத்திற்குச் சென்றார்கள்; அவ்விடத்தில் சாப்பாடு செய்யும்படி கட்டளை இட்டார்கள். இலைபோடும் பொழுது இன்னொரு இலை தயாராக வைத்திருக்கும்படி யாகச் சுவாமியிடமிருந்து உத்திரவு பிறந்தது. அதன் காரணம் இன்னதென்று அறியாவிட்டாலும் முதலியார் மறுமொழி கூறாமல் கட்டளையை நிறைவேற்றினார். இரு வரும் உணவு கொண்டார்கள். உண்டபின் சிறிது உறங் கத் தொடங்கியபோது யாரோ இருவர் ஒரு நோயாளியைச் சுவாமிமுன் கொண்டுவந்துவிட்டு அந்நோயாளி சென்ற எட்டு மாதங்களாக இடைவிடாத காய்ச்சலால் பிடிக்கப் பட்டு ஆகாரமும் உட்கொள்ளாமல் பிழைக்கிறதே கஷ்ட மாய் இருக்கிறதென்று சொன்னார்கள். சுவாமி முதலி யாரைக் கூப்பிட்டு மிகுந்திருந்த சோற்றை ஏற்கனவே வைத்திருந்த இலையில் அந்நோயாளிக்குக் கொடுத்து அதில் அன்று செய்திருந்த பீர்க்கங்காய்க் குழம்பை விடும்படிச் சொன்னார். நோயாளியைக் கொண்டு வந்தவர்கள் ஒரு பிடி சோறுகூட அவரால் உட்கொள்ள முடியாதாகையால் அதுவேண்டா மென்று தடுத்தார்கள். எனினும், சுவாமி அதைக் கொடுத்தே தீரவேண்டுமென்று சொன்னார். ஆவி உடலை விட்டுப் பிரிகின்ற நிலைமையில் இருப்பதைப்போன் றிருந்த நோயாளியைப்பார்த்துத் தனக்கு வேண்டிய அளவு திருப்தியாகச் சாப்பிடுமாறு பணித்தார். பிறர் எதிர் பார்த்ததற்கு மாறாக அந்நோயாளி பெரும் பசியுள்ளவரைப் போல நன்றாகச் சாப்பிட்டார். இந்தச் சம்பவத்தோடு அவரது தீராத நோய் அவரைவிட்டு விலகிற்று. அந் நோய்க்கு இரையாகி இருக்கவேண்டிய அவரது வாழ்வு ஒரு முழு மாறுதலை அடைந்தது.

* * *

பின்னர் ஒரு நாள் மஹாத்மாவானவர் தம்முடைய மூட்டைகளைக் கட்டிக்கொண்டு செங்கல்வராய முதலியார், நாராயணசுவாமி நாயுடு, வயது முதிர்ந்த வேறொருவர் ஆகிய மூவருடன் நாராயணவரத்திலிருந்து புறப்பட்டார். அவர்கள் எங்குச்செல்கின்றார்கள் என்று அவர்களுக்கே தெரியாது. சுவாமி அவர்கள் அனைவரையும் ஒரு மலையடிவாரத்திலுள்ள குகையின் அருகில் அழைத்துக்கொண்டு போய் உட்காரவைத்தார். பக்கத்தில் ஒரு குளம் இருந்தது. அதன் எதிரில் ஒரு பரந்தவெளி காணப்பட்டது. அவர்களனைவரும் அவ்விடத்தில் அன்றிரவு உணவு அருந்தி படுத்துக்கொண்டார்கள். அவ்விடத்தில் ஒருவருடைய நடமாட்டமும் இல்லாது ஏகாந்தமாக இருந்தது. அத்தனிமை அச்சம் விளைவிக்கக்கூடியதாயும் உண்மையிலேயே ஆபத்தான இடமாயும் தோன்றிற்று. இரவு ஒன்பது மணி இருக்கும். மானிட நடமாட்டமே அவ்விடம் ஒன்றும் தோன்றவில்லை. ஆனால் காட்டு மிருகங்களின் முழக்கமும் பயங்கரமான ஓசைகளும் கிளம்பின. பார்க்குமிடமெல்லாம் வெண்ணிலாவின் தண்ணொளி வெள்ளித்திரைகள்போல் எங்கும் பரந்து கிடந்தது. பயங்கரமான அந்த இரவில் நெஞ்சு கலங்கி இருந்த அவர்கள் அந்நிலவைத் தவிர வேறொன்றையும் காணவில்லை. விழித்துக்கொண்டிருந்த அவர்கள் ஒருவரோடொருவர் பேசிக்கொண்டிருந்தபோது குளத்தின் மற்றொருபக்கமாக ஒரு புலி வந்து தண்ணீர் குடித்துத் தாகத்தைத் தீர்த்துக்கொண்டு நிலத்தின் மேல் படுத்திருந்தது. அவர்களோடு வந்திருந்த வயோதிகர் மிகவும் அஞ்சி நடுக்கமுற்றார். கண்களில் நீர் ததும்பியது. அனைவருக்கும் முடிவுகாலம் நெருங்கிவிட்டதென்று நினைத்தார். "சுவாமி! இது என்ன விந்தை! எங்கள் மனோவாக்குக் கெட்டாத தங்களது திருவுள்ளத்தை விளங்கிக் கொள்ள முடியாத போக்கில் நாங்கள் இவ்வாறு சிக்கி வழி தெரி

யாது தடுமாற்றமுறச் செய்யலாகாது. அதோ, புலி வந்து விட்டது! அது படுத்துக்கொண்டிருக்கிறது; கண்ணிமைப் பொழுதில் எங்கள் மேல் ஒரே பாய்ச்சலாகப்பாய்ந்து எங் களைச் சின்ன பின்னமாகக்கிழித்துப்போடும்! தங்களுக்கு ஒரு ஆபத்தும் வரப்போவதில்லை. இது நியாயந்தானு? இந்த அநீதியை எங்களுக்கு விளைவிக்கலாமா? எல்லாம் அறிந்த தேவரீர் இந்தப் பேராபத்திலிருந்து எங்களைத்தப்புவிக்க ஒரு வழி செய்யவேண்டும். இது ஒரு விளையாட்டன்று என்று இவ்வாறெல்லாம் நாக்குழறலுடன் அம் முதியவர் முறையிட்டார். அவர் மிகவும் கலக்கமுற்று ஒரு பைத் தியக்காரனைப்போல் பிதற்றிக்கொண்டிருந்தார். சுவாமி அவரைக்கடிந்து மௌனமாய் இருக்கச்செய்தார். எனினும், அப்பெரியவர் பெருமூச்செறிந்து நெஞ்சு நடுக்குற்று, கண்ணீர் சொரிந்தவண்ணம் இருந்தார். அரைமணி நேரத் தில் புலி எழுந்து மெதுவாக வந்தவழியே அப்பேரடவியில் சென்று மறைந்தது. ஆனால் அதன் பிறகு ஒரு கரடி அங்கு வந்து குளத்தில் தண்ணீர் குடித்துவிட்டு இவர்களையெல் லாம் உற்று நோக்கியது. உள்ளம் பண்பட்டுப் பரிபக்குவ மடையாத அம்முதியவர் மறுமுறையும் மார்பிலறைந்து கொண்டும் தலையைச் சொரிந்துகொண்டும் இருப்பதைக் கண்ட சுவாமி திரும்பவும் ஓர் எச்சரிக்கை செய்தார். முதியவர் அதே நிலையிலிருந்தால் காட்டு மிருகங்கள் வந்து அவர்களனைவரையும் விழுங்கிச் செல்லும் என்று அச் சுறுத்தினர். வெள்ளி முளைக்கும் வரையிலும் முதலியார், நாயுடு ஆகிய இருவரும் அம்முதியவருக்குத் தைரிய மூட்டிக் கொண்டிருந்தனர். பொழுது விடிந்ததும் அனைவரும் நாராயணவரம் திரும்பினர். சுவாமி இவ்வித பயங்கர சம்ப வம் நிகழச் செய்ததின் காரணம் ஒருவருக்கும் புலப்பட வில்லை. ஆனால் அச்சம்பவம் அம்மஹானின் பெருமையை ஐயந்திரிபற உணர்த்தியது.

## அற்புதச் செயல்கள் (இரண்டாம் பகுதி)

### அத்தியாயம் 4

செங்கல்வராய முதலியார் ஒரு முறை நாராயணவரம் சென்ற பொழுது சுவாமி அவ்விடத்தில் இல்லை. எட்டு மைலுக்கு அப்பாலிருந்த தும்பூர் கிராமத்திற்குச் சென்றிருந்தார். முதலியார் திரு. குப்புசாமி செட்டி M.A. அவர்களோடு அவ்விடத்திற்குச் சென்று இரண்டொரு நாட்கள் தங்கினர். பிறகு செட்டியார் தமது உத்தியோகத்திற்குச் செல்வதற்காகச் சுவாமியிடத்து உத்திரவு கேட்டார். சுவாமி, அவர் செல்ல அனுமதிக்கவில்லை, பிறகு செல்லலாம் என்று சொன்னர், செட்டியார் என்ன செய்வது என்று தெரியாமல் இருதலைக்கொள்ளி எறும்புபோல் திகைத்தார். தடுமாற்றமடைந்த செட்டியாரைப்பார்த்து முதலியார் அன்றிரவு ரெயிலில் போகலாமென்று ஆறுதல் சொன்னர். செட்டியார் தத்துவ சாஸ்திரத்தில் M. A. பட்டம் பெற்றவர். சுவாமியின் தெய்வீக சக்தியில் பெரிதும் நம்பிக்கை உடையவராதலால் அவர்களது கட்டளையை மீறவில்லை. பொறுமையோடு காத்திருந்தார். இரவு பன்னிரண்டு மணி ஆயிற்று. தெருவில் வண்டி காத்திருந்தது. முதலியார் அதிக வினயத்தோடு நாராயணவரத்திலிருந்து அவர்களுடன் சுவாமியையும் புறப்படுமாறு கேட்டுக்கொண்டார். இவ்வித உபாயத்திலைாவது செட்டியாருடைய கோரிக்கையை நிறைவேற்றலாம் என்பது அவரது எண்ணம். சுவாமி புறப்படுவதற்கு இணங்கிவிட்டார். ஓர் ஆற்றின் அருகில் செல்லும் போது சுவாமி ஆற்றைக் கடக்க மறுத்து அவ்விடத்திலேயே நின்று விட்டார். செட்டியார் மேலும் தாமதிக்காமல் ரெயில் நிலையத்தை

நோக்கி விரைந்து சென்றார். செங்கல்வராய முதலியார் சுவாமியோடு தங்கிவிட்டார். மறுநாள் காலையில் மஹாத்மாவும் முதலியாரும் ஆற்றங்கரையில் சிற்றுண்டி கொண்டார்கள். அத்தருணத்தில் திடீரென்று அழகுமிக்க இரு வனிதையர் அவர்கள் முன்வந்து நின்று மெல்லிய இனிய குரலில் அகங்குழையுமாறு சுவாமியை நோக்கி ஒரு கைப் பிரசாதம் அருளிச் செய்யவேண்டுமாறு வேண்டிக்கொண்டார்கள். சுவாமியை வலம் வந்து அவரது திருவடிகளை வணங்கி எழுந்து நின்றார்கள். அப்போது சுவாமி பிரசாதம் வழங்கினர். அதுகாறும் வேறோர் இடத்தில் கருத்தைச் செலுத்தியிருந்த முதலியார் மங்கையர் நின்ற திசையை நோக்கிப் பார்த்தார். ஆனால் அங்கு ஒருவரும் இல்லை. இரண்டொரு நிமிஷங்கள் தாம் முதலியார் சிந்தை வேறிடத்தில் சென்றிருந்தது. அதற்குள்ளாக அவர்கள் கண்ணுக்குத் தெரியாமல் மறைந்த மாயம் என்ன என்று அவருக்குப் புலப்படவில்லை. அவர்கள் இருந்த இடம் ஓர் வெட்ட வெளி. மறைக்கக்கூடிய மரங்களாவது புதர்களாவது அவ்விடத்தில் இல்லை. சுவாமிகளை நோக்கி எழில்மிக்க அவ்விரு மங்கையர் யாவர் என்று வினவினர். "அவர்கள் யாரோ இருவர். அவர்களைப்பற்றி உனக்கென்ன கவலை?" என்று புன்சிரிப்போடு சுவாமி பதிலளித்தார். அதன் பிறகு தாம் வந்த வண்டி எங்குச் சென்றது என்று சுவாமி கேட்டார். வண்டி நாராயணவரம் சென்றிருக்கிறது என்று முதலியார் கூறினர். அதைக்கேட்ட மஹாத்மா, "பார், அவன் உடனே வந்து விடுவான் என்றார்." அவ்வாறே குப்புசாமி செட்டியார் மூன்று நாளில் நாராயணவரம் திரும்பியதைக்கண்டு முதலியார் வியப்புற்றார். சுவாமி உத்திரவின்றிச் சென்றதற்காகத் தமது மனச்சாட்சி உறுத்திக் கொண்டிருந்ததால் தாம் பெற்ற விடுமுறை நாளில் சுவாமியிடம் திரும்பிவந்ததாகக் கூறினர்.

* * *

ஓர் இரவு சுவாமி உறங்கிக்கொண்டிருக்கும்போது கார்வேட் நகர ராஜாவினுடைய நெருங்கிய உறவினர் ஒருவர் வந்து அவர் விழிக்கும்வரை காத்திருந்து பின்னர் அவரடிபணிந்து தாம் கொண்டு வந்திருந்த ஆரஞ்சுப் பழங் களைச் சமர்ப்பித்தார். ஆனல் சுவாமி சீற்றம் கொண்டு கண்களில் தீப்பொறிபறக்கவும் கால்கள் தரையைத் தாக்கவும் அவர் அளித்தபழங்களை ஏற்கமுடியாதென்று மறுத்துவிட்டார். வந்தவர் முதலியாரைப்பார்த்து எப்படி யாவது சுவாமியின் மனத்தை மாற்றுமாறு வேண்டிக் கொண்டார். பயில்துத்தத்தினல் மருந்து செய்யும் முறை களைப்பற்றிச் சுவாமியிடம் அறிந்துகொள்ள வேண்டு மென்பது அந்தத் தனவந்தரின் நோக்கம். அநேக வைத்தியர் களின் துணையைக் கொண்டு அவர் பன்முறை முயன்று பார்த்தும் பயன் ஒன்றும் இல்லை. இப்பொழுது சுவாமி அவரது வேண்டுகோளுக்குச் செவிசாய்க்காது பழங்களைப் பெற மறுத்தது மன்றி முதலியாரும் அவைகளைப் பெற லாகாது என்று கட்டளையிட்டார். பரமபக்தரான முதலியார் சுவாமியின் கட்டளையை மீறவில்லை. ஆனல் திண்ணையில் வீற்றிருந்த சுவாமியின் எச்சரிக்கையை அவ்வீட்டுக் குரியவர் புறக்கணித்து அப்பழங்களைப் பெற்றுத் தமது மக்களுக்கெல்லாம் வழங்கினர். அதன் பயனுகச் சில நிமிடங்களில் எல்லோரும் தாங்கொணுத குளிர்காய்ச்சலால் பீடிக்கப்பட்டார்கள். பேதைமைமிக்க அவ்வீட்டு முதலாளி லக்ஷாதிபதியின் பொருளை மதித்தனரே ஒழிய சுவாமியின் அருள் திறனை உணர்ந்தபாடில்லை. அதனல் அவர் தமது மடமையைக் கருதி மிகவும் வருந்த நேரிட்டது. சுவாமியை அணுகுவதற்குத் தைரியமில்லை. ஆதலால் தமக்காக முதலியாரைப் பரிந்து பேசுமாறு வேண்டினர்.

துன்புற்ற மக்களிடத்து இரக்கங்கொண்டு முதலியார் சுவாமியிடம் சென்று விண்ணப்பித்தார். அப்போது அம்மஹான் புன்னகை புரிந்து " ஆகாத கனியை அருந்தியதால் அல்லலுக்கு ஆளாயினர் " என்று கூறிப் பின்னர் ஒன்றும் சொல்லாமல் மௌனம் சாதித்தார். அனைவரும் மஹாத்மா உணவு கொள்ளும் வரையில் பொறுமையோடு காத்திருந்தனர். சுவாமி சாப்பிடும்போது பிணியுண்ட பிள்ளைகள் அனைவரையும் அழைத்து ஒவ்வொரு கைப் பிரசாதம் வழங்கினார். அதனை உட்கொண்ட அப்பிள்ளைகள் அனைவரும் கொடிய நோயினின்றும் விடுதலை யடைந்து முழுநல மெய்தினர்.

* * *

சென்னையிலிருந்து ஒவ்வொரு கிருத்திகைக்கும் வழக்கமாகத் திருத்தணிகைக்குப் போய்க்கொண்டிருந்த ஒருவரைப் பற்றிய புதுமையான கதை ஒன்று உண்டு. அவர் மிக்க சமயப்பற்று உள்ளவர். ஆனால் சில சமயங்களில் அவர் சமயப்பற்று அளவு கடந்து தலைகீழான நடத்தைக்குச் செலுத்தும். அவர் திருத்தணிகைக்குச் செல்லும் போதெல்லாம் சடையம்மாள் என்னும் ஒரு வேதாந்தியினுடைய வீட்டில் தங்குவது வழக்கம். ஒருமுறை அவர் அங்குச் சென்றிருந்தபோது அவ்வம்மையார் நாராயணவரம் போயிருந்ததாகக் கேள்வியுற்றார். அவர் சென்னைக்குத் திரும்புவதற்குள் அவ்வம்மையார் நாராயணவரத்திலிருந்து வந்து விட்டார். நாராயணவரத்தில் சுவாமியைத் தரிசித்ததைப் பற்றியும் அவருடைய அற்புத சக்தியைப் பற்றியும் அவ்வம்மையார் விரித்துரைத்தபோது இவருடைய உள்ளம் கவர்ச்சியுற்றது. சுவாமியைத் தரிசித்து மறுமைக்குரிய ஆத்மஞான உண்மைகளையெல்லாம் அடைந்துவிடவேண்டு

மென்ற எண்ணத்தால் தூண்டப் பெற்றார். உடனே நாராயணவரத்திற்கு விரைந்து சென்று சுவாமியைத் தரிசித்து அவர் சாதாரண மனிதர் அல்லர் என்று நன் குணர்ந்து கொண்டார். சுவாமியுடைய அந்தரங்கக் காரியங்களைக் கூர்ந்து கவனித்துக் கொண்டிருந்தார். சுவாமி போகின்ற இடமெல்லாம் அவரது நிழல்போல் பின் தொடர்ந்து சென்றார். சுவாமி ஆற்றுப்பக்கம் சென்று தாம் கழித்த மலத்தை ஒரு நாகதாளிபுதரில் எறிந்துவிட்டார். அவரைப் பின் தொடர்ந்து சென்ற சென்னைவாசி சில மரங் களின் பின் ஒளிந்து நின்று நிகழ்ந்த அனைத்தையும் நோக்கிக்கொண்டிருந்தார். அவர் எறிந்தபொருள் மகத் துவம் வாய்ந்த தென்று நினைத்து அதில் ஒரு பகுதியை உட் கொண்டு மெதுவாக அவ்விடத்தைவிட்டு அகன்றுவிட்டார். அவர் சென்னைக்குத் திரும்பியபோது அவரது சுற்றத்தார் களும் நண்பர்களும் அவர் பைத்தியக்காரராக மாறியிருப் பதைக் கண்டார்கள். அவருடைய நடவடிக்கைகள் தலை கீழாக மாறிவிட்டன. அவருடைய மூளை மிகவும் குழப்பம் அடைந்திருந்தது. நல்லொழுக்கமும் நாகரிகப் பழக்கமும் அவரைவிட்டகன்றன. மருந்து முதலிய எவ்வித சிகிச்சை யும் பயனளிக்கவில்லை. சில சமயங்களில் அவர் தன் உணர்வு பெற்றபோது, சுவாமியின் கட்டளையை மீறிய தைப்பற்றியும் அதனால் அம்மஹானின் சினத்திற்குப் பாத்திரமானதைப்பற்றியும் நண்பர் ஒருவரிடத்தில் வெளிப் படுத்தினார். இதை அறிந்த அனைவரும் அவர் திரும்பவும் நாராயணவரம் சென்று சுவாமியின் துணையை நாட வேண்டுமென்று உரைத்தார்கள். அவரை நாராயணவரத் திற்கு அழைத்துச் சென்றார்கள். அவரைக்கண்ட மஹாத்மா அளவற்ற சீற்றம் கொண்டு அந்தக்கணமே அந்தமுட்டாளை அப்புறப்படுத்த வேண்டுமென்று கட்டளை யிட்டார். பிழை செய்து பிணியுற்ற அப்பித்தர் உடனே

சென்னைக்குத் திரும்பவேண்டியதாயிற்று. சிலமாதங்களாகியும் அவரது நிலைமை மாறவில்லை. மற்றொருமுறையும் அவரைச் சுவாமியிடத்து அழைத்துச் சென்றார்கள். அப்போது, சுவாமி அவரிடத்துக் கருணைகாட்டித் தாம் சாப்பிட்டுக்கொண்டிருந்த இலையிலிருந்து சாதத்தில் சில பிடிகள் வழங்கினார். அதை அவர் உட்கொண்ட கணத்திலே முழுநலம் பெற்று முன்னைய நிலையை அடைந்தார்.

* * *

சுவாமி தமது மலக்கழிவை உலோகத்தினால் செய்யப்பட்ட ஒரு குவளையில் வைத்திருந்து ஆற்றில் கரைத்து விடுவது வழக்கம். அவர் யாது காரணத்தால் அவ்வாறு செய்தார் என்று புலனாகவில்லை. அதை ஆற்றில் கரைத்து விடும் வரையில் அவர் கண்ணுங் கருத்துமாய்க் காப்பாற்றி வைத்திருப்பது வழக்கம். அதை வேறெவரும் எடுத்துச் செல்ல விடுவதில்லை. பரிசனவேதிக்கு அது மிகவும் பயன் படும் என்று பலர் எண்ணினார்கள். அவ்வாறு கருதிய ஒருவன் ஒருமுறை அம்மலக் குவளையைத் திருடிச் செல்ல முயன்றதால், பாரிசவாயுவால் தாக்கப்பட்டான். அவன் கால்வழுக்கி அப்பாத்திரத்துடன் குப்புற நிலத்தில் விழுந் தான். இதனால் திருடு வெளியாயிற்று. சுற்றி யிருந் தவர்கள் அவனை நையப்புடைத்துத் தண்டித்தார்கள். சுவாமியின் அந்தரங்க உண்மைகளைக் கண்டறிய முயன்ற பிறருக்கெல்லாம் இது ஒரு எச்சரிக்கையாயிருந்தது.

சுவாமி இயற்றிய அற்புதச் செயல்கள் எண்ணற்றவை. ஆதலால் மிகச் சுருக்கமாகச் சில செயல்கள் மட்டும் இங்கே கூறப்படும்.

(1) ஒருநாள் சுவாமி, முதலியாரைப் பார்த்துச் சிறிது வேப்பிலை கொண்டுவரும்படிப் பணித்தார். அந்தப் பணியைச் சிரமேற்கொண்ட பக்தர் முதலியார், டோக் நாராயணசுவாமி நாயுடுவையும் அழைத்துக் கொண்டு பல விடங்களில் சென்று பார்த்தபொழுது, வேப்ப மரங்களெல்லாம் நாகதாளியின் இடையே இருந்தபடியால், அவர் இலைகளை எளிதாகப் பறிக்க முடியவில்லை. ஆனால் ஓரிடத்தில் சில கொத்துக்களைப் பறிப்பதற்கு முயன்றார். வேப்பங்கொத்து கைக்கு எட்டியது. ஆனால் அவர் தவறி நாகதாளி புதர்மீது விழுந்துவிட்டார். கூடச் சென்ற நாயுடு அலறிக் கூக்குரலிட்டார். ஆனால் பக்திமிக்க முதலியாருக்கு எள்ளளவு கெடுதலும் உண்டாகவில்லை. அவர் நல்லபடியே எழுந்து வெற்றியுடன் வேப்பங்கொத்தைக் கையிலேந்தி வந்தார்.

(2) வேறொரு சமயத்தில் சென்னையிலிருந்து ஒருவர் சுவாமியைத் தரிசிக்கச் சென்றார். நாராயணவரம் பாப்பைய செட்டி வீட்டில் சமைப்பதற்கு ஏற்பாடுகள் செய்து ஏழைகளுக்குச் சுவாமியின் முன்னிலையில் உணவளிக்கலாமென்றிருந்தார். திடீரென்று செட்டியார் வீட்டு அம்மையார் மூர்ச்சையாய் விழுந்து ஒரு சிறிதும் தெளிவடையாமல் வர வர நிலைமை மோசமாயிற்று. எல்லோரும் அவ்வம்மையார் உயிர் நீத்ததாகவே எண்ணிவிட்டார்கள். சவம் இருக்கின்ற வீட்டில் உணவருந்தக் கூடாது என்பது இந்துசமய விதி. பணத்தைச் செலவழித்து அன்னதானத்திற்கு ஏற்பாடு செய்தவர் இன்ன செய்வதென்று தெரியாமல் அல்லல் பட்டுத் திகைத்தார். இங்கு நிலைமை இவ்வாறிருக்க பாப்பைய செட்டி இல்லத்தில் நிகழ்ந்த செய்தியைச் சுவாமியிடம் தெரிவித்தார்கள். அதைக் கேட்ட மஹாத்மா புன்னகை புரிந்து, "இல்லை, அவள் உயிர் துறக்கவில்லை,

நீங்கள் சென்று பாருங்கள்" என்று பணித்தருளினார். இதற்குள் அவ்வம்மையார் மூர்ச்சை தெளிந்து, "சமைத்த உணவைக் கொண்டுபோய் ஏழைகளுக்கு அளியுங்கள். நான் இன்னும் அரைமணி நேரம்தான் உயிரோடு இருப்பேன்" என்று சொன்னார். அங்கிருந்தவர்களெல்லாம் மிக்க வியப்புற்றுச் சாப்பாட்டைச் சுவாமியிருந்த இடத்திற்கு எடுத்துச் சென்றார்கள். இது முடிந்தவுடன் பக்தி வாய்ந்த அவ்வம்மையார் உயிர் நீத்தார்.

(3) ஒருநாள் சுவாமி தமது தாயும் தந்தையும் வந்திருக்கிறார்களென்று சொல்லி முதலியாரையும், சுவாமியுடனே இருந்து அவருக்குத் தொண்டு செய்துவந்த புருஷோத்தம நாயுடுவையும் அழைத்துக்கொண்டு அருகிலிருந்த ஒரு செங்குத்தான மலைக்குச் சென்றார். அவர்களெல்லாம் அங்குச் சென்றபோது எவரையும் காணவில்லை. ஆனால் சில நிமிஷங்களில் மலை உச்சியின் அருகில் ஓர் உயரமான ஆள் நிற்பதைக் கண்டார்கள். சுவாமி மிக்க உரத்த குரலில் அவரை அழைத்தார். ஆனால் அவர் அக்கூப்பாட்டைப் பொருட்படுத்தவில்லை. எனினும், சுவாமி அவரை விடாமல் கூப்பிட்டுக் கொண்டே இருந்தார். ஆதலால் எல்லோரும் ஒன்று சேர்ந்து பெருங்குரலில் அவரை அழைக்கலானார்கள். இறுதியில் அவர்கள் கோரிக்கை நிறைவேறியது. தூரத்திலிருந்த் அந்த மனிதர் மெல்ல ஜாக்கிரதையாக இறங்கி இவர்களிருக்குமிடம் வந்து சேர்ந்தார். அதுவரை சுவாமி முகத்தில் மகிழ்ச்சி தோன்றவும் உள்ளத்தில் விருப்பங்கலந்த ஆர்வத்துடனும் அவரை எதிர்பார்த்து அமர்ந்திருந்தார். கடைசியில் சுவாமியிடத்து வந்த மனிதர் சென்னையில் தாம்கண்ட எல்லாவற்றையும் விரித்துரைத்துப் பின்னர் ஒரு ஆரஞ்சுப் பழத்தை அளித்தார். அதன் பிறகு அவர் விடைபெற்றுக் கொண்டு வந்த வழியே திரும்பலானார். திரும்பிப் போகும் தறுவாயில்

எவ்வாறோ திடீரென்று மறைந்துவிட்டார். இவ்வற்புதச் செயல் வியப்பை உண்டாக்கியது. தந்தை வந்து சென்றார். ஆனால் தாய் இன்னும் வரவில்லை. சுவாமி சிறிது நேரம் காத்திருந்தார். அப்போது ஒரு கிழவி மலையின் மீது தோன்றினார். எல்லோரும் சேர்ந்து அவ்வம்மையாரை அழைத்தார்கள். ஆனால் அப்பெண்மணி வரமறுத்து விட்டார். "உங்களிடத்தில் எனக்கு ஒரு வேலையும் இல்லை. என்னைப்போக விடுங்கள்" என்று சொல்லிப் போய் விட்டார். அவ்வாறு சென்ற அவ்வம்மையாரும் திடீரென்று மறைந்துவிட்டார். அவர்களை மறைப்பதற்கு அவ்விடத்தில் மரங்களாவது புதர்களாவது இல்லை. அப்போது சுவாமி, "மிக நன்றாயிருக்கிறது!" என்று சொன்னார். பிறகு அனைவரும் நாராயணவரம் திரும்பினார்கள். இந்நிகழ்ச்சியால் சுவாமியிடம் அவர்கள் கொண்டிருந்த நம்பிக்கை மிக உறுதியாயிற்று.



# அகக்காட்சியும் முன் அறிவிப்புகளும்

(முதற்பகுதி)

## அத்தியாயம் 5

ஸ்ரீ சுரைக்காய் சுவாமிகளுடைய பெருமை அவர்களுடைய அற்புதச் செயல்களால் மட்டு மன்றி வேறு நிகழ்ச்சிகளாலும் பிரசித்தி பெற்று விளங்கலாயிற்று. சுவாமி, பிறர் உள்ளத்தில் எழுகின்ற எண்ணங்களையும் சென்ற காலத்து நிகழ்ச்சிகளையும் எதிர்கால நிகழ்ச்சிகளையும் எடுத்துரைப்பது வழக்கம். இவ்வித சக்தியைச் சுவாமி தமது நலத்துக்காகப் பயன்படுத்துவதில்லை. பிழைப்பிற்கு வழியாகவும் பொருள் ஈட்டும் வாணிபமாகவும் அவர் கையாளுவதில்லை. சுவாமியுடைய நோக்கம் மிகச் சிறந்தது. மக்களுக்கு வேண்டியவற்றை அருளிச் செய்து அவர்களுக்கு இன்பமூட்டுவதே தமது அரிய கடமையாகக் கொண்டிருந்தார். இடுக்கண் உற்றவருக்கும் உணர்வு கலங்கி உள்ளம் நடுக்குற்றவருக்கும் சுவாமி துணைபுரிந்து இன்னல்களை ஒழித்து இதம் செய்வார். நகரங்களிலிருப்பவர்களின் ஆடம்பர வாழ்க்கை, உயர்ந்த பதவியிலிருந்து அதிகாரம் செலுத்துபவர்களின் செல்வாக்கு, மற்றும் உலக வாழ்வில் காணப்படும் விநோதங்கள் ஆகிய எவையும் சுவாமியின் திருவுள்ளத்தைக் கவர்வதில்லை. இவைகளைக்கொண்டு அவர்கள் மக்களின் தரத்தை அளப்பதில்லை. அவர் நோக்கில் அனைவரும் சமமே. சுவாமி எவரிடத்துக் கருணை காட்டுவார் என்பதை அவருடைய திருவுள்ளக் குறிப்பு இன்னதென்று அறியாத பிறர் தெரிந்துகொள்ள முடியாது. சிலர் முன்னர் செய்த தீவினையால் சுவாமியுடைய அருளைப்பெற இயலாது திரும்புவர். சில போலித்துறவிகளையும் மந்திரப்புரட்டர்

களையும் போலல்லாது சுவாமி முக்காலமும் அறிந்த முழு முதல் ஞானி என்பதை யாவரும் எளிதில் அறிந்து கொள்ள லாயிற்று. பண்டைக்காலத்து மஹரிஷிகளும் பிற்காலத் தில் வந்த சமயாசாரியர்களும் நமது சுவாமியைப்போல் இருந்திருப்பார்கள் என்று கருதவேண்டியிருக்கிறது. பிறரது உள்ளத்தில் எழுகின்ற எண்ணங்களையும் உணர்ச்சிகளையும் சுவாமி கண்ணாடியில் காண்பதுபோல தெள்ளத்தெளிய அறிந்து கொள்ளுவார்கள் என்பதற்கும் வருங்காலச் செய்திகளை வருமுன் அறிவிக்கும் ஆற்றல் மிக்கவர் என்பதற்கும் ஆதாரமாகச் சில அற்புதச் செய்தி கள் இங்குக் குறிப்பிடப்படும்.

சுவாமி கீழ்அகரத்தில் சில நாட்கள் தங்கியிருந்த போது ஒரு நாள் பிச்சைக்காகப் புறப்பட்டார். எப்போதும் சலிப்பின்றி அவரைத் தொடர்ந்து செல்லும் செங்கல்வராய முதலியாரும் சுவாமியுடன் சென்றார். ஒரு வீட்டின் முன் நின்ற சுவாமி, "காமாட்சி, காமாட்சி" என்று கூப்பிட்டார். ஒருவரும் பதில் சொல்லவில்லை. முதலியார் சுவாமியைப் பார்த்து. "உள்ளே ஒருவரும் இல்லை போலிருக்கிறது. தாங்கள் எதற்காகச் சிரமப்பட்டுக் கூப்பிடவேண்டும்?" என்றார். அதற்குச் சுவாமி புன்னகை புரிந்து அவரை மௌனமாக இருக்கும்படிப் பணித்தார். பிறகு, "மங்கை, மங்கை" என்று அழைத்தார். அப்போது ஓர் அம்மையார் வெளியேவந்து அவருடைய பிடிவாதத்திற்காகப் பலவாறு வைதார். அவ்வாறு வைவதைப் பொருட் படுத்தாது மேலும் மஹாத்மா உணவு கொடுக்கும்படி வேண்டினார். அப்போதும் மனமிரங்காதது கண்டு உள்ளே சமைத்து வைத்திருந்த கீரையையாவது சிறிது தரும்படிக் கேட்டார். மறுமுறையும் இல்லையென்றே பதில் வந்தது. அப்போது சுவாமி தம்முகத்தில் மகிழ்ச்சிதோன்ற, "அம்மணி, நீமிகப் பக்குவமாகச் சமைத்து வீட்டின் ஒரு மூலையில் மறைத்து

வைத்திருக்கும் கீரையைக் கொண்டு வராது என்னை ஏமாற்றுகின்ருய் !" என்று சொல்லிப் பிறகு அது இருக்குமிடத்தை விவரமாக, நேரில் கண்டதுபோலக் குறிப்பிட்டார். அந்த அம்மையார் மிகவும் திடுக்கிட்டுச் சுவாமியின் அடிபணிந்து தாம் சமைத்து வைத்ததைக் கொண்டுவந்து தந்தார். இந்தச் சம்பவத்தைப் பார்த்திருந்த முதலியாரும் மற்றவர்களும் எள்ளளவும் மாறுபாடில்லாமல் நேரில் கண்டவை போல எல்லாவற்றையும் உள்ளதை உள்ளவாறே சுவாமி எடுத்துரைப்பதைக் கேட்டு மிக்க ஆச்சரியமடைந்தார்கள்.

வேருெரு சமயத்தில் நாராயணவரத்தில் வாசம் செய்யும் பாப்பைய செட்டி என்னும் ஒரு ஆரியவைசியர் ஒரு உளுந்து வடையைக் கொண்டுபோய் சுவாமியிடம் கொடுத்தார். அதைப்பார்த்த சுவாமி, " அந்தோ ! என்ன தரித்திரம்? உன்னிடத்தில் இப்போது பதினெட்டு வடை இருந்தும் நீ ஒன்றுதான் கொடுக்கின்ருய் !" என்று உரைத்தார். எத்தனை வடைகள் இருந்தன என்பது பாப்பைய செட்டிக்குத் தெரியாது. ஆனுல் உள்ளே சென்று எண்ணிப் பார்த்தபோது சரியாகப் பதினெட்டு இருக்கக்கண்டு அளவில்லா ஆச்சரியமடைந்தார்.

* * *

ஒரு நாள் சுவாமி மன அமைதியற்றிருந்தார். அப்போது தமது அடியவரான முதலியார் அவர்களைத் தம்முடன் அழைத்துச் சென்று பட்டினியால் வாடுகின்ற ஓர் ஏழைக்கு உணவளிக்கவேண்டுமென்ருர். பகல் பன்னிரண்டு மணியாதலால் வெயில் கடுமையாயிருந்தது. எனினும் தம் விருப்பப்படி அவ்வேழைக்கு உணவு கொடுக்கும் வரையிலும் சுவாமி அமைதியற்றிருந்தார். ஆதலால் முதலியார்

அவரது கட்டளைக்கிணங்க அவருடன் புறப்பட்டார். சுவாமி ஒரு சேரிக்குச் சென்று தம்மிடமிருந்த உணவை நோயுற்ற நாய் ஒன்றுக்குஅளித்தார். எதற்காக அவ்வாறு செய்தார் என்று கேட்டதற்குச் சுவாமி, 'அந்தோ, இவ்வுயிர் முற்பிறவியில் கருணைமிக்க பெண்ணுயிருந்து எனக்குக் காய்கறிகளும் பழங்களும் கொடுத்துளது ஏதோ தீவினையினு இப்பிறவியை எய்தியது" என்று சொல்லி அவளது நிலைமைக்காகப் பெரிதும் உளமிரங்கிப் பின்பு நாராயணவரத்திற்குத் திரும்பினுர்.

* * *

ஓர் இரவு சுமார் பதினெரு மணிக்குச் சுவாமி தமது படுக்கையிலிருந்து ஓவென்று அழத்தொடங்கினுர் "அந்தோ! என்னகாலம் இது! அவன் மாண்டு வீழ்ந்தானே! இப்படியும் அவன் செய்யலாமா? என்ன கொடுமை செய்தான்! தூக்கிலிட்டுக்கொண்டு தன் உயிரைப் போக்கிக்கொண்டானே!" என்று அரற்றினுர். பொறுக்க முடியாத வயிற்று வலியினுல் அன்றிரவு ஒருவன் வேப்பமரத்தில் தூக்குப் போட்டுக்கொண்டு இறந்துவிட்டான் என்பதை மறுநாள் காலையில் முதலியார் அவர்கள் விசாரித்து அறிந்து கொண்டார்கள். இதைப்போலவே மற்ரெருநாள் சுவாமியும் முதலியாரும் ஆற்றில் குளித்துக் கொண்டிருக்கும் போது சுவாமி, திடீரென்று துக்கத்திலாழ்ந்து பெருமூச் செறியத் தொடங்கினுர். "ஐயோ, பாவம்! என்னருமைத் தோழர் மறைந்து விட்டாரே! நான் இனி என்ன செய்வேன்!" என்று சொல்லி சுவாமி வருந்தினுர். அச்சமயத்தில் சுவாமி கையைப் பிசைந்து கொள்வதும் பல்லைக்கடிப்பதும் கண்ணீர் பெருக்குவதும் இன்னகாரணத்தாலென்று முதலியார் அறிந்துகொள்ள இயலவில்லை. பின்னர்தான் உண்மை இன்னதென்று விளங்கிற்று. தோபா சுவாமியுடைய

சீடரான சட்டிப் பரதேசி என்னும் ஒரு மஹாத்மா நாராயணவரத்திற்கு எழுபது மைலுக்கு அப்பால் உயிர் நீத்தார் என்று முதலியாருக்குத் தெரியவந்தது.

* * *

சுவாமி தங்கியிருந்த இடத்திற்கு எதிர் வீட்டுச் சொந்தக்காரர் நரசய்யர் என்பவர் ஆவர். சுவாமியுடைய பக்தர்கள் செய்கின்ற வழிபாடெல்லாம் வெறும் பைத்தியக் காரத்தன மென்று ஐயர் நினைப்பதுண்டு. அவர்களை யெல்லாம் எள்ளி நகையாடுவதும் இழிவாகப் பேசுவதும் முட்டாள்களென்று நினைப்பதும் ஐயருக்கு இயல்பு. அறிஞர்களும் உயரிய பதவியிலிருப்பவர்களும் சுவாமியை வணங்குவதுகண்டு அவர்களெல்லாம் கற்றறி மூடர் களென்றும் குருட்டுத் தசையால் பதவி எய்திவிட்டவ ரென்றும் கருதுவார்.

நரசய்யர் செயல்களனைத்தும் அந்தரங்கமாகவே நடை பெறும். தம்முடைய விவகாரங்கள் இலாப நஷ்டம் ஆகிய செய்திகள் எவையும் தம் மனைவிக்குக் கூடச் சொல்வ தில்லை. தம் கிராமத்திற்கருகில் உள்ளவேறு கிராமத்தில் நிலம் விலைக்குப் பெறவிரும்பினர். அந்த நிலத்திற்குச் சம்பந்தப்பட்ட மூவரைக்கண்டு முடிவு செய்வதற்காக ஒரு நாள் அவர் நாராயணவரத்திலிருந்து அந்தக் கிராமத்திற்குப் புறப்பட்டார். அவர் எங்குச் செல்கிறூர், எதற்காகச் செல் கிறூர் என்பது ஒருவருக்கும் தெரியாது. அவர் வண்டியில் ஏறப்போகும் சமயத்தில் எதிர் திண்ணையில் உட்கார்ந் திருந்த சுவாமி அவரை அழைத்தார். சுவாமிகளை ஒரு எளிய பிச்சைக்காரனுகவே நினைத்துவந்த நரசய்யர் சுவாமி தம்மை அழைப்பதைச் சிறிதும் விரும்பவில்லை. முக்கிய மான வேலையாக ஒருவர் போகும்பொழுது அவரை

அழைப்பது சகுனத்தடை என்று கருதினர். அவர் சற்றுத் தயங்கிப் பிறகு வேண்டா வெறுப்பாக அவரிடம் சென்று தம்மை எதற்காக அழைத்தார் என்று கேட்டார். நரசய்யருடைய கோணல் போக்கைத் திருத்தி அவரை நல்வழிப் படுத்த விரும்பிய சுவாமி, "ஐயா, நீங்கள் இன்று போக வேண்டாம். நீங்கள் பார்க்கவிரும்பும் மூவரும் வெவ்வேறு இடங்களில் இருக்கிறார்கள். ஆகையால் இந்த வேலை இன்று நிறைவு பெறாது." என்று சொன்னார். சுவாமியை வணங்கி வழிபாடுசெய்யும் அடியவரெல்லாரையும் பைத்தியக்காரர்கள் என்று நினைத்த அந்தப் பிராமணர் தம் பிழையை உணர்ந்து பணிவுகாட்டத் தொடங்கினர். சுவாமியிடம் படித்து நல்ல நிலையிலிருந்த பல அன்பர்கள் காட்டிய மரியாதையைத் தாம் ஏளனம் செய்தது தவறு என்பதை அவர் வருத்தத்துடன் உணர்ந்தார். அவர் பொறுமையாக இரண்டு நாள்வரை காத்திருந்தார். மூன்றும் நாள் தாமாகவே சுவாமியிடம் சென்று வணங்கி நிலம் வாங்குவதற்குப்போக உத்திரவு கேட்டார். சுவாமி, "நல்லது ஐயா, இப்பொழுது போங்கள். அந்த மூவரும் ஊரிலிருப்பார்கள். உங்கள் வேலையை முடித்துக் கொள்ளலாம்." என்று சொன்னார். நரசய்யர் சுவாமி சொற்படி புறப்பட்டார். சுவாமி சொன்னவை அனைத்தும் மெய் என்பது நரசய்யருக்குத் தெரியவந்தது. சுவாமியைப்பற்றி அவர் கொண்டிருந்த தவறான கொள்கையை முழுதும் மாற்றிக் கொண்டார். தம் சிறுமையை உணர்ந்த அவர் செங்கல்வராய முதலியாரிடத்தும் மற்றவரிடத்தும் தம் அறியாமைக்காக மன்னிப்புக் கேட்டுக்கொண்டார். பிறகு, ஒரு நாள் சுவாமிக்குத் தம் மரியாதையைச் செலுத்த வேண்டி சுவாமியையும் அவரது அடியார்களையும் தம் வீட்டிற்கு மேள தாளத்துடன் ஊர்வலமாக அழைத்துச் சென்றார். சுவாமிக்கு மிகச் சிறந்த முறையில் விருந்து

செய்தார். அங்கிருந்த மற்ற அடியார்க்கும் அவர் உணவு அளித்தார். பிறகு சுவாமியையும் அவர் அடியாரையும் சுவாமியின் இருப்பிடத்துக்கு அழைத்துவந்து அனைவருக்கும் வெற்றிலைபாக்கு, சந்தனம், பன்னீர் வழங்கினர். இதற்குப் பின்னரே அவர்தம் வீடுசென்று உணவருந்தினர்.

இந்தச் சம்பவம் நிகழ்ந்த சில நாட்களுக்குப்பின் நரசய்யர் ஓர் கிணறு தோண்ட உத்தேசித்து அதற்காகச் சுவாமியின் அனுமதியையும் பெற்றார். கிணறு தோண்டும் போது ஆற்றுத் தேவதைக்குப் பலி கொடுக்க வேண்டு மென்று சிலர் சொன்னர்கள். ஆனல் சுவாமி அவ்வாறு செய்யக் கூடாதென்றார். கிணறு வெட்டும் வேலையாட்கள் செய்தே தீர வேண்டுமென்று பிடிவாதமாக இருந்தனர். ஆனல் நரசய்யர் பலியிடுவதற்குப் பதிலாக அவ்வாட்களுக்கு இரண்டு ரூபாய் பரிசளித்தார். ஆட்டிறைச்சியை விரும்பிய அவர்கள் சில்லரைக்காசை விரும்பவில்லை. எனவே, அவர்கள் ஒரு வெள்ளாட்டை நரசய்யர் வீட்டு வாயில் முன்பு கட்டிவிட்டனர். பலவிதமான விவகாரச் சூழல்களில் கலக்குண்டிருந்த ஐயருக்கு இது புலனுகம விருந்திருக்கலாம். அல்லது அவர் கண்டும் காணுதவர் போலிருந்து விட்டிருக்கலாம் கிணறு வெட்டி முடிந்தது. ஆனல் நல்ல பயன் இல்லை. கிணற்றுத் தண்ணீர் உவர்ப்பாக விருந்தது. மலை கெல்லி எலிபிடித்த கதையாக முடிந்ததே தம் முயற்சி என்று ஐயர் ஏக்கமுற்று வருந்தினர். சுவாமியிடத்து உறுதியான நம்பிக்கை கொண்ட ஐயர் அவரிடம் சென்று தம் குறையைச் சொல்லி முறையிட்டார். "ஓஹோ! வாயில்லாப் பிராணியைக் கொலை செய்துவிட்டாய் போலும்! உனது பிழையை உணர்ந்து வருவதால் உனது குறை நீங்கும். கிணற்றுத் தண்ணீர் முழுவதையும் இறைத்து வெளிப்படுத்தி விட்டால் பின்னர் சுரக்கும் தண்ணீர் உள்ளத்தை மகிழ்விக்கும் தன்மையு

தாக விருக்கும்" என்று சுவாமி சொன்னார். ஐயர் சுவாமி யின் கட்டளையை நிறைவேற்றினார். பலனைக் கைமேல் கண்டார். சுவாமி வாக்கு பலித்தது!

* * *

ஒரு நாள் செங்கல்வராய முதலியார் அவர்கள் சுவாமிக்கு அளிப்பதற்காக ஒன்றும், தமக்கு ஒன்றுமாக இரண்டு கம்பளப் போர்வைகள் (சால்வைகள்) விலைக்கு வாங்கினார். அன்றே நாராயணவரம் சென்றார். அன்று சனிக்கிழமை யாதலால் துணிமணிகள் அளிப்பதற்குச் சிறந்த நாள் அல்லவென்று நினைத்துப் போர்வைகளைத் தமது பையிலேயே வைத்திருந்தார். இவர் வாங்கிய பொருள்களைப் பற்றித் தெரிந்து கொள்ள சுவாமிக்குச் சந்தர்ப்பம் ஏதுமில்லை. முதலியாரைத் தம்முடன் அருகி லுள்ள ஒரு கிராமத்திற்கு அழைத்துக்கொண்டு போய் ஒரு வெட்ட வெளியான இடத்தில் படுத்து உறங்கத் தீர்மானித்தார். முதலியார் குறுக்கே ஒன்றும் சொலல வில்லை. அது பனிக்காலம். குளிர் உடலை நடுக்குறச் செய்தது. இரவு ஒன்பது மணியாயிற்று. சுவாமி முதலி யாரை அழைத்து, "நல்சாமி, என்னால் குளிர்தாங்க முடிய வில்லை. சென்னையிலிருந்து நீ கொண்டுவந்த இரண்டு சால்வைகள் என்னவாயின? சனிக்கிழமை நல்ல நாளல்ல வென்று நீ நினைக்கிறாய். குற்றமில்லை. அவைகளைக் கொடு" என்று கட்டளை யிட்டருளினார். முதலியார் அளவிலா ஆச்சரியமுற்றார்; கட்டளைக் கிணங்கினார். முதலியார் போர்த்துக் கொள்வதற்கு ஒன்றுமில்லை. தாம் அவ்விரவில் பனியில் நனைந்து குளிரால் உடல் செயலற்றுப் போய்த் தாம் மடிந்து போவார் என்று அஞ்சினார். இவர் உள்ளத்தின் நிலையை உணர்ந்த சுவாமி அவரைப் படுத்துறங்குமாறு ஏவினார். இரவு ஆழ்ந்த நித்திரை

யிலாழ்ந்து பனியாலும் குளிராலும் பாதிக்கப்படாமல் மறுநாள் விழித்தெழுந்தார். தம்மைச் சுற்றியிருந்த மரஞ் செடி கொடிகள் பன்னிறப் பூக்கள் ஆகியவற்றின் மீதும் பனித் திவலைகள் மழைத்துளிகள் போல் தங்கியிருப்பதைப் பார்த்துத் தம்மீது மாத்திரம் ஒரு சிறிதும் பனித்துளி வீழாமைக்குச் சுவாமி திருவருளும் கருணைப் பெருக்குமே காரணம் என்று சிந்தித்து மகிழ்ந்தார் உத்தம பக்தரான முதலியார்.

* * *

பிரம்பூர் ரெயில் வண்டித் தொழிற்சாலை (நிர்வாக அதிகாரிகளிடம்) குமாஸ்தா வேலை பார்த்துவரும் இராம ஐயர் என்பவர் சுவாமிகளது தெய்வீக சக்தியைக் கேள்வி யுற்று அவர்களைத் தரிசிக்குமாறு நாராயணவரத்திற்கு ஒருநாள் புறப்பட்டுப்போனார். சென்றவிடத்தில் சுவாமி இல்லாமையைக் கண்டு அவர் வரும்வரை காத்திருக்கத் தீர் மானித்தார். அவ்வமயம் அருகிலிருந்த துர்க்கை கோவிலைப் பற்றிக் கேள்வியுற்று சுவாமி வருவதற்குள் அங்குப் போய்த் திரும்பலாமெனமுடிவுசெய்து ஐயர் புறப்பட்டார். வழியில் ஒரு ஆற்றைக்கடக்க வேண்டியிருந்தது. நடு ஆற்றில் செல்லும்போது எதிரில் சுவாமி வருவதைக்கண்டு ஐயர் அவரது திருவடிகளில் வீழ்ந்து வணங்கினார். "நீ துர்க்கை கோயிலுக்குப் போகிறாய். அங்குப் போய்வா" என்று உத்தரவிட்டார். இராமஐயர் துர்க்கை கோயி லுக்குப் போய் அம்மன் தரிசனமும் செய்து திரும்பினார். அவர் சென்னைக்குத் திரும்பிச் செல்ல சுவாமியின் உத்தரவு பெறப் போனபோது, "நீ போய்ச் சீக்கிரம் திரும்பிவா" என்றார். ஐயர் ஸ்டேஷனுக்குப் போவதற்குள் இரயில் சென்றுவிட்டது. சுவாமி உரைத்த வண்ணமே சீக்கிரம் திரும்ப வேண்டியதாயிற்று.

* * *

செங்கல்வராய முதலியாருடைய மனைவி இறந்து விட்டார். அவருடைய உறவினர்கள் அவர் மறுமணம் செய்துகொள்ள வேண்டுமென்று விரும்பினார்கள். அவரது உடன் பிறந்தார் மகளும் மற்றும் சில உறவினர்களும் சுவாமியிடஞ் சென்று அவரடிபணிந்து வணங்கினர். சுவாமி அவர்களை நோக்கி, "ஓஹோ! அவன் பிரியமில்லாமல் ஒரு (பெண்) ஆட்டை விலைக்கு வாங்கினான். அது நான்கு குட்டிகளை ஈன்றது. தாய ஆடும் நான்கு குட்டிகளும் இறந்துவிட்டன. நீங்கள் ஏன் மறுபடியும் அவனைத் தொந்தரவு செயகின்றீர்கள்?" என்றார். சுவாமி அவர்களை அதற்குமுன் பார்த்ததில்லை. அவர்கள் யாரென்றும் ஒருவரும் சொன்னதில்லை. அவர்களும் தாங்கள் வந்த காரணத்தைத் தெரிவிக்கவில்லை. தமக்கு விருப்பமில்லாமல் முதலியார் மணஞ்செய்து கொண்டார். அவ்வம்மையார் நான்கு பெண்மக்களைப் பெற்றுவிட்டு உயிர் நீத்தார். அந்நான்கு பெண்களும் இறந்துவிட்டனர். இச்சம்பவங்களை அவ்வளவு அழகாகச் சுவாமி உருவகப்படுத்தி விவரித்தது கேட்டவர்களை வியப்புறச் செய்தது. முதலியாரது உறவினர்கள் சுவாமியிடம் செல்வதற்கு முன்பே தமது அருகில் வீற்றிருந்தவர்களை நோக்கி சில பேர்கள் மிட்டாய்களுடன் தம்மிடம் வரப்போகிறார்களென்று அறிவித்தார். முதலியாரது உறவினர்கள் வருவதைப் பற்றித்தான் சுவாமி குறிப்பிட்டிருப்பார்.

---

# அகக்காட்சியும் முன் அறிவிப்புகளும்

(இரண்டாம் பகுதி)

## அத்தியாயம் 6

சுவாமிகள் நிகழ்த்திய அற்புதச் செயல்கள் அனைத்தையும் இங்கு விரித்துரைக்க இடமிராது. சில முக்கியமான நிகழ்ச்சிகளை மட்டும் எடுத்துரைத்தால் சுவாமியின் பெருமை நன்கு புலப்படும். பற்பல ஐயங்கள் மேலிட்டு நம்பிக்கை குறைவுற்றிருப்பவர்கள் கூட சுவாமியின் தெய்வீக சக்தியில் நம்பிக்கை கொள்ளுவர். இந்நிகழ்ச்சிகளைச் சுவாமியின் பெருமையைச் சுட்டிக்காட்டும் அறிகுறியாகவேனும் கொள்வர். இந்நூலில் கூறப்பெற்ற நிகழ்ச்சிகளைவிட இன்றும் சிறந்தவை பல உள எனினும், இத்தகைய செய்திகளை மறை பொருளாகப் பிறர்க்குத் தெரியாமல் வைத்திருக்கத் தேவையில்லை யெனினும், சிலர் தங்கள் அனுபவங்கள் வெளிப்படுத்தக் கூடாத அருமை வாய்ந்தவை என்று கருதி, அவற்றை வெளிப்படக் கூற மறுக்கின்றனர்.

ஒருநாள் சுவாமி திடீரென்று செம்பரம்பாக்கத்திற்குப் புறப்பட்டார். அவர் ஒரு எளிய குடிசையில் நுழையுந் தருவாயில் அருகிலிருந்த ஒரு நாய் இடைவிடாது குரைத்தது. அதை அவர் கடைக்கண்ணால் நோக்கிச் சிறிது நேரம் மௌனமாய் இருந்து, "உன்னுடைய நாள் நெருங்கி விட்டது. சும்மாயிரு குரைக்காதே," என்று சொன்னார். அருகிலிருந்த அனைவரும் சுவாமியின் நோக்கிலும் குரலிலும் ஒரு புதுமையைக்கண்டு வியந்து நின்றார்கள். இரண்டு வாரத்திற்குப்பின் அந்த நாய் எதிர்பாராதவண்ணம் உயிர் நீத்தது. நாயை எச்சரிக்கை செய்தபின் அருகில் சாவதான

மாக உட்கார்ந்து மகிழ்ச்சியோடு பேசிக்கொண்டிருந்த ஒரு சிறு பெண்ணையும் அவள் தாயையும் பார்த்து அவர்கள் இருக்குமிடம் நோக்கினூர். அவ்விருவரும் தம்முடைய சம்பாஷணையைத் திடீரென்று நிறுத்திவிட்டுச் சுவாமியைப் பார்த்து மனதால் தொழுதார்கள். சுவாமி தமது கைவிரல் களுள் நான்கைக் காட்டி அழ ஆரம்பித்தார். அடுத்த நான்காம் நாள் அந்த வயதான கிழவி இம்மண்ணுலகை நீத்து விண்ணுலகை எய்தினூர்.

1883-ஆம் ஆண்டில் தனவந்தரும் அரசாங்க உத்தி யோகஸ்தருமான சென்னை ஆராவமுத நாயுடு அவர்கள் சுவாமியைத் தரிசிப்பதற்காகச் சென்ருர். சுவாமியுடைய தெய்வீகச் சக்தியையும் அற்புதச் செயல்களையும் கருணைப் பெருக்கையும் பற்றிக் கேள்வியுற்ற நாயுடு அவர்கள் தம்மைச் சுவாமியிடத்து அழைத்துச் செல்லுமாறு செங்கல்வராய முதலியார் அவர்களைக் கேட்டுக்கொண்டார். ஆனுல் முதலியாரவர்கள் ஒரு தர்ம சங்கடமான நிலையிலிருந் தார். ஆராவமுத நாயுடு அவர்கள் ஆத்மீக விஷயத்தில் எவ்வளவு சிரத்தை காட்டின போதிலும் அவர் உலக சுகங்களில் வழக்கப்பட்டவர் என்பதை முதலியார் அவர்கள் நன்கு அறிவார்கள். ஆதலால் அவர் வண்டி முதலிய வசதியில்லாமல் காடு, மேடுகள் வழியாக நாட்டுப் புறங்களுக்குச் செல்ல இயலாது என்பதை முதலியார் அறிவார். பிரயாணத்திஞல் வருகின்ற களைப்பையும் அசெளகரியங்களையும் தாங்கும் இயல்பு அவருக்குக் கிடை யாது. சுவாமி ஒரே இடத்தில் தங்கியிருக்க மாட்டாராகை யால் நாயுடு அவர்களை எவ்வாறு பல இடங்களுக்கு அழைத்துச் செல்வது என்று முதலியார் தீவிர சிந்தனையில் ஆழ்ந்தார். ஆனுல் கடைசியில் புதிதாகச் சுவாமியிடம் பக்தியில் ஈடுபட நினைத்த நாயுடுவை அழைத்துச் செல்ல இணங்கினூர். ஒருநாள் அவர்கள் சென்னையிலிருந்து புறப்

பட்டுச் சில மணி நேரத்திற்குள் நாராயணவரம் சேர்ந் தனர். ஆனால் சுவாமியை அவ்விடத்தில் காண இயல வில்லை. அவர்கள் பல கிராமங்களில் தேடிப் பார்த்தும் பயனில்லை. இதுவரையிலும் இவ்வளவு கடுமையான அனு பவங்களை நாயுடு அவர்கள் அடைந்ததில்லை. எனினும் எல்லாக் கஷ்டங்களையும் பொறுத்துக் கொண்டு எப்படி யாவது சுவாமியைத் தரிசிக்க வேண்டும் என்று தீர்மானம் செய்தார். இறுதியில் சுவாமியை நீர்வாய் என்னும் ஒரு குக்கிராமத்தில் கண்டார்கள். அனைவரும் சுவாமியின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினர். அவர்களுக்காகத் தயாரிக்கப்பட்ட உணவை அனைவரும் பிரயாணத்தின் களைப்புத் தீர அருந்தினர். சுவாமியின் தெய்வீகச் சக்தியைப்பற்றி மிக்க ஐயமுற்றிருந்த திரு. குப்புசாமி செட்டியார், M. A., அப்போது அவர்களுடனிருந்தார். சுவாமி அவருடன் பேசிய மொழிகள் அனைத்திலும் அந் தரங்கக் கருத்துக்கள் பொதிந்திருந்தன. சுவாமியுடைய சம்பாஷணையில் குப்புசாமி செட்டியார் அவர்கள் வாழ்க்கை யின் சம்பவங்கள் பற்பல வெளியாயின. சுவாமி கூறியவை அனைத்தும் உண்மையாக இருப்பதைக்கண்ட செட்டி யாரின் ஐயங்கள் பறந்தோடின. சுவாமியின் தெய்வீகச் சக்தியில் முழு நம்பிக்கைகொண்டு அவருடைய திருவடி களைப் பணிந்து வணங்கினார். சுவாமியைத் தமது ஞானா சிரியராகக் கொண்டார். பிறகு நாயுடு அவர்களும் செட்டி யார் அவர்களும் புறப்படுவதற்கு உத்தரவு கேட்டார்கள். முதலில் சுவாமி மறுத்தார். ஆனால் செங்கல்வராய முதலி யார் வேண்டுகோளுக்கிணங்கி சுவாமி உத்தரவு கொடுத் தார். போகும் வழியில் பல இடையூறுகள் நேரிடு மென்றும் அவைகளினின்றும் அவர்கள் ஜாக்கிரதையாகத் தப்பித்துக்கொள்ள வேண்டுமென்றும் சுவாமி எச்சரிக்கை செய்தார். சுவாமி சொன்னபடி ஆராவமுத நாயுடு பல

கஷ்டங்களுக்கு உள்ளானதாக முதலியாரிடம் சொன்னார். அளவுகடந்த இன்னல்களை அனுபவிக்க வேண்டியிருந்தும் அதற்காக நாயுடு அவர்கள் மனம் தளரவில்லை. அவைக ளெல்லாம் சுவாமியின் சோதனைகளென்று கருதினார். சில நாட்கள் கழித்து அவர் மற்றொரு முறை சுவாமியிடம் சென்றார். அப்போது எல்லாம் அவர் விரும்பியவண்ணம் கைகூடியது. சுவாமி நாயுடு அவர்களுக்கு ஞானாசிரியராக விளங்கவே அவரிடம் நாயுடு தமது ஆயுள்நாள் முழுவதும் தளராத நம்பிக்கை கொண்டிருந்தார்.

* * *

மற்றொரு முறை செங்கல்வராய முதலியாரும் டோக் நாராயணசாமி நாயுடுவும் சுவாமியைத் தரிசிப்பதற்காகக் குப்பத்திற்குச் சென்றார்கள். அவர்கள் சாப்பாடு செய்வ தற்காக வேண்டிய ஏற்பாடுகள் செய்து கொண்டிருந் தார்கள். ஆனால் தகுதியான பாத்திரங்கள் கிடைக்கவில்லை. விலைமலிவான மண்பாண்டங்கள் கூட கிடைக்கவில்லை. அவர்கள் என்ன செய்வதென்று தெரியாமல் வருந் தினார்கள். ஆனால் சுவாமி சமய சஞ்சீவியாக வந்து அவர் களை அருகிலிருந்த ஒரு குடிசைக்குச் சென்று அந்த வீட்டின் சொந்தக்காரரான ஒரு கிழவியிடம் மண்பாண்டம் ஒன்று வேண்டுமென்று கேட்கச் சொன்னார். மேலும், சுவாமி, "முதலில் அவள் இல்லை என்பாள். ஆனால் நீங்கள் அதைப் பொருட்படுத்தாமல் வற்புறுத்திக் கேளுங்கள். அவள் உங்களையே போய்த் தேடிப் பார்க்குமாறு சொல்லு வாள். அவள் வீட்டுக் கூரையின் கீழுள்ள பரண்மீது ஒரு பாண்டம் இருக்கிறது என்பதை அவள் அறிய மாட்டாள். ஆனால் அதை நீங்கள் காண்பீர்கள். அதை இங்கே கொண்டு வாருங்கள்" என்று சொன்னார். இரு வரும் அந்தக் கிழவியிடம் சென்று ஒரு மண்பாண்டம்

வேண்டுமென்று கேட்டார்கள். அதற்கு அவள் அந்தக் கிராமத்தில் சுமார் பன்னிரண்டு குடிசைகள இருந்தன வென்றும் இப்பிடித்துத் தன்னுடைய குடிசை தவிர மற்றவை எல்லாம் எரிந்து போயினவென்றும் கூறினாள். தன்னுடைய நிலைமையை எடுத்துக்கூறி "நாங்கள் சாப்பாடு கூட கிடைக்காத மிகக் கஷ்டமான நிலைமையில் இருக்கிறோம். ஒரு மண்பாண்டமும் இங்கே கிடையாது" என்று சொன்னாள். முன்னதாகவே சுவாமியால் அறிவிக்கப் பட்ட அவ்விருவரும் அவளை வற்புறுத்திக் கேட்டனர். அக்கிழவி பரண்மீது ஏதாவது இருக்கிறதா என்று பார்க்கச் சொன்னாள். பரண்மீது பார்த்ததில் சுவாமி முன்னதாகவே சொன்னவாறே ஒரு மண்பாண்டம் இருந்தது. அவர்கள் மிக்க வியப்புற்றனர். அக்கிழவியும் எல்லையற்ற வியப்புற்றாள்.

* * *

இன்னொரு மறக்க முடியாத சம்பவம் நிகழ்ந்தது. இளையனார்வேலூரில் தணிகாசல முதலியார், விநாயக உடையார் என்ற இருபக்தர்கள் அந்தத் தலத்தில் கோயில் கொண்டெழுந்தருளிய சுப்பிரமணிய சுவாமிக்குத் தேர் ஒன்று செய்து விழாக்கொண்டாட நினைத்தார்கள். அவர்கள் செங்கல்வராய முதலியாரை அணுகித் தங்களுடைய எண்ணம் நிறைவேறுமா என்றும், தேர் செய்து முடித்து ஒரு ஆண்டாவது தேர்விழாவைப்பார்க்க முடியுமா என்றும், ஸ்ரீ சுரைக்காய் சுவாமியைக்கேட்டு அறிவிக்கு மாறு வேண்டினர். முதலியாருடைய ஊர் இளையனார் வேலூராதலால் அவரும் அந்தக் கைங்கர்யம் எப்படியாவது நிறைவேற வேண்டுமென்னும் ஆர்வத்துடனிருந்தார். ஆனால் எப்படியோ காலக்கழிவு நேரிட்டது. அந்த விஷயத்தையும் முதலியார் மறந்துவிட்டார். நெடுநாட்களுக்குப்பின்

சுவாமியை அவர் சந்தித்தபோது. "நல்சுவாமி! தேரோடித் தெருவில் நின்றுவிட்டதா?" என்று சுவாமி கேட்டார். அப்போதுதான் முதலியாருக்குத் தேர் விஷயம் ஞாபகத் திற்குவந்தது.

தணிகாசல முதலியாரும் விஞயக உடையாரும் அருகி லிருந்த ஒரு கிராமத்தில் வசித்துவந்த தச்சு வேலையில் திறமை மிக்த ஒருவரைக் கொண்டு இரவு பகலாக வேலை செய்து தேர்வேலையை முடித்தார்கள். தெய்வீகச் சக்தியி ஞல் அந்த வேலை நடந்தது என்று எண்ணிய தச்சர் தமது வேலைக்காகப் பணம் ஒன்றும் பெற்றுக்கொள்ள வில்லை. அந்த வேலை எப்படியோ ஆச்சரியமாய் முடிவு பெற்றது. தேர்திருவிழாநடைபெறுகின்றது. ஆனல் இன்னும் அந்தத் தேர் இளையனூர் வேலூரில் நிற்பதற்கு நிலை ஒன்றும் இன்றித் தெருவில் நிறுத்தப் பட்டுளது. வருங்காலம் உணர்ந்த சுவாமி அறிவித்த வண்ணம், "தேரோடித் தெருவில் நின்று விட்டது" என்ற வாக்கு பலித்தது.

* * *

எதிர்காலச் சம்பவங்களை முன்னுணர்ந்து அறிவிக்கும் சுவாமியின் தெய்வீகச்சக்தி மற்ருெரு ஆச்சர்யகரமான சம்பவத்தின்மூலம் புலப்படும். போலீஸ் இலாகாவில் உத்தி யோகம் செய்த ஒருவர் தமக்குக் கிடைக்க வேண்டிய பதவி உயர்வு நெடுங்காலம் மறுக்கப் பட்டதால் வருத்தத்தில் ஆழ்ந்திருந்தார் தமக்கு உத்தியோகத்துறையில் விமோ சனம் ஒன்றுமில்லை என்று முடிவு செய்து வாழ்க்கை யிலேயே ஒருவித வெறுப்பை அடைந்திருந்தார். சுவாமி யுடைய தெய்வீகச் சக்தியைப் பற்றிக் கேள்வியுற்று அவரிடம் சென்று தம்முடைய தீவினைகள் அவரது திருக் கருணையால் நீக்கப்பெற்றுப் பயன்பெறலாம் என்று நினைத்

துச் சென்ருர். அவர் ஒரு வைதிகப் பிராமணர். சுவாமியின் திருவடிகளை அவர் வணங்கியபோது அவரைப் பார்த்துச் சுவாமி, "இந்தப் பிராமணரைக் கடைத் தெருவிற்கு அழைத்துச் செல்லுங்கள். ஒரு கொழுத்த ஆட்டை அடித்துக் கூறுபோட்டுப் பகிர்ந்து கொடுக்கப் போகிருர் கள், ஒரு பெரிய பங்கை இவருக்கும் கொடுங்கள்" என்று சொன்ஞர். அந்தப் பிராமணர், சுவாமியுடைய வார்த்தை களைச் செவியுற்று அவரை ஒரு பைத்தியக்காரராகக் கருதி ஞர் இன்னும் அவ்விடத்திலிருந்தால் தமது ஆசாரத்திற்குப் பங்கம் வருமென்று கருதி தமது வீடு திரும்பிஞர். ஆஞல் சில நாட்களுக்குள் இருநூற்றைம்பது ரூபாய் மாதச் சம்பளம் உள்ள ஒரு வேலை காலியாயிற்று. அதற்காப் புதிய வரையும் நியமிக்கவில்லை. அந்த இலாகாவிலேயே இருந்த எவருக்கும் பதவி உயர்வு தரவில்லை. ஆஞல் அந்த இருநூற்றைம்பது ரூபாயைப் பங்கிட்டு சிலருடைய சம்பளத்துடன் சேர்த்துவிட்டார்கள். சம்பள உயர்வு இல்லை என்று நெடுநாளாக வருந்தியிருந்த ஐயருக்குக் கொடுத்த பங்கு மற்றவர்களுக்கு அளித்ததைக் காட்டிலும் அதிகமாயிருந்தது. சுவாமி, கொழுத்த ஆட்டில் பெரிய பங்கு ஐயருக்குக்கொடுக்கும்படிச் சொன்னதன் உட்கருத்து இப்போது விளக்கமாயிற்று. ஐயர் சுவாமியுடைய பெரு மையை இதஞல் நன்குணர்ந்து அவர் சாதாரணமான, எளி தாகக் காணக்கூடிய மஹாத்மா அல்லர் என்பதை நன் குணர்ந்தார். சுவாமியைக் காண்பதற்குப் பழங்களும் பூமாலைகளும் எடுத்துச் சென்ருர். சுவாமியிடத்து வெறுப் புக் காட்டிச் சென்ற ஐயர் திரும்பிவந்ததைக் கண்டார் அனைவரும் ஆச்சர்யமுற்றனர்.

# அடிகளாரின் அருள் திறன்

## அத்தியாயம் 7

மனித வாழ்க்கையின் மாபெருநோக்கம், ஆன்மீக வாழ்வின் உயர்வு, அவ்வாழ்வினால் பெறக்கூடிய ஆற்றல்கள்— இவைகளைப் பற்றி ஒரு சிறிதும் கருத்தைச் செலுத்தாது வீணான எண்ணங்களுக்கு இடம் கொடுத்து மக்களில் பெரும்பாலோர் தம் காலத்தை வறிதே கழிக்கின்றனர். உலக இன்பத்தையே உயர்வாகக் கருதி உண்டு கொழுக்கும் இவர்கள் பெரியவர்களை வைவதையும் விழுமியவற்றைப் பழிப்பதையும் தம் வழக்கமாகக் கொண்டுள்ளனர். மக்களில் வேறொருவகையும் உண்டு. இவ்வகையைச் சேர்ந்தவர்கள் தம் இளமையைப் பாழ்படுத்தாது, பெரிய ஆசானை அடுத்து, பொறுமையுடனும் பணிவுடனும் அவர் வழிநிற்கும் ஞானநாட்டம் உடையவர்கள். இவர்களுக்கு உண்மையை உணர்த்துவதற்காகச் செய்யும் அல்லது சொல்லும் எவையும் பன்றியின்முன் முத்தைப் போடுவதைப் போன்ற பயனற்ற வேலையாகா. கேட்பவர்களே பெறுவார்கள்; தேடுபவர்களே கண்டுபிடிப்பார்கள்; தட்டுபவர்களுக்கே கதவு திறக்கப்படும்.

சுவாமி, எப்போதும் பேரின்பத்தில் திளைத்திருந்த பெரியார். அவர் பேச்சு, சீர், தளை பார்த்து அமைத்த கவியாக இல்லையெனினும் கவிநயம் மிகுதியாக உடையதெனலாம். அவ்வப்போது அவர் வெளியிட்ட எண்ணங்கள் உயிர்ப்புடையன; அவர் சொற்கள் திறன் மிக்கவை. நிலைமைக்கு ஏற்ப அவர் மனமுருகி அழுவார் அல்லது விலாவிறச் சிரிப்பார். ஆனால், முன்பே குறிப்பிட்டபடி,

அவருடைய உணர்ச்சிப் பெருக்கமும் செய்திகளைப்பற்றிய முன் அறிவிப்பும் உண்மையான நிகழ்ச்சிகளைப்பற்றியே இருக்கும். பொய்யும் புரட்டும் சொல்லி மக்களை அவர் ஏமாற்றுவதில்லை. உண்மையைக்கூறி தீயனவற்றை விலக்குவதே அவர் கொள்கை. உண்மையைச் சொல்ல வேண்டும்—கைப்ப தெனினும் உண்மையையே சொல்ல வேண்டும் என்பதே அவர் முதன்மையாகக் கற்பித்தது. நடக்காத எதையும் அவர் நடந்ததாகக் கூறியதில்லை; வீணாகப் பிறர் மனத்தைப் புண்படுத்தியதில்லை.

காலஞ்சென்ற ஆராவமுத நாயுடு அவர்கள் எழும்பூரி லுள்ள தமது நிலத்தில் ஒரு பகுதியைத் தென் இந்திய ரெயில்வே கம்பெனிக்கு விற்க நேரிட்டது, நிலத்துக்கு ஈடாக விலை எவ்வளவு தருவார்கள் என்ற கவலை அவர் உள்ளத்தைப் பற்றிக்கொண்டது. இவ்வெண்ணத்துடன் சுவாமியின் முன்பு ஒரு நாள் நாயுடு அவர்கள் உட்கார்ந் திருந்தபொழுது. ஏதுமறியாதவர்போல் சுவாமி அவரிடம் எட்டுப்பணம் கொடுத்தார். (சுவாமி இதை வராஹன் என்று குறிப்பிட்டார்.) நாயுடு அவர்களுக்கு ஒன்றும் புரியவில்லை. செங்கல்வராய முதலியாரிடம் விளக்கம் கோரினர். சுவாமியிடம் இடையருது பழகி வந்த முதலியாரவர்கள் சுவாமியின் உட்கருத்தை உணர்ந்து கொண்டு, "கம்பெனி எட்டுஆயிரம் ரூபாய் தரும்" என்று சொன்னர். அனைவரும் வியக்குமாறு அவ்வாறே நிகழ்ந்தது.

மற்ருெரு முறை, நந்தியாலில் எஞ்சினீயராக இருந்த N. இரத்தின சபாபதி பிள்ளை அவர்களின் தாயார் நந்தி யாலுக்குப் போகும் வழியில் சுவாமியைத் தரிசிக்கச் சென்ருர். போவதற்கு உத்தரவு கொடுத்தபின்னர். சுவாமி அழுதுகொண்டே, "ஐயோ! நீ எங்கே பிறந்தாய், எங்கே

வளர்ந்தாய், எங்கே போகின்றாய்!" என்று சொன்னார். சில நாட்களுக்குள் நந்தியால் சென்ற அம்மையார் இறைவனடி சேர்ந்தார்.

இவ்வாறே, மற்றொரு முறை, சுவாமி நாராயணவரத்தினருகேயுள்ள ஒரு ஊரில், ஒரு வீட்டின் வாசற்படியில் உட்கார்ந்துகொண்டு, திடீரென்று அழத்தொடங்கினார். அவர் தம்கைகளைப் பிசைந்துகொண்டும் பற்களைக் கடித்துக்கொண்டும் அழுதார். ஆதலால், அவ்வீட்டில் இருந்த ஒவ்வொருவரும், அண்டையிலுள்ளோரும் அனைவரும், நெருங்கிய நண்பர்களாயினும் சரி, அல்லது எதிரிகளாயினும் சரி, அவ்விடத்திற்கு வந்து சேர்ந்தனர். வீட்டுக்கார அம்மையாரும் உலகியலுக்குத் தக்கது இது, தகாதது இது என்பதில் அக்கரைகொள்ளும் சில பெண்களும், சேர்ந்து விளக்கு வைக்கப்போகும் நேரத்தில் கிழப் பிச்சைக்காரன் ஓலமிடுவதைக்கேட்டு கூச்சலிட்டு அவரைத் தமது மூட்டை முடிச்சுகளோடு வெளியேறுமாறு உத்தரவிட்டனர். எல்லோரும் இத்தகைய புலம்பல் அவ்வீட்டிலுள்ளவர்களுக்கு ஏற்பட இருக்கும் கெடுதிக்கு அறிகுறி என்றும் சுவாமியைத் துரத்துவதே நல்லது என்றும் சொன்னார்கள். அப்போது, சுவாமியுடன் அவரைப் பிரியாது உடனிருந்து வந்த செங்கல்வராய முதலியார் மட்டும் இருந்தார். சுவாமி முதலியாரவர்களைச் சிறிது நேரம் அங்கே இருக்கும்படிச் சொல்லிவிட்டு அவ்விடத்தினின்றும் அகன்றனர். பணிவுள்ள சீடரான முதலியாரவர்கள் சுவாமியின் உத்தரவுப்படி அங்கே உட்கார்ந்திருந்தார். சில நிமிஷங்களுக்குள் ஒரு தலையாரி தொலைவில் ஒரு ஊரிலிருந்த அவ்வீட்டுக்கார அம்மையாரின் உடன் பிறந்தார் அன்று காலையில் நாகப்பாம்பு கடித்து இறந்து விட்டதாகச் செய்தி கொண்டு வந்தான். உடனே அந்த வீட்டிலிருந்தவர்கள் மார்பிலும் தலையிலும் அடித்துக்கொண்டு அழத்தொடங்கினர்.

இச்செய்தி அவ்வூர் முழுவதும் காட்டுத் தீயைப்போல் பரவிற்று. எல்லோரும், விசித்திரமாய்க் காணப்படும் கிழவரின் அபசகுனப் புலம்பல்தான் இதற்குக் காரணம் என்றனர். அந்த வீட்டுக்கார அம்மையார் சுவாமியையும் அவர் சீடரையும் வாய்க்கு வந்தவாறு வைதார். முதலியார் அவர் வசவுக்குச் சளைக்காமல் இந்த நிகழ்ச்சி சுவாமி குறிப்பிடுவதற்கு முன்னரே நடந்து விட்டதென்றும், அதைத் தமது பேராற்றலால் முன்னதாகவே அறிந்த சுவாமி உண்மை நிலையையும் வீட்டிலுள்ளவர்களின் விதியையும் குறிப்பாகக் காட்டினார் என்றும் சொன்னார். இப்படிச் சொன்னபிறகு சுவாமியின் இருப்பிடத்திற்கு முதலியார் திரும்பினார்.

இதனால், சுவாமி எது உண்மையோ அதை மட்டும் சொன்னாரென்றும், எது உண்மையாக நடக்க இருந்ததோ அதைமட்டும் முன்னதாகத் தெரிவித்தாரென்றும், எது உண்மையாக நடந்துவிட்டதோ அதைமட்டும் குறிப்பிட்டாரென்றும் தெரிகிறது. கட்டுப்பாடான பொய் என்பதற்கு அவர் சிறிதும் இடம் கொடார். தம்முடைய அடியார்கள் நீதி நெறியினின்றும் பிறழ்வதை விரும்ப மாட்டார். எனினும், உண்மையையும் நியாயத்தையும் கடுமையான முறையில் பின்பற்ற வேண்டும் என்றும் அவர் சொல்லவில்லை. ஏனெனில் அவர் கல்நெஞ்சமுடைய வர் அல்லர். அவர் நெஞ்சில் உண்மையோடு இரக்கமும் குடிகொண்டிருந்தது, அன்பும் நீதியும் இணைந்து வாழ்ந்தன. காலங்கடந்த பெருவாழ்வை நாடி ஆன்மீய வாழ்வில் தலைப் படுவோர் தம் நீதி உணர்வை இரக்க உணர்ச்சியால் நெறிப் படுத்தவேண்டும். நேர்மையாக நடந்து கொள்வதிலும் நெஞ்சில் ஈரமற்றுப் போகக்கூடாது. இன்றேல் அவர்கள் முயற்சியெல்லாம் வீண்முயற்சியாகவே முடியும்.

விலங்குகளை விடக் கேடுகெட்ட முறையிலோ அல்லது கடவுளர்க்கும் மேலான முறையிலோ—தங்கள் இயற்கைக்கு மாறாக மக்கள் நடக்க முயலுதல் தகாது என்று சுவாமி அடிக்கடி வற்புறுத்தினார்.

சுவாமி எவ்வளவு இரக்கமுடையவராயிருந்தார். எவ்வளவு அன்பான நெஞ்சம் உடையவராயிருந்தார் என்பது பின்வரும் சில நிகழ்ச்சிகளால் தெளிவாகும். அருகிலிருந்த காட்டில் ஒரு நாள் சுவாமி சுற்றிக் கொண்டிருந்தபோது அடிபட்ட ஆட்டுக்குட்டி ஒன்று இரங்கத் தக்கவகையில் நொண்டிச் செல்வதைப் பார்த்தார். இதைப் பார்க்கப் பொறுது சுவாமி உடனே ஆட்டுக்குட்டியின் காலைத் தடவிவிட்டு ஒரு கட்டுக் கட்டினார். அது சரியாகி மந்தையில் சேரும் வரையில் அதைக் கவனித்துவந்தார்.

ஒரு முறை திரு. N. இரத்தினசபாபதி பிள்ளை அவர்கள் சுவாமிக்கு ஒரு விலையுயர்ந்த கம்பளிப் போர்வை கொடுத்தார். அப்போது செங்கல்வராய முதலியார் அவர்களும் மற்றும் பலரும் சுவாமியோடு அவர் போகுமிடங்களுக்குச் சென்று கொண்டிருந்தனர். அவர்களுடனிருந்தவர்களுள் ஒருவன்—அவன் அவர்களுக்குத் தெரியாதவனல்ல—இந்தப் பூனையும் பால் குடிக்குமா என்ற நிலையில் பக்தனைப் போல நடித்தான்; தன்னை ஒரு துறவி என்று சொல்லிக்கொண்டான். எல்லோரும் அவனைப் பரமசாது என்றும், மிகவும் நாணய முடையவனென்றும் எண்ணினார்கள். ஆனால் அவன் புல்லினுள் மறைந்து கிடக்கும் பாம்பைப் போன்றவன். சமயம் பார்த்து அவன் சுவாமியின் கம்பளிப்போர்வையைத் திருடிக்கொண்டு நழுவி விட்டான். அவன்தான் திருடியிருக்கவேண்டும் என்று எல்லோரும் நன்கு அறிவார்கள். அவனைப் பிடித்துக் கொண்டுவந்து தண்டிக்க வேண்டுமென்று நினைத்தார்கள்

போலீஸ் அதிகாரிகள்கூட அவ்வாறே எண்ணி அவனைத் தண்டிக்க ஆவன செய்யத் தொடங்கினார்கள். ஆனால் சுவாமியோ அன்பும் அருளுமே உருவானவர். ஒருவன் எவ்வளவு கெட்டவனாக இருப்பினும் அவனைப்பிறர் ஏளனம் செய்யும்படித் தம் மனமார விட்டுவிட மாட்டார். ஆதலால் அவர்கள் சொன்னதை மறுத்து, "அவன், சூர்ய நாராயணன் சாட்சியாக எனக்கு அப்போர்வையைப் பற்றி ஒன்றுந் தெரியாது" என்று சொல்லிவிட்டால் நீங்கள் என்ன செய்வீர்கள்? அவன் கட்டாயம் சூரியன் முன்பு நின்று அவ்வாறு சத்தியம் செய்வான். விட்டுவிடுங்கள் பிள்ளைகளே அவனை விட்டுவிடுங்கள்" என்று சொன்னார். ஆகையால் அவர்கள் அவனைவிட்டுவிட வேண்டியதாயிற்று. ஆனாலும், அத்திருடனின் விதி அவனை விடுவதாயில்லை. தன்னுடைய உற்றாரையும் நெருங்கிய உறவினர்களையும் அவன் இழந்தான். மிகவும் ஏழைமை நிலையை அடைந்து பல நாட்களாகச் சாப்பாடின்றிப் பட்டினியாகக் கிடந்தான். இந்த நிலையில் அவன் சுவாமி முன்சென்று அவரடி பணிந்து உணவு வேண்டுமென்றான். அங்கிருந்தவர்கள் எல்லோரும் அவனை இன்னானெனத் தெரிந்துகொண்டு அவனைத்துரத்திவிட வேண்டுமென்று சுவாமியிடம் சொல்லி அவனைத்துரத்த முயன்றனர். ஆனால் சுவாமி அப்போதும் அவனுக்கு இரக்கம் காட்டி வேண்டிய அளவு உணவுதந்து மிகவும் உதவினார். இவ்வளவும் அவர் மிக்க மகிழ்ச்சியோடும் சிறிதும் முனகாமலும் செய்தார். அவல நிலையிலிருந்த அவன் உடல் நலம் பெற்றுச் சரியாகத் தன்னாலே வாழ்க்கை நடத்தக் கூடிய நிலைவரும் வரையில் சுவாமியுடனேயே இருந்தான்.

நாராயணவரத்தின் அருகில் ஒரு ஊரில் மங்கம்மாள் என்பவளும் அவள் தாயும் இருந்தனர். இருவரும் சுவாமியிடத்தில் பேரன்பு கொண்டிருந்தனர். தாய வயதானவள்;

அவள் சாவ நெடுநாளில்லை. இறக்கும் தறுவாயில் தன்து மகளை அழைத்துத் தன் வாழ்க்கை முடியும் சமயம் வந்துவிட்டதென்றும் சுவாமியின் திருக்கையில் தண்ணீர் வாங்கிக் குடிக்க விரும்புவதாகவும் சொன்னாள். சில நிமிஷங்களுள் இறக்கும் தருவாயிலிருந்த அவள் உணர்வற்றுப் போனாள். மகள் தனது தாயின் பெருவிருப்பம் நிறைவேறாது போகுமோ என்றும் மிகவும் வருந்தினாள். "பாவம், அம்மா. வெகுவிரைவில் இறந்து விடுவாள் சுவாமி எங்கே இருக்கிறார் என்று தெரியவில்லை. அவருடைய ஆசையை எப்படிப் பெறப் போகிறாள் ?" என்று மகள் நினைத்து. என்ன செய்வதென்று விளங்காமல் சுவாமியை நினைத்து அவர் நல்வரவுக்காகத் தொழுதாள். எதிர்பாராதவகையில் சில நிமிஷங்களுக்குள் சுவாமி அங்கே வந்து சாகும் நிலையிலிருந்தவளின் விருப்பத்தை நிறைவேற்றி வைத்தார். அங்கிருந்தவர்கள் எல்லோரும் சுவாமி திடீரென்று வந்ததைக்கண்டு மிகவும் வியந்தனர். சுவாமியின் ஆற்றலையும் அவரது எல்லையற்ற அருளையும் நினைந்து வியந்தனர்.

சுவாமி அரியசித்திகள் கைவந்த பெரியார். அவர் எண்ணத்தின் ஆற்றலும் உள்ளத்தின் வியக்கத் தக்க தன்மையும் மக்கள் ஆற்றலுக்கு மிகவும் மேற்பட்டவை. ஆகையால் அவர் புகழ் எங்கும் பரவி மக்கள் அவரிடம் திரள் திரளாகச் சென்றனர். வறுமை யென்னும் புயலால் வாடுவோரின் வாட்டம் தீர்க்கும் வானவில்லாகவும், துன்ப மேகங்களின் இருளைப் போக்கி கொண்டு நல்லன நடக்க இருப்பதற்குக் கட்டியங்கூறும் கதிரவன் ஒளியாகவும் சுவாமி விளங்கினார். பேய், பிசாசு பிடித்த பெண்களை நாம் பார்த்திருக்கிறோம். அவர்கள் கர்ஜிக்கின்ற சிங்கங்களைப் போல நடப்பதையும் பேய்ச் சிரிப்பு சிரிப்பதையும் அவ்வப்போது பார்க்கிறோம்.

நம்நாட்டில், பேய் ஓட்டுவதையே தம் தொழிலாகக் கொண்டு ஊரை ஏமாற்றும் திருடர்கள் சிலர் தம்மையும் பூஜாரிகள் என்று கூறிக்கொள்கிறார்கள். உண்மையான பூசாரிகளில் சிலர் ஒரு வேளை கடையப்பெறாத வைரங்கள் போன்றிருக்கலாம். ஆனால் அவர்கள் பின்பற்றும் முறையின் முரட்டுத்தனமும் கடுமையும் விளையக்கூடிய நன்மைக்கு ஊறு செய்வனவாயிருக்கின்றன. சுவாமியின் முன்னர் கெட்ட காற்று, கறுப்பு முதலியவை தாம்பற்றிய ஆட்களைவிட்டுச் செல்லும் என்ற நம்பிக்கையோடு சுவாமியிடம் மக்கள் சென்றனர். ஆனால் இவற்றை ஓட்டுவதற்காகச் சுவாமி கடுமையான முறைகளைக் கையாண்டதில்லை. வந்தவர்களின் கண்ணில் மண்ணைப் போட்டு அவர்கள் பணத்தைப் பறித்துக் கொண்டதுமில்லை. சுவாமியின் முன்பு வந்தவுடனேயே கெட்ட காற்று முதலியவற்றால் பீடிக்கப்பட்டவர்கள் நிலையில் நல்ல மாறுதல் ஏற்பட்டது. இதனால் மஹான்கள் முன்னிலையில் தீய சக்திகள் தம் வலிவடங்கி கெடுதி செய்யும் ஆற்றல் அற்றுப்போகின்றன என்ற நம்பிக்கை மெய்ப்பிக்கப்படுகிறது.

ஒருநாள் மாலை, சுமார் 4-30 மணிக்குச் சுவாமி சுந்தர செட்டியின் வீட்டுத் திண்ணையில் உட்கார்ந்து கொண்டு சுருட்டு பிடித்துக் கொண்டிருக்கும்போது நான்கு அல்லது ஐந்து பேர் பிசாசு பிடித்த ஒரு இளம் பெண்ணை அழைத்து வந்தனர். அப்போது திரு. செங்கல்வராய முதலியார் அங்கே இருந்தார். சுவாமி அவள் எதற்கு அங்கு வந்தாள் என்று முதலியாரைக் கேட்கும்படிச் சொன்னார். அவள் அதற்குதான் சுவாமியின் உத்தரவுக்கு அடங்கி வந்ததாகச் சொன்னாள். சுவாமிகள் நன்றாகச் சிரித்துவிட்டு மேலும் விவரங்கள் தெரிந்து கொள்ளுமாறு முதலியாரிடம் சொன்னார். முதலியார் அவளை உட்காரச் சொல்லி ஏதாவது சொல்ல வேண்டுமென்றால் சொல்லலாம் என்றார்.



பிசாசு மிகவும் உரத்த குரலில் அந்தப் பெண்மூலமாக அவள் கதை முழுவதையும் சொன்னது. அப்பப்பா! அது பெரும் கூச்சலும் குழப்பமுமாக இருந்தது. நூற்றுக் கணக்கான மக்கள் அங்கே கூடிவிட்டனர். இதுவரையில் பொறுமையாகக் கதை முழுவதையும் கேட்டுக்கொண் டிருந்த சுவாமி திடீரென்று எழுந்து, "அவளை அவன் விட்டுவிடுகிருனு? இல்லையா? என்று கேள்" என்று முதலியாருக்கு உத்தரவிட்டார். அப்பிசாசு சுவாமிக்குக் கீழ்ப்படிந்து அவர் உத்தரவுப்படி நடப்பதாகச் சொன்னது. சுவாமி அவளுக்கு ஒரு சிட்டிகை விபூதியைக் கொடுத்ததும் அவள் மீண்டும் தன் உணர்வு பெற்ருள். அன்றுமுதல், மக்கள் இனத்தையே வாட்டுவதும் அவளைப் பல ஆண்டு களாகத் துன்புறுத்தி வந்ததுமான கெட்ட காற்றின் கொடுமையினின்றும் முழுவிடுதலை பெற்ருள்.

மற்ருெரு முறை பிசாசு பிடித்த பெண் ஒருத்தியை அவள் உறவினர் நாராயணவரத்திற்கு அழைத்துவந்தனர். அவர்கள் அனைவரும் சுவாமியை வணங்கி அப்பெண்ணை நலமடையச் செய்ய வேண்டிக்கொள்ள வேண்டும் என்ற நோக்கத்தோடு சுமார் இருபது நாட்கள் காத்திருந்தனர். ஆனால் சுவாமியைக்காண வாய்ப்பு கிடைக்கவில்லை. திடீரென; ஒரு நாள் சுவாமி ஆற்றுக்குச் சென்றிருந்த போது, அந்தப் பெண்ணே அங்கே சென்று அவரடி பணிந்தாள். அந்தப் பெண்ணைப் பிடித்திருந்த பிசாசு, சுவாமி தம் கையால் ஆற்றுநீர் ஒரு கை தனக்குக் கொடுத் தால் அந்தப் பெண்ணை முழு உடல் நலத்துடன் விட்டுச் செல்வதாக அந்தப் பெண் மூலமாகப் பேசியது. அவ்வாறு செய்ய சுவாமி மனம் ஒருப்பட்டார். வெகுநாட்களாகத் துன்பப்பட்டுக் கொண்டிருந்த அந்தப் பெண் உடனே நலமடைந்தாள்.

மற்றுமொருமுறை நாராயணவரத்தில் செங்கல்வராய முதலியாருடனும் மற்றும் சிலருடனும் ஒரு குளத்தில் குளித்துக் கொண்டிருந்த சுவாமியிடம், நான்கு ஐந்து பேர்கள் பிடிவாதமான பிசாசு பிடித்திருந்த ஒரு பிராமணப் பெண்ணை கொண்டுவந்து விட்டார்கள். திடீரென்று அந்தப் பெண் அஞ்சாமல் குளத்தில் பாதி தூரம் நடந்து சென்று மூழ்கிவிடப் பார்த்தாள். முதலியார் விரைவாக நீந்திச் சென்று தம் முழு வலிவுடன் அவளைக் கரைக்குக் கொண்டுவந்து சேர்த்தார். அங்கே அவள் தன் உணர்வின்றி விழுந்து கிடந்தாள். சுவாமி குளித்துவிட்டுக் கரைக்கு வந்தவுடன் அந்தப் பெண்ணின் உறவினர், அவளைக் காப்பாற்றும்படிச் சுவாமியை வேண்டிக்கொண்டனர். அவர் அவளை ஒருமுறை சுற்றிவந்து, "எழுந்திரு. என்னைத் தொடர்ந்து வா!" என்ருர். உடனே அவள் தன் உணர்வுபெற்று அவரைப் பின்தொடர்ந்தாள். அவர்கள் சுவாமியோடு ஆறு நாட்களிருந்து பிறகு, முழு நலமடைந்த அந்தப் பெண்ணுடன் தம் இருப்பிடம் சென்றனர்.

வேருெருமுறை பயங்கரமான பிரம்ம ராக்ஷசன் பிடித்த ஒரு இளம் பெண்ணைச் சுவாமியிடம் அழைத்து வந்தார்கள். அவர் இதைப் பார்க்காததுபோல் தம்முடைய ஆள் ஒருவனைத் தம்முன் எரிந்துகொண்டிருந்த நெருப்பில் விறகைப் போடச் சொன்னுர். அந்தப் பிரம்ம ராக்ஷசன் பயங்கரமாகக் கூச்சலிட்டு உரக்கச் சிரித்துவிட்டு, சுவாமியைப் பார்த்துக் கேலியாக, "நான் பிசாசு ஓட்டுவதில் கைதேர்ந்தவர்களையெல்லாம் "பூ" என்று ஊதித் தள்ளிவிட்டிருக்கிறேன். இப்பொழுது என்னவென்ருல் இந்த முட்டாளிடம், அதிலும் கிழவனிடம், கொண்டு வரத் துணிந்திருக்கிறீர்கள். பார்க்கலாம்!" என்றது. ஆனுல் சுவாமி இந்த வீண் மிரட்டலுக்கெல்லாம் செவி சாய்க்காமல் நெருப்பை எரித்துக் கொண்டிருந்தார். இந்தச்

சமயத்தில் ஒரு இடர்ப்பாடு நேரிட்டது. கைவசம் இருந்த விறகு எல்லாம் எரிந்துவிட்டது. பிரம்ம ராக்ஷசத்தின் கோபம் மிகுதியாகிக் கொண்டிருந்தது. ஆகையால், சுவாமி புறப்பட்டுப் போய் ஒரு மரததை வெட்டுவதற்காக எழுந்தார். அவர் மரத்தை வெட்டக் கூடாதென்று பக்கத்திலிருந்த குடிசையொன்றிலிருந்த ஒரு கிழவி பெரிதல்லாத விஷயத்தைப் பெரிதாக்கிச் சுவாமியின் நல்ல தொண்டுக்கு முட்டுக்கட்டைபோட்டு அவரைத் தடுத்தாள். சுவாமி பெரிதும் ஏமாற்றம் அடைந்ததுபோல வீடு திரும்பினர். இந்தச் சமயத்தில் கிராம முன்சீப் வந்து சுவாமியை வணங்கி நின்றார். முன்சீப்பின் உதவியால் அந்த மரத்தை வெட்டி வேண்டிய விறகைப் பெற்றார்கள். நெருப்பு மறுபடியும் எரியத் தொடங்கியது. ராக்ஷசத்தின் கோபம் குறைந்து கொண்டே வரத்தொடங்கியது. நிற்க, மரத்தை வெட்டக் கூடாது என்று சுவாமியை எதிர்த்துத் தடுத்த கெட்ட எண்ணம் கொண்ட கிழவி திடீரென்று மிகவும் வருந்தத்தக்க நிலையில் நோயுற்றாள். அவளைப் பார்த்துக்கொள்ள ஒருவருமில்லை. குடிப்பதற்கு ஒரு வாய் தண்ணீர் கொடுக்கக்கூட ஒருவருமில்லை. அவள் மிக்கத் துன்பப்பட்டுக் கொண்டிருந்தாள். மூச்சுவிடத் திணறிக் கொண்டும் நாவறண்டு தண்ணீருக்காகத் தவித்துக் கொண்டுமிருந்தாள். சுவாமி அருளும் இரக்கமும் உருவானவர். அவர் அங்கே சென்று, தாமே ஒரு கூலி ஆளை அமர்த்தி அந்தக் கிழவியைப் பக்கத்துக் கிராமத்திற்கு அழைத்துச் செல்ல ஏற்பாடுகள் செய்தார். அவளை அங்கே கொண்டுபோய் ஒரு வீட்டுத் திண்ணையின்மேல் கிடத்தினர்கள். அந்த வீட்டார் சுவாமியிடம் மிகுந்த பக்தி கொண்டவர்கள். சுவாமி அவர்களிடம் எல்லா விவரங்களையும் கூறி இறக்கும் தருவாயிலிருந்த அந்தக் கிழவிக்கு வேண்டியதைச் செய்யும்படிக் கட்டளையிட்டார்,

மனமுவந்து அவர்கள் சுவாமியின் சொற்படி நடந்து அவள் இறக்கும் வரையில் அவளைப் பார்த்துக் கொண்டார்கள். அவள் சில நாட்களில் இறந்துவிட்டாள்.

இதற்கிடையில், நாராயணவரத்தில் பிரம்ம ராக்ஷசம் பெரிய பூதம் போலப் பெருங்கூச்சலிட்டும் தொல்லை கொடுத்துக் கொண்டிருந்தது. ஆனால் சுவாமி, சளைக்கா மலும் விடாமலும் நெருப்பைக் கொளுத்திக் கொண்டிருந் தார். பிரம்ம ராக்ஷசத்தின் கடுமை சிறிது சிறிதாகக் குறையத் தொடங்கியது. அந்தப் பெண் அவ்வப்போது, "ஓ. இந்தச் சுரைக்காய் சுவாமி பொல்லாதவர். அவர் என்னை எரித்துவிடுகிறார். இதை என்னால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. நான் அவளை விட்டு விடுகிறேன்." என்று அழுது கொண்டிருந்தாள். அவள் சில நாட்களில் பேச்சு நின்று, மயக்கமாய்க் கீழே விழுந்து உணர்வற்றுச் சில நாட்கள் கிடந்தாள். பிறகு தன் உணர்வுபெற்று முழு நலம் அடைந்தாள்.

இதுமட்டுமன்று. ஏதாவது பாசாங்கு இருந்தால் சுவாமி நொடியில் உண்மையைக் கண்டுபிடித்து விடுவார். வேஷம் போட்டு, ஏமாற்றுவது என்பது சுவாமியிடம் நடவாத காரியம். எல்லாம் உணர்ந்த சுவாமி உண்மையைக் கண்டுபிடித்துத் தவறான வழியில் சென்றவரை அம்பலப் படுத்திவிடுவர். ஒரு சமயம், ஒரு பெண் சுவாமியிடம் வந்து பேய் பிடித்திருந்ததாகப் பாசாங்கு செய்தாள். சுவாமி உடனே, "ஏய்! அம்பட்டனை அழைத்து வந்து அவளை மழுங்க மொட்டை அடியுங்கள்!" என்றார். உடனே அவள் தான் பாசாங்கு செய்ததை ஒப்புக்கொண்டு போய் விட்டாள். வேறொருமுறை, பசப்புப் பேச்சுக்காரனும் ஆஷாடபூதியும் துறவி வேஷங்கொண்டவனுமான ஒரு பிச்சைக்காரன் சுவாமி முன்நின்று, மகிழ்ச்சியுடன் ஆடிக்

கொண்டு, "சுட்டாலும் வாராதையா, ராம நாமம் முட்டாளுக் கெட்டாதையா!" என்று பாடினான். அந்தப் பாட்டைத் தான் உணர்ச்சி வயப்பட்டுப் பக்திப் பரவச மடைந்தவனைப் போல மிக நன்றாகப் பாடினான். ஆனால் சுவாமி மிகவும் கோபங்கொண்டு எழுந்து, "முட்டாளே! அந்தப் பாட்டை என்முன் பாடாதே. என்னைச் சுட்டாய் விட்டது. நான் காப்பாற்றப்பட்டாய் விட்டது. போ! சுடப்படாதவன் எவன் முன்னாவது சென்று பாடு. போய் விடு! போய்விடு!" என்று சுவாமி அதிகாரத் தோரணையில் சொல்லவே அவன் திடுக்கிட்டான். கட்டுப்பட்டவன் போல, சில நிமிஷங்கள் நின்று, அவரடிபணிந்து வணங்கி விட்டுப் போய்விட்டான்.



# சென்னைக்கு எழுந்தருளல்

## அத்தியாயம் 8

முன்னர் குறிப்பிட்டது போல், சுவாமியை முதல் முதலாக நாராயணவரத்தில் பார்த்தது 1874-ஆம் ஆண்டில் ஆகும். அதுமுதல் 1893-ஆம் ஆண்டு வரையில் அவர் நடமாடிக் கொண்டிருந்தது தெற்கே நாராயணவரம் வரையிலும் வடக்கே நாகலாபுரம் வரையிலுமே, பலமுறை சீடர்கள் அவரைச் சென்னைக்கு அழைத்துவந்து நன்மை மிக்க அவருடைய ஆற்றலால் பரவலாகப் பயன்பெறக் கருதி அவரை வற்புறுத்தினாலும் அவர் ஒரே அடியாக வர மறுத்தார். சென்னை போன்ற நகரம் பாவத்திலும் ஊழல் களிலும் முழுகிப் போயிருக்கும் என்றும் நேர்மை யின்மைக்கு இருப்பிடமாயிருக்குமென்றும் இக்காரணங் களால் அது தமக்கு நரகமாகவே இருக்கும் என்றும் சுவாமி ஒரு வேளை நினைத்திருக்கக்கூடும். சுவாமி ஆடம்பர வாழ்க்கையை விரும்பியவர் அல்லர் என்பது நாம் மீண்டும் வற்புறுத்திக்கூற வேண்டிய உண்மையாகும். நகர மக்கள் பகலில் பணப் பெட்டியிலும் இரவில் பஞ்சணையிலுமே தம் முழுக் கருத்தைச் செலுத்துவதை அவர் வெறுத்தார். தீயன செய்து தமக்குப் பெருங்கேட்டை விளைவித்துக் கொள்வதும், காமக் களியாட்டங்களில் பொழுதைப் போக்கித் தம் ஆற்றலைப் பாழ்படுத்திக் கொள்வதும், இன்பத்திலேயே இடைவிடாது ஈடுபட்டிருக்க முனைவதும், பலவகையான விருப்பங்களுக்கு அடிமையாகி அவற்றை நிறைவேற்றிக் கொள்ள முயல்வதும், நகரவாழ்க்கையின் வீண் வம்புகளும், நேர்மையின்மையும், இறுமாப்பும், விருப்பு வெறுப்புகளும், நடுநிலையின்மையும் — இவையெல்லாம்

சுவாமிக்கு ஒவ்வாதன. எனினும் இம்மை மறுமை இரண்டிற்குமே நன்மை தேடிக்கொள்ளும் சிலருடைய விருப்பத்திற்கு அவர் இணங்க வேண்டியதாயிற்று.

Executive Engineer திரு. N. இரத்தினசபாபதி பிள்ளை அவர்கள் மகளுக்கும் எனக்கும் (T. பக்தவத்சலம் பிள்ளைக்கும்) திருமணம் 1893-ஆம் ஆண்டு மார்ச் மாதம் நடக்க ஏற்பாடாயிற்று. திரு. செங்கல்வராய முதலியாரும் காலஞ்சென்ற நாராயணசாமி நாயுடு அவர்களும் சுவாமியை அழைத்து வந்து மணமக்களுக்கு அவருடைய வாழ்த்தைப் பெற்றால் மிக நன்றாயிருக்குமென்று திருமணத்திற்கு நான்கு நாட்கள் முன்னதாகவே நாராயணவரத்திற்குச் சென்றார்கள். அவர்கள் இரண்டு நாட்கள் காத்திருந்து, சுவாமியின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கி, வெற்றிலை, பாக்கு, தேங்காயுடன் கர்ப்பூர ஆர்த்தி செய்து திருமணத்திற்கு அவரை அழைத்தார்கள். அதுவரை சென்னை வரமறுத்த சுவாமி தம் விருப்பத்திற்கு இணங்குவார் என்று அவர்கள் கனவிலும் கருதவில்லை. ஆனால் அவர் உடனே இணங்கியதும், திருமணத்திற்காகச் சென்னைக்கு வர அருள் கூர்ந்ததும் அவர்களுக்கு இனிய வியப்பாக இருந்தது. உடனே அவர் தம் மூட்டை, முடிச்சுகளுடன் புறப்பட்டுவிட்டார். தனியாக அமர்த்தப்பட்ட வண்டியில் அவரைப் புத்தூர் ரெயில்வே ஸ்டேஷனுக்கு அழைத்து வந்தனர். இனிய பண்பும் உதவிசெய்யும் தன்மையு முடையவருமான ஸ்டேஷன் மாஸ்டரைத் தனிப் பெட்டியாகத் தமக்கு ஒதுக்குமாறு அடியார்கள் வேண்டிக் கொண்டார்கள். அவர் தம்மாலியன்றவரை முயன்றார். ஆனால் எதிர்பாராதபடி அளவுக்கு மீறிய மக்கள் பிரயாணம் செய்ததால் தனிப்பெட்டி தரமுடியவில்லை என்று வருத்தத்துடன் தெரிவித்தார், ஆனால் கடவுள் செயல் நம்மால் கணக்கிட முடியாதது. எதிர்பாராதபடி, தனிப்

பெட்டியிலிருந்த பிரயாணிகள் புத்தூரில் இறங்கினார்கள். ஸ்டேஷன் மாஸ்டர் நிகழ்ந்ததைக் குறித்து மிகவும் வியப் படைந்தார். விரும்பியபடி இடம் கிடைத்தது என்றும் கடவுள் செயல் எதிர்பாராத பொருத்தம் என்றும் நினைத் தார். சுவாமியின் பெருமையை ஒப்புக்கொண்டு மிகவும் பயபக்தியுடன் அவர் அவர்களையெல்லாம் அந்தத்தனிப் பெட்டியில் ஏற்றினார். ரெயில் வண்டி அரக்கோணம் சேர்ந்ததும் அடியார்கள் சென்னைக்குச் சுவாமி வருவதாகத் தந்திச் செய்தி அனுப்பினார்கள். இச்செய்தி காட்டுத் தீப் போல் பரவியதால், ரெயில் சென்னை சேர்வதற்கு முன்பே சுவாமியை அன்புடன் வரவேற்பதற்காக ஏழைகளும் பணக்காரர்களுமாக நூற்றுக்கணக்கானவர் சென்ட்ரல் ஸ்டேஷனில் கூடிவிட்டனர். சுவாமிக்கு மாலை அணிவித் தார்கள். சென்னை நகராண்மைக் கழகத்தலைமை அதிகாரி டோக் வெங்கடபதி நாயுடு அவர்களின் விருப்பத்திற் கிணங்கிச் சிந்தாதிரிப்பேட்டையிலிருந்த அவர் வீட்டிற்குச் சுவாமி சென்றார். அங்கே அவரிடம் இரண்டொரு நோயாளிகளை அழைத்துவந்தனர். அவர் அவர்களை வாழ்த் தியதும் நோய் மாயமாகமறைய அவர்கள் உடனே வியக்கத் தக்க வகையில் உடல் நலம் பெற்றனர். அங்கிருந்து, சுவாமி எழும்பூரிலிருந்த ஆராவமுது நாயுடு வீட்டுக்குச் சென்று அன்றிரவு அங்கேயே தங்கினார். அடுத்த நாள் காலை அவர் சிற்றுண்டி அருந்தியவுடன் திருமண இல்லத்திற்கு அழைத் துச் செல்லப் பட்டார். திருமணம் மிகச் சிறந்த வகையில் நடைபெற்றது. சுவாமி வந்ததால் அழைக்கப்பட்டவர் களும் அழைக்கப்படாதவர்களுமாகச் சமாளிக்க முடியாத அளவுக்குக் கூட்டம் சேரவே எள் விழுவதற்கும் இட மில்லை. மாடியில் நன்றாக அலங்காரம் செய்யப்பட்ட பந்தலுக்குள் எல்லோருக்கும் நன்றாகத் தெரியும்படியாகச் சுவாமியை உட்கார வைத்தார்கள். சுவாமியை வணங்கு

வதும் திருமணத்தைப் பார்ப்பதுமாக மக்கள் வந்து கொண்டும் போய்க்கொண்டு மிருந்தனர், சுவாமி மண மக்களை வாழ்த்திவிட்டுத் தம் கையாலேயே சுமார் பத்து நிமிஷங்கள் சேஷை இட்டார். அதற்குப் பிறகுதான் மற்றவர்கள் சேஷையிட்டார்கள். சுவாமி இவ்வாறு அங்கே உட்கார்ந்திருந்தபோது மக்கள் தேங்காய் உடைப்பதும் சுவாமியின் திருவடியில் வீழ்ந்து வணங்குவதுமாக இருந்த னர், அந்த இடம் ஒரு கோவிலோ என்று சொல்லும்படி யாகி விட்டது. ஆண்களும் பெண்களும் திரள்திரளாக வந்து கொண்டும் போய்க்கொண்டுமிருந்ததால் போலீஸ் உதவியையும் நாடவேண்டியதாயிற்று. சுவாமி அப்போது அன்றலர்ந்த ரோஜா மலரைப் போல அகமகிழ்ச்சி யோடிருந்தார். அவர் கண்கள் வைரங்களைப்போல மின்னிக் கொண்டிருந்தன. அவர் முகத்தில் அறிவு ஒளி வீசிக்கொண்டிருந்தது. ஆயிரக்கணக்கில் வந்துகொண்டும் போய்க்கொண்டுமிருந்தவர்களுடைய தேவைகளைக் கவனிப் பதிலும், அவர்கள் எண்ணங்களைத் தெரிந்து சொல்வதிலும் கடந்த நிகழ்ச்சிகளைக் குறிப்பிடுவதிலும், இனி நிகழ இருந்தவற்றை முன்னதாக அறிவிப்பதிலும், சிக்கல்களைத் தீர்ப்பதிலும், குறைகளைச் சுட்டிக்காட்டுவதிலும், மக்களுக் குள் கருத்து வேற்றுமையையோ, உள்ளக் கோளாற் றினையோ, உண்டெனின், போக்குவதிலும், சுருங்கச் சொல்லின், கவலையுடன் வந்தவர்கள் அமைதிகொள்ளுமாறு ஆயிரம் ஆயிரம் உதவிகளும் அருட்செயல்களும் செய்வதில் சுவாமி முழுவதும் ஈடுபட்டிருந்தார்.

அங்கே இருக்கும்போது திடீரென்று சுவாமி, "என் தம்பி வருகிறான்! என் தம்பி வருகிறான்!" என்று சொன்னார். அவர் சொன்னதன் பொருள் மக்களுக்கு விளங்கவில்லை. ஐந்து நிமிஷங்களுக்குள் கண்ணுக்குட்டி சுவாமி என்னும் வேறொரு மஹான் தம்முடைய மூட்டை

முடிச்சுகளோடும் அங்கே வந்து சேர்ந்தார். (Deputy Collector ஆகவும் Stationary Officer ஆகவும் இருந்த) காலஞ்சென்ற கலியாண சுந்தரம் செட்டியார் சுவாமியிடம் வந்து அவரடிபணிந்து தம் மனக் குறையைத் தெரிவித்தார். சுவாமி அவருக்கு ஆறுதல் கூறி, குறைகளைப் போக்கு வதற்கான வழிவகைகளைக் குறிப்பிட்டார். திருமணம் முடிந்தவுடன், சுவாமிகள் இருவரும் அங்கே உணவருந் தினார்கள். மாலை ஐந்து மணியானவுடன், சுவாமி, "நான் இனியும் இங்கு இருக்க முடியாது. தகாத மக்கள் வரவிருக் கின்றார்கள் !" என்று தாமே சொல்லிக்கொண்டு எழுந்து விட்டார். மாலையில் நடக்கவிருந்த இசை விருந்திற்காக வரும் பாடகிகளைப் பற்றி இவ்வாறு குறிப்பிட்டார். சுவாமி அங்கிருந்து புறப்பட்டுப் போனவுடனேயே மயக்கையும் புன்சிரிப்பையும் கவர்ச்சியான பேச்சையு முடைய அப்பெண்கள் வந்து சேர்ந்தனர். ஒருவரும் ஒன்றும் சொல்லாமலே இவற்றைப் பற்றியெல்லாம் தம் மன ஆற்றலால் சுவாமி தெரிந்துகொண்டார்.

சுவாமி, காலஞ்சென்ற பார்த்தசாரதி நாயுடு அவர் களின் வீட்டில் ஒரு நாளும், காலஞ்சென்ற ஆராவமுது நாயுடு அவர்களின் வீட்டில் ஒரு நாளும் தங்கிய பின்னர், இராயப்பேட்டை லண்டன் துரைசாமி நாயுடு என்று கூறப்பெறும் வெங்கடராமானுஜலு நாயுடு அவர்களின் வீட்டிற்குப் போனார். (இப்போது இவ்வீட்டிற்கு "மோஹன விலாஸ்" என்று பெயர்). இங்கே சுவாமிக்குச் சிறந்த பூஜை ஒன்று ஏற்படாயிருந்தது. இதற்குள் என் திருமணத்தின் (T. பக்தவத்சலம் பிள்ளையின் திருமணம்) தொடர்பான எல்லா நிகழ்ச்சிகளும் நிறைவேறியிருந்தன. திவான் பஹதூர் P. இராஜரத்தின முதலியார் C.I.E. அவர்களைப் பார்த்துச் சிறிதுநேரம் பேசிக்கொண்டிருந்த பிறகு என்னுடைய மாமனாராகிய திரு. N. இரத்தின

சபாபதிபிள்ளை அவர்களும் நானும் பூஜை நடந்த இடத்திற்குச் சென்றோம். நான் சுவாமியுடைய திருவடிகளில் வீழ்ந்து வணங்கியதும், உடனே அவர், "போய் மேஜோடு போட்டுக் கொண்டிருக்கிற ஒருவரைப் பார்." என்றார். ஒரு நிமிஷத்திற்குப் பின்னர், "நீ பிள்ளை பெறுவாய் என்று பார்த்தால் பெண்ணைப் பெறுகிறாய்" என்று சொன்னார். நாங்கள் ஐந்து நிமிஷத்திற்கு முன்பு திரு. முதலியாரிடம் என் வேலையைப் பற்றியும் பிறக்கக்கூடிய குழந்தைகளைப் பற்றியும் பேசியதைச் சுவாமி உணர்ந்து குறிப்பிட்டார். நாங்கள் பேசிக் கொண்டிருந்ததை எப்படி அவர் அறிந்துகொண்டு அதைப்பற்றிப் பின்வரக் கூடியவற்றை முன்னதாகவே அறிவித்தார் என்பது எனக்கு மிகவும் வியப்பாக இருந்தது. ஆனால் அவர் கூறியது உண்மையாகவே நிகழ்ந்தது. எனக்கு முதலில் இருபெண் குழந்தைகளும் பிறகு ஒரு ஆண் குழந்தையும் பிறந்தன. இவ்வாறாகச் சுவாமியின் முதல் வருகை முடிவுற்றது. சுவாமியை நாராயணவரத்திற்குச் சுமார் பன்னிரண்டு சீடர்கள் அழைத்துச் சென்றனர். அங்கே அவர்கள் சுமார் ஒரு வாரம் தங்கிவிட்டுப் பிறகு சென்னைக்குத் திரும்பினார்கள்.

நான்கு மாதங்களுக்குப் பிறகு திரு. செங்கல்வராய முதலியார் நாராயணவரத்திற்குச் சென்றார். சுவாமி அங்கே இல்லை. சுவாமி நின்றை என்ற ஊருக்குப் போயிருந்தார். ஆதலின் முதலியாரவர்கள் அங்கே சென்று சுவாமியைச் சந்தித்தார். இருவரும் நாராயணவரத்திற்குத் திரும்பினார்கள். அங்கே சில நாட்கள் தங்கிவிட்டு மீண்டும் சென்னைக்கு வந்தார்கள். இம்முறை எழும்பூரில் காலஞ்சென்ற ஆராவமுது நாயுடு வீட்டில் சுவாமி தங்கினார். சுவாமியுடைய அடியார்கள் அனைவரும் அங்கே வந்து சேர்ந்தனர். ஆனால் செலவுக்கு வேண்டிய

பொருளைத் தம்மாலியன்ற வரை அனைவரும் கொடுப்பது என்பது ஆராவமுது நாயுடு அவர்களுக்கு அருவருப்பாக இருந்தது. அவர் நல்ல இயல்புடையவர்தாம். எனினும் இந்தக் கோணலான எண்ணம் அவரைப் பற்றிக் கொண்டது. ஆகையால் காலஞ்சென்ற பார்த்தசாரதி நாயுடு, B. V. இராமானுஜ நாயுடு போன்றவர்கள் இதில் பங்கு கொள்வதைச் சிறிது தடுத்தார். அவர்கள் கலந்து பேசி இதைத் திரு. செங்கல்வராய முதலியாருக்குத் தெரிவித்தார்கள். எப்போதும் தாம் நினைத்ததை ஒளிக்காமல் சொல்லிவிடும் முதலியார் இத்தகைய நிகழ்ச்சிகளில் ஒருவரே எல்லாவற்றையும் செய்ய வேண்டுமென்பது தவறு என்றும் எல்லோரும் சேர்ந்து செய்வதுதான் நல்லது என்றும் கூறினர். ஆராவமுது நாயுடு கோபங்கொண்டு முதலியாரை வைது செய்த அமர்க்களத்தால் எல்லாம் குழப்பத்திற்குள்ளாயிற்று. சுவாமி முதலியாரிடம் சும்மா இருக்கச் சொல்லிச் சைகை காட்டினர். மாலையில் சுவாமி திடீரென்று மிகவும் கோபங் கொண்டு, ஆராவமுது நாயுடுவிடம் கடுமையாகப் பேசி, வேறு சிலரைக் கண்டித்து, "கருவாடு!" என்று கூச்சலிட்டார். சுவாமி அங்கே இருக்கவும் உணவு கொள்ளவும் மறுத்தார். பிச்சைப் பாத்திரத்தை எடுத்துக்கொண்டு முதலியாரை அழைத்துக் கொண்டு சுவாமி பிச்சை எடுக்கத் தொடங்கினர். சிந்தாதிரிப்பேட்டையிலுள்ள ஒரு வீட்டிற்குச் சென்றனர். அங்கே நெடுநாட்களாகத் காய்ச்சலால் வருந்திக்கொண்டிருந்த ஒருவரை உடனே நலமுறச் செய்தார். மறுநாள் அடியார்கள் எல்லோரும் ஒன்று சேர்ந்து ஒற்றுமையாக நடந்துகொண்ட பிறகுதான் சுவாமி நாயுடு அவர்கள் வீட்டில் தங்கி உணவு கொள்ள உடன்பட்டார். சில நாட்களுக்குப் பிறகு சுவாமி நாராயணவரத்திற்குத் திரும்பிச் சென்றார்.

நான்கு மாதங்களுக்குப் பிறகு காலஞ்சென்ற டோக் நாராயணசாமி நாயுடுவும் திரு. செங்கல்வராய முதலியாரும் நாராயணவரத்திற்குச் சென்றனர். ஆனால் சுவாமியை நாகலாபுரத்திற் கருகேயுள்ள மாம்பாக்கம் என்னும் கிராமத்தில்தான் பார்க்க முடிந்தது. சுவாமியை நாராயண வரத்திற்கு அழைத்துவர ஒரு வண்டியை அமர்த்தினார்கள். ஆனால் வண்டிக்காரன் வண்டியை ஓட்டத் தொடங்கிய போது, சுவாமி. "ஓட்டாதே, ஓட்டாதே" என்று உரக்கச் சொன்னார். அவர் உரக்கவும் ஓயாமலும் சொல்லவே வண்டிக்காரன் கலங்கிப் போய் ஒன்றும் செய்ய முடியாமல் நின்றுவிட்டான். எல்லோரும் அங்கேயே அந்த இரவு தங்கிவிட்டார்கள்; ஆனால் ஒரு மணி நேரத்திற்குள் பலத்த மழை பெய்யத் தொடங்கியது. எங்கே பார்த்தாலும் பெருவெள்ளம். இதற்காகத்தான் சுவாமி அவர்களை முன்னதாகவே எச்சரிக்கை செய்தார். அடுத்த நாள் காலை அவர்கள் - மாம்பாக்கத்திலிருந்து புறப்பட்டு நாராயண வரத்தில் சில நாட்கள் தங்கிப் பிறகு சென்னைக்கு வந்தனர். சுவாமி, இம்முறை, திருவல்லிக்கேணியில் உள்ள காலஞ் சென்ற கெத்திகை பார்த்தசாரதி நாயுடுவின் பங்களாவில் தங்கினார். மக்கள் திரள்திரளாக அவரிடம் சென்றனர். அவர்கள் எண்ணிக்கை கணக்கில் அடங்காது. சுவாமி பல அற்புதங்கள் செய்தார். அவரிடம் சென்றவர்களெல் லாம் மிகவும் திருப்தி அடைந்தார்கள். அவர்கள் நம்பிக்கைக்கு அவர் பெரிதும் ஏற்றவர் என்பதை அவர்கள் உணர்ந்தார்கள்.

சுவாமி சென்னையில் தங்கியிருந்த போது ஒருநாள் குதிரை வண்டியில் (கோச் வண்டியில்) போய்க்கொண் டிருந்தார். வழியில் ஒரு முஸ்லீம் துறவி—ஒரு மஸ்தான்—அவர் பெயர் யாருக்கும் தெரியாது—சுவாமியைச் சந்தித்து மகிழ்ச்சியோடு பேசினார், சுவாமி அவரைப் பாராட்டி

இந்நகரத்தின் பழைய மன்னர்களின் வழித் தோன்றல் என்று அவரைக் குறிப்பிட்டு அவருக்குச் சில பழங்கள் கொடுத்துவிட்டு விடைபெற்றுக் கொண்டார்.

உண்மையில் நிகழ்ந்தவை என்று கண்டு அறியப்பட்ட சில நிகழ்ச்சிகளை இங்கே குறிப்பிடுவோம்.

(1) காலஞ்சென்ற ஆராவமுது நாயுடு அவர்களுக்கு முதுகில் ஒரு பெரிய ராஜகட்டி வந்து மிகவும் துன்பப் பட்டார். மருத்துவர்கள் உடனே கட்டியைக் கீறினால் தான் (Operation) அவர் பிழைக்க வழியுண்டு என்று கூறினார்கள். சுவாமியுடைய பெருமையில் பெரும் நம்பிக்கை கொண்டிருந்த நாயுடு அவர்கள் தம்முடைய நிலைமையைப் பற்றிச் சுவாமியிடம் கூறச்சொல்லி முதலி யார் அவர்களைக் கேட்டுக் கொண்டார். சுவாமி, கத்தி யையே வைக்க வேண்டாமென்றும் ஆவார இலையை அரைத்துப் போடலாம் என்றும் முதலியாரிடம் கூறினார். மருத்துவர் செய்யும் அஞ்சத்தக்க ஆபரேஷனுக்குப் பதி லாகச் சுவாமி சொன்ன எளிய மருத்துவ முறையே மேலென்று எண்ணினார். இரண்டு நாட்களுள் அந்தக் கட்டி உடைந்து நாயுடு அவர்களுக்கும் அவர் நண்பர் களுக்கும் ஆறுதல் அளித்தது. ஆனால் பல நாட்கள் வரை மிகுதியாகச் சீவந்து கொண்டிருந்தது. இதனால் நோயாளி மிகவும் இளைத்துப் போனார். இரண்டாம் முறை சுவாமி யிடம் முறையிட்டபோது, அவர் அருள்கூர்ந்து தம் எதிரில் இருந்த ஒரு சாதாரண பச்சிலையைக் காட்டி அதைப் போடச் சொன்னார். இது வியக்கத்தக்க பலனை அளித்தது. சீழ் வடிதல் நின்று புண்முற்றிலும் ஆறிவிட்டது. மருத் துவர் புண் பச்சிலைகளால் ஆறவில்லை யென்றும் மஹாத் மாவின் ஆற்றலால்தான் ஆறியது என்றும் ஒப்புக் கொண்டார்.

(2) ஒரு நாள் சுவாமி, திருவல்லிக்கேணி பங்களாவின் வாயிலில் உட்கார்ந்திருந்தபோது, "என் மாமியார் எனக்குத் தின்பண்டங்கள் கொண்டு வருகிறாள்" என்று சொன்னார். திரு. செங்கல்வராய முதலியார் அங்கு யாரும் வரவில்லை என்று சொன்னார். சுவாமி மறுபடியும், "பார். அவர்கள் வருகிறார்கள், வந்து விட்டார்கள்" என்று சொன்னார். இதற்குள் அங்கே ஒரு வண்டி வந்து நின்றது. திரு. பக்தவத்சலம் பிள்ளையின் மனைவியும் அவர் மகள் கிருபா பக்தவத்சலமும் தின்பண்டங்கள் முதலியவை கொண்டு வந்தார்கள். சுவாமி ஒரு அப்பத்தைத் தம் தலையிலும் இரண்டு அப்பங்களைத் தம் தோள்களிலும் இரண்டைத் தொடையிலும் வைத்துக் கொண்டார். ஒன்றிரண்டு அப்பத்தைத் தாம் சாப்பிட்டுவிட்டு எஞ்சியவற்றை அங்கே வந்திருந்தவர்களுக்குப் பங்கிட்டுக் கொடுததுவிட்டார். கிருபா பக்தவத்சலம் அப்போது மூன்றுவயதுக் குழந்தை. சுவாமி இக்குழந்தையைத்தான் தம் மாமியார் என்று அழைப்பது. குழந்தை சுவாமியைப்பார்த்து வேடிக்கையாக, ஏன் சுவாமி தம் தாடியை முடிபோட்டுக் கொண்டிருந்தார் என்றும் ஏன் மூட்டை முடிச்சுகள் வைத்திருந்தார் என்றும் இவ்வாறெல்லாம் கேட்டது. மஹாத்மா புன்சிரிப்புடன், "அங்கேயே நீ எல்லாவற்றையும் கற்றுக்கொண்டு இங்கே வந்திருக்கிறாயே! நான் உனக்கு என்ன பதில் சொல்ல முடியும்?" என்று சொன்னார்.

(3) அந்த இடத்திலேயே மற்றொருமுறை, பிரஸிடென்ஸி மாஜிஸ்ரேட் ஆக இருந்த திரு P. இராஜரத்தின முதலியார் M. A. அவர்கள் ஒரு பிராமண நண்பருடன் சுவாமியைப் பார்க்கவந்தார். இருவரும் சுவாமி கால் மாட்டில் உட்கார்ந்திருந்தார்கள். சுவாமி திடீரென்று அந்தப் பிராமணரை உதைத்தார். அங்கிருந்தவர்களில் ஒருவர் அவ்வாறு செய்ய வேண்டாமென்று சுவாமியை

வேண்டிக்கொண்டார். புதுமையாக வந்த அந்தப் பிராமணர் மிகவும் திருப்தி அடைந்தவராகி மனத்திலேயே சுவாமியின் ஸ்ரீ பாதஸ்பர்ஸத்திற்காகத் (திருவடிதம் மீது படவேண்டுமென்று) வேண்டிக்கொண்டதாகவும் இதைச் சுவாமி உணர்ந்து தம் விருப்பத்தை நிறை வேற்றினுர் என்றும் கூறினுர். மீண்டும் ஒரு முறை தம்மை உதைக்கும் படிச் சுவாமியை வேண்டிக்கொண்டார். சுவாமி அவ்வாறே செய்தார். அந்தப் பிராமணர் மன நிறைவு கொண்டார்.

(4) திவான்பஹதூர் P. இராஜரத்தின் முதலியாரின் பெண்களில் ஒருவர் மிகவும் நோயுற்றிருந்தார். சுவாமியை அழைத்துவர ஒரு வண்டி அவர் வீட்டிலிருந்து அனுப்பப் பட்டது. ஆனுல் சுவாமி போக மறுத்துவிட்டார். திரு. முதலியார் அவர்களின் உறவினர் ஒருவர்—அவர் பிள்ளைகளில் ஒருவராய் இருந்திருக்கலாம்—திரும்பத்திரும்பத் தமது வீட்டுக்குச் சுவாமி எழுந்தருளுமாறு வேண்டிக் கொண்டார். சுவாமி அந்தப் பெண் தேறமாட்டாள் என்று அங்கிருந்த அனைவரும் உணர்ந்துகொள்ளச் செய்தாராம். அவ்வாறே அந்தப் பெண் இரண்டொரு நாட்களில் இறந்து விட்டாள்.

இந்நிகழ்ச்சிக்குமுன் ஒரு முறை இராஜரத்தின முதலியார் வீட்டுக்கு அழைத்துச் செல்லப்பட்டார். அங்கே போனவுடன் சுவாமி ஒரு பாய் வேண்டுமென்று கேட்டு "நான் படுத்துக்கொள்ளவேண்டும்; நான் படுத்துக் கொள்ளவேண்டும்" என்று சொன்னுர். இதுவும் பின்னுல் நடக்க விருந்த துன்ப முடிவைக் குறிப்பிடுவதாக இருந்தது.

இதைப் போலவே சுவாமியை என்னுடைய வீட்டிற்கு ஒரு நாள் அழைத்துவந்து என்னுடைய இரண்டாவது மகளை வாழ்த்துமாறு கேட்டுக்கொண்டேன். அவர் மிகவும்

வருந்தி அந்தக் குழந்தை நெடுநாள் உயிருடன் இருக்காது என்று தெளிவாகக் குறிப்பிட்டார். சில மாதங்களில் அந்தக் குழந்தை எதிர்பாராதபடி இறந்துவிட்டது. இந்தக் குழந்தையை அவர் பார்த்தவிதம், நம்பிக்கையற்ற முறையில் அதைப்பற்றிப் பேசியவிதம், சொன்ன குறிப்புக்கள் அவர் என்னுடைய முதல் பெண்ணுடன், சிறந்த இடத்தில் இருப்பதுபோல, மகிழ்ச்சி ததும்பும் முகத்துடன் பழகியதற்கு நேர்மாருக இருந்தன. என்னுடைய முதல் மகள் சுவாமி அருளால் மிகவும் நன்ருக இருக்கிருள் என்று மகிழ்ச்சியுடன் தெரிவிக்கிறேன்.

(5) திரு. முருகப்ப செட்டியார் என்பவர் சுவாமியிடம் மெய்யன்பு கொண்ட அடியாராவர். சுவாமி சென்னையில் இருப்பதாகக் கேள்விப்பட்ட அவர், சுவாமியைக் கண்டு வணங்குவதற்காக வந்தார். சுவாமிக்கு நேர் எதிராக அவர் உட்கார்ந்திருந்தபோது சுவாமியின் ஆட்களுள் ஒருவர் கடுமையாகப் பேசி அவரை எழுந்துபோய்விடச் சொன்னுர். போகச் சொன்னவர் குரல் மரியாதைக் குறைவாகவும் நடத்தை நாகரிகமின்றியுமிருந்தன. செட்டியார் உளம் வருந்திஞர். ஆனுல், உடனேயே அந்த ஆளுக்கு அடிபட்டு கண்களின் கீழ் இமைகளிலிருந்து இரத்தம் பெருகிற்று. பொருள்களின் மதிப்பு தெரியாதவனும், பண்பில்லாதவனுமான அந்த ஆளுக்கு அது தகுந்த தண்டனை என்பதைப் போலச் சுவாமி புன்முறுவல் பூத்தார். பக்தி நெறியின் தொடக்க நிலையிலுள்ளவரும் மஹாத்மாவின் அருட்பார்வைக்குப் புதிதாகப் பாத்திரமான வருமான தம்மிடம் சுவாமி அவ்வளவு அக்கரை காட்டியது குறித்துத் திரு. செட்டியார் மகிழ்ந்து சுவாமியின் புகழ்பாடிஞர். எனினும் சுவாமியிடம் நெருங்கிப் பழகச் சற்று அஞ்சிஞர். சுவாமியுடைய பரந்த கருணையையும் பிறர்க்கு நலம் செய்யும் அளவற்ற அன்பையும் சோதிக்க எண்ணிஞர். உண்மை

யாகவே மஹாத்மா என்ற பெயருக்குச் சுவாமி உரியவராக இருந்தால் தம்மை ஒரு வாரத்திற்குள் அழைக்கவேண்டு மென்று செட்டியார் தமக்குள்ளேயே எண்ணிக்கொண் டார். இவ்வாறு நினைத்த அன்பர் வெளியில் ஒரு தென்னை மரத்தடியில் காத்துக்கொண்டிருந்தார். நான்கு நாட்கள் கழிந்தன. ஐந்தாம் நாள் சுவாமி அங்கிருந்த ஒரு அடியாரை அழைத்து இந்த நல்ல மனிதரை அழைத்துவரச் சொன்னார். வெளியில் யாருமில்லை என்று சொன்னதற்கு, சுவாமி, " அங்கே தென்னை மரத்தடியில் உட்கார்ந்து கொண்டிருக் கிறான். ஆம் ; கண்ணுக்கு எட்டாத இடத்தில் இருக்கிறான். போய்ப்பார். உடனே இங்கே அழைத்துவா " என்று வற் புறுத்திச்சொன்னார். சுவாமி மிகச் சரியான விவரங் களுடன் கூறிய இடத்திலேயே செட்டியார் இருப்பதைக் கண்டு அனைவரும் வியந்தனர். செட்டியார் சுவாமியிடம் அழைத்துவரப்பட்டார். சுவாமியின் பெருமையில் நம் பிக்கை கொண்டார். இன்றுவரை அவர் சுவாமியிடம் ஆழ்ந்த அன்பும் சிறந்த பணிவும் கொண்டு, ஆண்டுதோறும் நடைபெறும் சுவாமியின் குருபூஜைக்குத் தவறாமல் வருகிறார்.

(6) ஓரிரவு, சுமார் 12-30 மணிக்குச் சுவாமி, "பாவம்! பாவம்! ஓர் ஏழைப்பெண் இறக்கப் போகிறாளே ! அங்கே! அங்கேபோய் குளத்தில் விழுந்துவிட முயலுகிறாளே. உடனே விரைந்து போங்கள்," என்று உரக்க அழுது கொண்டு சொன்னார். அப்போது அங்கிருந்த அவரடியார் கள் அச்சத்தால் முகம் வெளுத்து. சின்னபின்னம் செய்யப் பட்ட உடலையும் தலையையும் கண்டவர்களைப்போல நடுங்கி, அங்கிருந்த தோட்டத்தின் தொலைவான மூலையிலிருந்த ஒரு குளத்திற்குக் காற்றெனக் கடுகிச் சென்றனர். ஆனால் அவர்களுக்குப் பேர் ஏமாற்றமாக அங்கே ஒருவரும் இல்லை. மீண்டும் சுவாமியிடம் இயன்றவரை விரைந்து வந்து, தாம்

தேடியும் பயனில்லை என்று விரிவாகச் சொன்னார்கள். சுவாமி அவர்கள் தவறான இடத்தில் தேடியதற்காகக் கடிந்துகொண்டு, தாம் குறிப்பிட்ட தொலைவிலுள்ள குளத்தைப் பற்றிய விவரங்கள் கூறினார். மறுபடியும் அவர்கள் சுவாமி குறிப்பிட்ட இடத்திற்கு விரைந்து சென்றனர். அங்கே ஒருபெண் தன் வாழ்க்கையை முடித்துக் கொள்வதற்கான ஏற்பாடுகள் செய்துகொண்டு குளத்தில் ஆழமான நீரிருந்த இடத்தில் அந்த நள்ளிரவில் முழுகிவிட முயலுவதைப் பார்த்தார்கள். அடியார்கள் அவளுடன் ஒருமணி நேரத்திற்கு மேலாகவே வாதாடினார்கள். தன்னை மிகவும் வருந்தித் துன்பத்தில் முழ்கச் செய்த நோயின் காரணமாக அவள் இறந்துபோக விரும்பியதாகக் கூறினாலும், அவ்வாறு செய்ய அவர்கள் அவளை விடவில்லை. இறுதியாகத் தன்னையே மாய்த்துக்கொள்ள அவள் செய்த முயற்சியை விடச்செய்து அவள் மனத்தை மாற்றி அவளைக் காப்பாற்றினார்கள். தற்காலத்தில் மிகச் சிறந்தவரான இந்த மஹாத்மாவின் அருந்தொண்டுகளில் ஒன்றான இந் நற்செயலை அவர் கட்டளைப்படி செய்துவிட்டு அவரிடம் திரும்பிவந்தார்கள்.

---

# சுவாமிகள் மறைவு

## அத்தியாயம் 9

சுவாமியிடம் சென்றவர்களுள் ஒருவராவது அதிருப்தி அடைந்தவராகத் திரும்பியதில்லை. எல்லோரும் அவர் ஒரு சாதாரண மனிதர் அல்லர் என்றே எண்ணினார்கள். ஆம்; சிலர், பகவத் கீதையில் ஸ்ரீ கிருஷ்ணன், "யுகங்கள் தோறும் நான் பிறக்கிறேன்" என்று வாக்களித்துள்ளதை நிறைவேற்றுவதாகக்கொண்டு சுவாமியை ஸ்ரீ கிருஷ்ணனின் அவதாரமென்றே கருதுகிறார்கள். உண்மை எதுவாயினும் சரி, சுவாமி பேராற்றலும் இயற்கை வரம்புக்கு மேற்பட்ட தன்மையும் உடையவர் என்பது மறுக்க முடியாத செய்தி.

தாம் செய்யவேண்டிய வேலை முடிந்து விட்டபடியால், சுவாமி இவ்வுலகத்தைவிட்டு நீங்க உறுதிகொண்டார். கொள்கைத் தெளிவற்றவர்களைப்போல அவர் தம் மனத்தை அடிக்கடி மாற்றிக் கொள்பவரல்லர். சுவாமி சமாதி அடைவதற்குச் சில மாதங்களுக்குமுன் திரு. இரத்தினசபாபதி பிள்ளை அவர்களின் மனைவியும் குழந்தைகளும் சுவாமியைப் பார்க்கச் சென்றனர். சுவாமியை வணங்கித் தாம் மேற்கொள்ள இருந்த பயணத்திற்காக விடைகேட்டனர். எக்ஸிகூடிவ் என்ஜினீராகத் தொலைவான ஊரிலிருந்த திரு. N. இரத்தினசபாபதி பிள்ளையிடம் அவர்கள் செல்ல இருந்ததால் சுவாமியை மறுபடியும் பார்த்து வணங்கும் பேறு எப்பொழுது கிடைக்குமோ என்று எண்ணியவர்களாய், வேறு எந்த நினைப்புமின்றி, பேசாமல், வருத்தம் நிறைந்த உள்ளத்துடன் சுவாமியின்

முன் நின்ருர்கள். சுவாமி உடனே, "சித்திரத்தே குத்தி, அப்புறத்தே வைத்திருக்கிறதே! அதைப் பார்த்துக் கொள்வதுதானே!" என்ருர். இவ்வாறு சொல்லிக் கொண்டே அங்கே சுவற்றில் மாட்டியிருந்த தம் புகைப் படத்தைச் சுட்டிக் காட்டினூர். இது அவர்கள் இறுதிச் சந்திப்பு என்பதற்கு அறிகுறியாக இருந்தது.

சுவாமி சமாதி அடைவதற்கு நான்கு ஆண்டுகளுக்கு முன், திரு. செங்கல்வராய முதலியாரும் காலஞ் சென்ற ஆராவமுது நாயுடுவும் சுவாமியைப் பார்க்கச் சென்ருர்கள். நாராயணவரத்தில் அவர்களிருந்த பொழுது, சென்னையில் ஆராவமுது நாயுடு அவர்கள் வீட்டில் ஒரு குழந்தை மிகவும் நோயுற்றிருப்பதாகவும் நாயுடு அவர்களை விரைந்து உடனே வருமாறு கூறியும் ஒரு கடிதம் வந்தது. திரு. செங்கல்வராய முதலியார் அக்கடிதத்தைச் சுவாமியின் கைகளில் வைத்து நாயுடு அவர்களைச் சென்னைக்குவர வேண்டுமென்று சொல் கிருர்கள் என்ருர். முதலியார் அவர்கள் சுவாமியிடம் சொன்ன சொற்கள், "அவர் எப்போது (சென்னைக்குப்) போகப் போகிருர் என்று கேட்கிருர்கள்" என்பனவாம். இதற்குச் சுவாமி, "நான் ஆடிமாதத்தில் போவேன் என்று அவர்களுக்குச் சொல் என்ருர். இந்த விடை முதலியார் அவர்களைச் சுவாமியின்மறைவைப்பற்றிநினைக்கச்செய்தது. சுவாமி இவ்வுலகைவிட்டு ஆடிமாதத்தில் மறைவார் என்று நினைத்தார். இது அவ்வாறே நிகழ்ந்தது.

சுவாமி சமாதி அடைவதற்குப் பத்து ஆண்டுகளுக்கு முன்னரே நாராயணவரத்தில் நாகதாளிபுதர்கள் மூடிக் கிடந்த ஓர் இடத்தைச் சீர்படுத்தத் தொடங்கினூர். இதற் காகத் தாம் வேலை செய்வது மட்டுமல்லாமல் தம் சீடர் களனைவரையும் அழைத்துச் செல்வார். ஒவ்வொருநாளும் பகல் பன்னிரண்டு மணிக்குமேல், எப்பொழுது ஓய்விருந்தா

லும் அவர்களை அழைத்துச் சென்று இந்த இடத்தைச் சீர் படுத்தச்செய்வார். பாடுபட்டால்தான் பலனுண்டு என்று விளக்கம் கூறுவார். சுவாமி உழைப்பதன் நோக்கம் அப்பொழுது ஒருவருக்கும் தெரியாது. இதுமட்டுமன்று. சுவாமி ஆற்றுக்குச் சென்று அங்குள்ள கூழாங்கற்களைச் சேர்த்து எடுத்துக் கொண்டுவந்து தாம் சீர்படுத்தும் நிலத்திலிருந்த குழிகளை நிரப்புவார். ஒரு நாள் ஒரு பெண் தனக்குச் சில கூழாங்கற்கள் வேண்டுமென்று சுவாமியைக் கேட்டாள். அவர் கொடுக்க மறுத்தார். மேலும், "ஐயோ, பாவி! என் நிலத்திலிருந்த மண்ணை எடுத்துக்கொண்டு போய்விட்டான். நாள்தோறும் நான் எவ்வளவு கடுமையாக வேலை செய்ய வேண்டியிருக்கிறது என்பது அவனுக்குப் புரியவில்லை. அவன் ஒரு பாவி. நீ போ, அம்மா, போ நான் ஒன்று கூடத் தரமாட்டேன்" என்று சொன்னார். அங்கு இருக்க நேர்ந்த சீடர்கள் அனைவரும் கூழாங்கற்கள் கொண்டுவந்து குழிகளை நிரப்பும் வேலையில் பங்கு கொண்டனர். ஒரு நாள் சுவாமி ஒரு கூழாங்கல்லைக் கையிலெடுத்து முத்தமிட்டுத் தம் கண்களில் ஒற்றிக்கொண்டார். பிறகு, தாம் சீர் திருத்தும் நிலத்தின் முன் நின்று அந்தக் கல்லை நிலத்தில் வீசி எறிந்தார். அவர் ஏன் அவ்வாறு செய்தார் என்று கேட்டபோது, "நம்முடைய சொந்த வீட்டில் நாம் கல் போட வேண்டாமா? ஆகையால் நம் வீட்டில் கல் போட்டோம்" என்று பதில் சொன்னார். சுவாமியின் சமாதி இதே இடத்தில் தான் கட்டப்பெற்றது. இது வாசகர்களுக்கு வியப்பாக இருக்கலாம்.

1902-ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதத்தில் சுவாமி கடைசி முறையாகச் சென்னைக்கு வந்தார். சென்னையில் ஒருவாரம் தான் தங்கினார். சுவாமியின் இறுதிக்காலத்தில் தொண்டு செய்து கொண்டிருந்த புருஷோத்தம நாயுடு என்பவரைச் சுவாமி நாராயணவரத்திற்கு உடனே புறப்படும்படி

வற்புறுத்தினுர். "காலங்கழிப்பதற்கில்லை. வந்து, பார்த்து, வெற்றி கண்டாய்விட்டது. நாம் உடனே புறப்படவேண்டும். ஒரு விஞடியும் வீணுக்குவதற்கில்லை" என்று சொன்னுர். ஆகையால் அவர்களிருவரும் சென்னையிலிருந்து புறப்பட்டனர். ஆனுல் இம்முறை வேறெவரும் தம்முடன் வர அவர் இணங்கவில்லை. அவருடைய சீடர்களுக்கும் அடியார்களுக்கும் இது வழக்கத்திற்கு மாருகக் காணப்பட்டது. சுவாமியின் அடியார்களுள் எவரும் ஆதிக்கம் செலுத்தத் துணிவதில்லை, சுவாமியின் கட்டளையை மீறத் துணிவதில்லை. ஆதலின், எல்லோரும் ரெயில்வே ஸ்டேஷனுக்குச் சென்று சுவாமியை வழி அனுப்பிவிட்டு வந்தனர். அப்பொழுது ஒரு குறிப்பிடத்தக்க நிகழ்ச்சி நடந்தது. திரு. B. வேணுகோபால் நாயுடு அவர்கள் இந்நூலின் இரண்டாம் பாகத்தில் இதைப்பற்றி விரிவாக எழுதியுள்ளார். சுவாமியும் புருஷோத்தம நாயுடுவும் புத்தூரில் இறங்கி அன்றிரவு அங்கேயே தங்கினுர்கள். அடுத்தநாள் சுவாமி அங்கிருந்து ஒரு பஜனைக்கூட்டத்துடன் புறப்பட்டார். உள்ளத்தை உருக்கும் பாடல்களைப் பாடிக்கொண்டும், இறைவனை நெஞ்சார வழிபட்டும் அவன் புகழ் பாடியும் அவனுக்கு நன்றி தெரிவித்தும் ஆன்ம நேயம் பாராட்டி அவர்கள் அன்று எழுப்பிய இன்னிசை கேட்பவர்கள் செவியில் இன்பத்தேனுகப் பாய்ந்தது. சுவாமி நாராயணவரம் போய்ச் சேர்ந்தவுடன் புருஷோத்தம நாயுடு, பாப்பைய செட்டி ஆகியோர் இருவரிடமும், "நான் நாளை மறுநாள் என்னுடைய ஊருக்குப் போகிறேன்" என்ருர். அவர்கள் இதைச் சரியாகக் கவனிக்கவில்லை. அன்றிரவே, சுவாமி தமக்கு மிகவும் தாகமாக இருப்பதாகச் சொல்லி, பத்துபடிக்கு மேலாகவே தண்ணீர் குடித்தார். அவ்வளவு தண்ணீர் குடித்தும் சுவாமி மலஜலம் ஒன்றும் கழிக்கவில்லை. மறு நாள் சுவாமி தமக்கு ஒரு மாதிரி இருப்பு

தாகச் சொன்னார். புருஷோத்தம நாயுடு மருத்துவரை அழைத்துவருவதாகச் சொன்னார். சுவாமி அதற்கு உடன் படாது தம்மைத் தண்ணீரில் குளிப்பாட்டச் சொன்னார். ஏறக்குறைய நூற்றைம்பது குடங்கள் தண்ணீர் கொண்டு சுவாமியைக் குளிப்பாட்டினார்கள். அப்போது நள்ளிரவு, பன்னிரண்டுமணி. சுவாமி வடக்கு நோக்கி உட்கார்ந்திருந் தார். புருஷோத்தம நாயுடுவைப் பார்த்து தேங்காய் கர்ப்பூரம்கூட இல்லையா என்று கேட்டார். அப்பொழுது தான் புருஷோத்தமநாயுடு நிலைமை கவலைக்கிடமானது என்று தெரிந்து கொண்டார். பிறகு பாப்பைய செட்டி யிடம் விரைந்து சென்று சுவாமி இவ்வுலகத்தைவிட்டு நீங்கிவிடுவார் என்று தாம் அஞ்சுவதாகக் கூறினார். பாப்பைய செட்டி, தேங்காய், கர்ப்பூரம் இரண்டும் தந்தார். ஆனால் சுவாமி தாம் மறுநாள் பகல் பன்னிரண்டு மணிக்கு உயிர்நீப்பதாகச் சைகை காட்டினார். புருஷோத்தம நாயுடு மிகவருந்தி அழுது தமக்கு ஏதாவது அறிவுரை கூறுமாறு சுவாமியை வேண்டிக் கொண்டார். சுவாமி, "மனத்தை நல்லபடி வைத்துக்கொள்வது அரிது. பிறஉயிர்களின் துன்பத்தைப் போக்க முயலுவாயாக. நல்ல பெயர் எடுக்க நாள் செல்லும். இங்கும் அங்கும் அலையாதே. குதிக்கிற மாடு பொதி சுமக்காது. நீ இருக்கிற இடத்திலேயே இருந்தால் உனக்குமாதம் மூன்று வராகன் கள் கிடைக்கும்," என்றார். பிறகு பாப்பைய செட்டி சுவாமியிடம் சென்று தமக்கு நல்லுரை சொல்லுமாறு கேட்டுக்கொண்டார். சுவாமி வாய் திறவாது அபயஸ்தம் காட்டி, தேங்காய் உடைத்துக் கர்ப்பூரம் ஏற்றுமாறு குறிப் பிட்டார். அவ்வாறு செய்ததும் சுவாமி புருஷோத்தம நாயுடுவின் மீது மெதுவாகச் சாய்ந்தார் — இறைவனோடு ஒன்றாகிவிட்டார்!

இச்செய்தி தந்தி மூலம் சென்னை அடியார்களுக்குத் தெரிவிக்கப்பட்டது. செங்கல்வராய முதலியாரும் மற்றை யோரும் சமாதிக்கு வேண்டிய பொருள்களை எடுத்துக் கொண்டு உடனே நாராயணவரத்திற்கு விரைந்து சென்ற னர். ஆனால் சுவாமியின் உடலை எங்கே சமாதியில் வைப்பது என்பதுபற்றி அவ்வூரில் பெரும் பூசல் ஏற்பட்டது. நொடிக்குள் தோன்றி மறையும் சிறு குழப்பம் அன்று அது. இந்த இடம், அந்த இடம் என்று பல இடங்கள் குறிப்பிடப்பட்டன. ஆனால் அவ்வூர் மக்கள் ஒவ்வொரு இடத்திற்கும் தடை சொன்னார்கள். இந்த இடத்தில் இது குறை, இது விரும்பத்தக்கதாயில்லை என்று எதிர்ப்போர் சிலர்; அந்த இடம் கூடவே கூடாது என்று மறுப்போர் வேறு சிலர். இறுதியில் அதிகாரிகள் குறுக்கிட்டுச் சுவாமி சீர்திருத்தி வைத்திருந்த நிலமே ஏற்றதெனத் முடிவு செய்த னர். ஆனால் சுவாமி முன்ஏற்பாடாக இதைச் செய்தது அவர்களுக்குத் தெரியாது. அதிகாரிகளின் தீர்ப்பைக் கண்ட மக்கள் இதற்காகத்தான் போலும் சுவாமி இந்த நிலத்தைத் திருத்தி ஏற்ற இடமாக்கிவைத்திருந்தார் என்று நினைத்து வியப்பினால் தம்மை மறந்து நின்றனர்.

பின்னர் நடைபெற வேண்டிய சடங்குகள் எல்லாம் நிறைவேறின. இறைவனின் மெய்யடியாரான சுவாமியின் திருவுடல் சமாதியில் வைக்கப்பெற்றது. ஆன்மீய வானில் (வட)துருவமெனத் திகழ்ந்த சுவாமியின் மறைவு குறித்து அடியார்களெல்லாம் பெருந்துயரம் எய்தினர். அவர் மறைந்துவிட்டாரா? இல்லை! அவர் மறையவில்லை. தம் தெய்வீக உடலில் ஒளிமிக்க ஆடைகள் அணிந்துகொண்டு, தம் தெய்வீகக் கண்களில் இன்பச்சுடர் வீச, முழுவதும் மாறியதும் திருமேனியில் தெய்வ மணங்கமழ, நம்பிக்கை யுடையோர் கண்களுக்குப் புலனாகியும் தம்மை உண்மை யாக நாடிக் குறை இரப்போர்க்கு உதவுவதற்குமாகவும், மட்டற்ற அருள் புரியவும், மதிப்பிடற்கரிய பரிசுகள் வழங்கவும் நம் தலைவர் துறக்கத்தின் பொன்வாயிலில் காத்துக்கொண்டு நிற்கிறார்!

# முடிவுரை

## அத்தியாயம் 10

இதுவரை நான் கூறிவந்த வரலாறு பொது மக்கள் கொண்டுள்ள கருத்துக்களுக்கும் உணர்ச்சிகளுக்கும் மாருக உள்ளது. காக்கை, குருவி கதை போன்ற கட்டுக்கதையாக இத்தகைய வரலாறுகளை மக்கள் பிழைபட உணரக் கூடும். அரைகுறைப் படிப்புப் படித்த உதவாக்கரை ஆட்களும் இவ்வரலாறு நிகழ்ந்திருக்கக் கூடாததொன்றென்பர். வானத்தை வில்லாக வளைப்பதையும் மணலைக் கயிருகத் திரிப்பதையும் இதற்கு உவமை கூறுவர். கடவுள் என்பதே வெறும் புரட்டு, கற்பனையில் தோன்றிய பொருள் என்று நாத்திகம் பேசுவோரை நினைக்கும்போது இதில் வியப்பொன்றுமில்லை! ஆனுல் சிறிது பொறுமையோடும் ஊக்கத்தோடும் அவர்கள் ஆராய்ந்தால் தங்கள் கருத்துக்களை அறவே மாற்றிக் கொள்ளுவர். ஹக்ஸ்லி (Huxley) என்பவர், "தத்துவ ஆராய்ச்சி வழியாகப் பார்க்கும்போது நாத்திகத்திற்கு அடிப்படையே இல்லை என்பது தெரிகிறது" என்று சொல்லுகிருர். ரெவரெண்டு டாக்டர் ஃப்ளிண்டு என்பவர், (Rev. Dr. Flint) "சமய அனுபவத்தில் கடவுள் தம்மை மக்களுக்கு வெளிப்படுத்திக் கொள்வதும் தொடர்ச்சியாக நிகழ்ந்திருக்கின்றன. சமீப காலம் வரையில் பழைய சமயங்கள் மக்களுடைய அறியாமையின் பல நிலைகளை உணர்த்துவனவாயும் கடவுளுக்கு விருப்பமில்லாத பல சின்னங்களாகவும் கடவுளைப்பற்றிய உண்மைகளுக்குப் புறம்பானவையாயும் கருதப்பட்டு வந்தன. "விக்கிரக வழிபாடு," "குருட்டு நம்பிக்கைகள்" என்று சொல்வதால் அவைகளின் தன்மை

யைச் சரியாக உணர்த்த முடியும் என்று நினைக்கப்பட்டது. மனித இயற்கையையும் கடவுளின் அருள் தன்மையையும் பற்றித் தகுந்த முறையில் எண்ணிப் பாராததால் இத்தகைய கருத்து நிலவி வந்தது; ஆனால் இப்போது இக்கருத்து விரைவில் மறைந்து வருகிறது. இதற்குப் பதிலாகச் சமய வரலாறு, கடவுளை மனிதன் தேடுவதும் கடவுள் தம்மை மனிதனுக்கு வெளிப்படுத்துவதுமான நிகழ்ச்சி பற்றியது என்ற உறுதி ஏற்பட்டுள்ளது. இதனால், கடவுளின் தன்மையைப் பற்றி மனிதனின் அறிவு ஆழ்ந்தும் அகன்றும் வந்துள்ளது. எனினும், பழங்காலத்திலும் கிறிஸ்துவ சகாப்தத்திலும் சமயத்துறையில எல்லாம் முன்னேற்றமாக இருந்திருக்கிறது என்று சொல்வதற்கில்லை. முன்னேற்றத்திற்கு மாறாக எவ்வளவோ இருந்திருக்கிறது. ஆனால் சமயத்தின் எல்லா நிலைகளிலும், மனிதன் கடவுளைத் தேடிக் கண்டுகொண்டிருக்கிறான்; கடவுள் தம்மை அவனுக்கு அறிவித்திருக்கிறார் என்பதற்குச் சான்று பகர்கின்றது. நாம் ஆராய்வது, கடவுளின் உண்மையைப்பற்றியாயினும் சரி அற்புதங்கள் மெய்யாகவே நிகழ்ந்தனவா என்பதைப்பற்றியாயினும் சரி, தடிஅடிப்பேச்சால் ஒரு பயனுமில்லை என்பது மட்டும் உறுதி, கடவுள் இருக்கின்றார் என்றால் அவர் என் கண்முன் இப்போதே வந்து நிற்கட்டும்; மஹாத்மா ஒருவர் ஓர் அற்புதம் செய்தார் என்றால் இப்போது அவர் மேடை மீதுதோன்றி சூரியனைக் கீழே இழுத்து நம் உலகத்தை மேலே தூக்கித் தம் பெருமையை நிலைநாட்டட்டும் என்றெல்லாம் சிலர் சொல்வர். அவர் வாக்கே அவர் கருத்தின் பொய்மையை விளக்குகின்றது. மனிதன் கடவுளைத் தேடுவதும் தம்மை மனிதனுக்கு வெளிப்படுத்துவதும் உடனாக நிகழ்வன. விலங்கு நிலையில் வாழும் மக்கள், போக்கிரித் தனமாகவும் உள்ளன்பில்லாமலும் அழைக்கும் போது கடவுள் தம்மைக் காட்டிக் கொள்ளத் தேவையில்லை.

உதவாக்கரை ஆட்கள் வேண்டும் போது அற்புதங்கள் செய்ய வேண்டும் என்ற கட்டாயமும் மஹாத்மாக்களுக்கு இல்லை. உலகத்தை எவ்வாறு நேர்மையான வழியில் கடவுள் ஆண்டு வருகிறார் என்று தெரிந்துகொள்ள நமக்கு இயலவில்லை. "நமக்கு ஒரு சிறிதுதான் தெரிகிறது — இருள் படர்ந்து, கண்ணுடியில் பார்ப்பது போல" அடிஸன் (Addison) என்பவர், "முதலும் விளைவும் எவை, முன்னும் பின்னும் எவை என்று தெரிந்து கொள்ள முடியாத செய்திகளை உணர நமக்குத் தெரிந்த ஒழுங்கு முறைகளைக் கையாளுவதில் நன்மை இல்லை" என்று கூறுகிறார். டாக்டர் ஃப்ளிண்டு(Dr. Flint)என்பவர். "கடவுளைப் பற்றிய கருத்து எல்லாவகையிலும் உயர்ந்ததாய் இருப்பதால் சிலர் அறிவு இந்த அளவுக்கு எட்டுவதில்லை. அது உண்மையாக இருப்பதாலேயே உண்மையாகிய கடவுளைப்பற்றி அவர்கள் கேட்டுக் கொள்வதில்லை. அப்படி அவர்கள் உண்மையை ஏற்றுக் கொள்ளாதிருப்பது அவர்களுக்கு நல் ஊழ் இல்லை என்பதைத் தான் காட்டுகிறது. அது உண்மையை மறுக்கும் சான்று ஆகாது" பொறை அல்லது சஹிப்புத் தன்மையை அறிவுறுத்தி வந்த லாக் (Locke) என்பவர், "கடவுள் இல்லையென்றால் எல்லாம் ஒழிந்து விடுகிறது" என்று சொல்லுகிறார். "பிரபஞ்சம் அறிவின் ஒழுங்குக்கு உட்பட்டிருக்கிறது என்பதை மறுப்பதுதான் நாத்திகம் என்றால், பொருத்தத்திற்காக நாத்திகன் எல்லாவற்றையும் ஒழித்துவிடுவதோடு, பௌதிக சாஸ்திரத்தையும் தர்ம சாஸ்திரத்தையும் மறுத்து முழு அறியாமை நிலை எய்தி, பித்தனாகி ஒரு நாட்டில் வாழத் தகுதியற்றவனாகிறான்."

அறத்தை நிலைநாட்டுவதற்காகவும் மறத்தை வீழ்த்துவதற்காகவும் அவ்வப்போது தாம் அவதாரம் செய்வதாகப் பகவத் கீதையில் ஸ்ரீ கிருஷ்ணன் சொல்லுகிறார். கடவுள் தம்மை வெளிப்படுத்திய வரலாற்றைக் கூறாத நாடு உலகில்

எங்கும் இல்லை. மஹான்களும் ஞானிகளும் ஆசாரியரும் அனுபூதிமான்களும் இருந்திராத நாடில்லை, தாழ்ந்த நிலையில் மனிதன் குரங்கினத்தைச் சார்ந்தவனே யாகிறான். என்றுமுள்ள உண்மைகளைக் குறியீடுகள் மூலமாக எடுத்தோதும் கவிகளும், கலைஞரும், அறிவியல் துறைகளில் விளக்கம் காண்பதோடல்லாமல் கனவிலும் காணாத புது வகைக் கருவிகளையும் முன்னர் உணர்ந்திராத இயற்கையின் சட்டங்களையும் உண்மைகளையும் கண்டுபிடிக்கும் சமய ஞானிகளும் விஞ்ஞானிகளும் தோன்றும் போது தான் மனித அறிவின் மாண்பு புலப்படுகிறது. நாகரிகம் தொடங்கிய காலம் தொட்டே ஒவ்வொரு நாட்டிலும், ஒவ்வொரு வட்டாரத்திலும்—பல வகையாக உருப்பெற்றாலும்—கடவுளைப்பற்றிய கருத்து.விடாமல் நிலவி வந்திருக்கிறது. கடவுளைப்பற்றிய கருத்து மட்டுமன்று—இயற்கைக்கு மேற்பட்ட ஆற்றல்கள் படைத்த மஹான்களும் ஞானிகளும் ஆசாரியர்களும் தீர்க்கதரிசிகளும் இருந்திருக்கின்றனர் என்பது திட்டமாகக் கூறப்படுகிறது. அப்பலோனியஸ். (Appolonius), கமினியஸ் (Comenius), இயேசு, முஹம்மது, சங்கரர், சம்பந்தர், ஆழ்வார்கள் ஆசாரியர்கள் இவர்கள் எல்லாம் உலகின் பலபாகங்களுக்கு அணியாக விளங்கியவர். ஆனால் உண்மையான தீர்க்க தரிசிகள், மஹாத்மாக்கள் ஆகியோரின் வரலாறு, ஒன்றும் தெரியாதவர் பேச்சோடும், எதையும் எளிதாக நம்பி விடுவோரின் ஊர் வம்போடும் கலந்து போகும்போது அதன் மதிப்பு குறைந்து விடுகிறது. எது உண்மை, எது கற்பனை, எது நடந்தது, எது கட்டுக்கதை என்று தெரியாமல் போகிறது.

எனவே இந்த நூலில், காய்தல் உவத்தல் இல்லாதவர்களும் உலகியலில் பெரிய நிலையிலுள்ளவர்களுமான பலருடைய சொந்த அனுபவங்களைத் திரட்டி இரண்டாம்

பாகமாகச் சேர்க்கப்பட்டுள்ளது. இவர்கள் இதைத் தங்கள் சொந்த அக்கரைக்காகச் செய்யவில்லை.—தகாத நோக்கம் கொண்டும் செய்யவில்லை. ஆனால், பிறருடைய நன்மைக்காகவும் தங்கள் கடப்பாடாகவும் எண்ணி தங்கள் குருவாகவும் குருநாதனாகவும் கருதியவருடன் தங்களுக்கு ஏற்பட்ட அனுபவத்தைச் சொல்ல முன்வந்துள்ளார்கள். அவர்கள் அனுபவங்கள் ஒன்றினுக்கொன்று உறுதி செய்வதாகவும் முதல் பாகத்தில் கூறியதை வற்புறுத்துவதாகவும் அமைந்துள்ளன. முதல் பாகத்தில் சொல்லியவற்றைத் திரும்பச் சொல்ல வேண்டாமென்பதற்காகவே தாம் இன்னும் சில நிகழ்ச்சிகளைக் குறிப்பிடவில்லை என்று திரு. N. இரத்தினசபாபதி பிள்ளை கூறுகிறார். திரு. செங்கல்வராய முதலியார் சொன்னவற்றை இது உறுதி செய்வதாகிறது. இந்நூலின் முதல் பாகம் திரு. முதலியார் சொன்னதைக் கொண்டே தான் எழுதப்பெற்றது. நிகழ்ச்சிகளைப் பெரும்பாலும் காலவரை யறையில்லாமல் குறிப்பிட்டிருப்பது அவ்வளவு திருப்திகரமாயில்லை. ஆனால் தேதிகளையும் ஒழுங்கான வரலாற்று முறையையும் விட நிகழ்ச்சிகளையும், ஏதுக்களையும் உயர்வாகக் கருதும் இந்துக்களின் மனப்பான்மையை நினைத்துப் பார்க்கும்போது, இது தவிர்க்க முடியாத நிலையாகிறது. திரு. நாதமுனி முதலியார் ஒருவர் மட்டுமே தம் அனுபவங்களை வரலாற்று முறையில் குறிப்பிட்டு வைத்திருக்கிறார். எனவே, அவர் எழுதியது வலிவும் உரமும் உள்ளதாகும்.

இவர்களனைவரும் கூறுவதிலிருந்து இந்தமஹான் சாதாரண மனிதர் அல்லர் என்பது தெரிகிறது. அவர் ஆன்மீய வெற்றியின் புகழ்பாடுவது............ஐயங் கொள்வதையே தம் இயல்பாக உடையோர் தவிர அறிவுத் தெளிவுள்ள எவரும் இங்கே தரப்பெறும் சான்றுகளைப் புறக்கணிக்கமாட்டார்கள். மஹாத்மாவின் பெருமையைப்பற்றி

ஐயப்பட மாட்டார்கள் ; அவரிடம் காணப்பட்ட அற்புத ஆற்றலை மறுக்கமாட்டார்கள். ஆனால் வேறொரு பெரிய தடை எழலாம். அதுதான், அற்புதங்கள், ஆவிகள் பற்றிய நிகழ்ச்சிகள்—போன்றவை குறித்து ஐயம். யார் என்னதான் இவற்றிற்காகச் சான்று கூறினாலும் நடக்கக் கூடாத நிகழ்ச்சிகளை எப்படி நடந்தனவாகக் கொள்ள முடியும் என்ற ஐயம் பலருக்குண்டு. இந்த அதிகாரத்தை முடிப்பதற்குமுன் இதுபற்றி ஒன்றிரண்டு வார்த்தைகள் கூறுவது மிகையாகாது. ஏனெனில் ஏமாற்றுபவர்கள் ஒரு புறமும், மூடவெறிகொண்ட அறிவிலாக் குருடர் மற்றொரு புறமுமிருப்பதால் இரண்டு பக்கமும் இடைஞ்சல் உண்டு!

ஹ்யூம் (Hume) என்பவர், "அற்புதம் என்பது இயற்கைச் சட்டங்களை மீறியது" என்றார். ஹக்ஸிலி (Huxley) என்பவர் இதை ஒப்புக்கொள்ளவில்லை. இயற்கையின் ஒழுங்கு என்னவாயிருக்கவேண்டும் என்று யாரும் சொல்ல முடியாதென்றார். இதனால், இறைவனை வேண்டிக்கொள்ளுதல், அற்புதங்கள் இவைகளைப்பற்றி அறிவு வழி நின்று தடை சொல்வதற்கில்லை. "அற்புதங்கள் என்பன மிகவும் வியப்பான நிகழ்ச்சிகள் என்றால் அவை நிகழும் என்பதற்குத் தடையொன்றுமில்லை." — ஹ்யூம் ஒரே அடிப்படையான ஜடத்திலிருந்து பலவிதமான பொருள்கள் தோன்றுகின்றன என்றுவைத்துக்கொண்டால் எப்படிச் சர்க்கரை திராட்சைரசமாகத் தடையிருக்கமுடியாதோ அப்படியே கானாஊர்த் திருமணத்தில் தண்ணீர்த் திராட்சை ரசமாவதற்கு அறிவுவழியாகத் தாம் தடை ஒன்றும் காணவில்லை என்கிறார். அற்புதங்கள் நம்பத்தக்கவையா என்பது ஹக்ஸிலியைப் பொருத்த மட்டில் அவற்றிற்குத் தக்க சான்று உண்டா என்பதைப் பொருத்தது. ஆனால், விஞ்ஞான வழியாக விளக்கம் தேடுவது இயற்கைக்கு மேற்பட்ட தன்மை அற்புதங்களில் காணப்படுகிறது என்

பதை மறுப்பதாகிறது. மேலும், சான்று தேடும்போது, வரலாற்று நிகழ்ச்சிகளையே மறுக்கக்கூடிய வகையில் சான்றுகள் கேட்கலாம்.

அற்புதங்களையும் தீர்க்கதரிசனங்களையும் இயற்கை நிகழ்ச்சிகளாகக் கொண்டாலும் சரி, இயற்கைக்கு அப்பாற் பட்டவைகளாகக் கொண்டாலும் சரி, மனித இனத்தின் வரலாறு, இத்தகைய நிகழ்ச்சிகளில் தொடர்புடை யோருக்கு நம்பிக்கை ஏற்படும்படி, இயற்கைக்கு அப்பாற் பட்ட ஆற்றல் இயற்கையில் எவ்வாறோ வெளிப்படுகிறது என்பதற்குச் சான்று கூறுகிறது. வீணான தர்க்கங்களிலும் குதர்க்கங்களிலும் ஈடுபடாமல் **Encyclopaedia Britannica** என்ற கலைக்களஞ்சியத்தில் **Dr. Lang** என்பவர் எழுதி யுள்ள மிகத்தெளிவான கட்டுரையிலிருந்து பின்வரும் பகுதிகளைத் தந்து இந்த அதிகாரத்தை முடித்துக் கொள்ளுவோம்.

"இதுவரை சூனியவேலை, ஆவேசம், பேய்பிடித்தல் என்பவற்றால் ஏற்பட்டவை என்று கருதப்பட்ட நிகழ்ச்சி களுக்கு இப்போது சாதாரண முறையில் விளக்கம் தரப் பெறுகிறது. ஒருவேளை சூனியக்காரர், மஹான்கள், பேய் பிடித்தோர், காட்சிகள் காண்பவர்கள்—இவர்கள மூல மாகப் பேசிய பேய்கள், மஹான்கள், தேவதூதர்கள் ஆவிகள் எல்லாம் மனிதனின் அடிமன நிலையில் நிழலிடும் தோற்றங்களாயிருக்கலாம். இந்த அடிமன நிலையில் மறைந்துகிடக்கும் பழைய நினைவுகளும் கூர்மையான காட்சித் திறனும் உண்டு. இவ்வாறாக மனிதவரலாற்றில் ஒரு புதிய அதிகாரம் எழுதக்கூடிய நிலை ஏற்பட்டுள்ளது. எப்படி நடக்கிறது என்கிறமுறை தெரியாதவரையில் மக்கள் சில நிகழ்ச்சிகளை இயற்கைக்கு மீறியது, அசாதாரணமானது என்றெல்லாம் நினைக்கிறார்கள். அல்லது இவைகளை மறுத்துவிடுகிறார்கள். ஆனால் முழு

விளக்கம் அல்லது ஏறக்குறைய முழு விளக்கம் கிடைத்திருக்கிறது என்று சொல்வதும் உண்மையாகாது. அறிதுயில் நிலையின் இயற்கையைப் பற்றியே முடிவில்லாமல் தர்க்கத்திற்கு இடமாய் இருக்கிறது. வெளிப்படுகின்ற செய்திக்கு வெளிப்படாத நினைவின் அடிப்படையிலாவது அல்லது பொதுவான காட்சித் திறனைக் கூர்மையாக்குதல் என்ற அடிப்படையிலாவது எல்லாச் சமயத்திலும் விளக்கம் தருவதற்கில்லை. தொலைவிலுள்ளவர்கள் ஒருவரையொருவர் சந்திக்காமலே தங்கள் எண்ணங்களைத் தெரிந்து கொள்ள முடியுமென்றால் (Telepathy) இது எந்த அளவுக்கு நிகழ்கிறது என்று திட்டமாய்ச் சொல்வதற்கில்லை. பளிங்கில் காட்சிகள் காண்பது (Crystal gazing) பற்றிய எளிய ஆய்வுகள் கூடக் குழப்பம் விளைவிக்கின்றன. எல்லா நாட்டிலும் எல்லாக்காலங்களிலும் சிலர் தண்ணீர், கண்ணாடி, மை, வழுவழுப்பான மேற்புறங்கள் ஆகியவற்றில் காட்சிகள் காண்கின்றனர் என்ற நம்பிக்கை இருந்து வந்திருக்கிறது. ஐயத்திற்கு இடமில்லாத முறையில் இது உண்மை என்று பரீட்சைகள் நிலைநாட்டுகின்றன. இந்தக் காட்சிகள் வெறும் கற்பனைத் தோற்றங்கள் அல்ல. ஆனால் அவை காட்சி காண்பவர்களுக்கும் அந்த இடத்தில் உள்ள பிறருக்கும் தெரியாத—பின்னால் உண்டென்று தெரிந்து கொள்ளப்பட்ட—ஆட்களையும் நிகழ்ச்சிகளையும் பற்றிக் குறிப்பிடும்போது, இதற்கு விளக்கம் என்ன என்று ஆராய வேண்டியிருக்கிறது. தொடர்ந்து ஆராய்ந்தால் சாதாரண விளக்கம் ஏற்படும். ஆனால் உண்மை என்று சொன்னவற்றை ஆராய்ந்து பார்க்காத ஐயப்போக்கினால் இவை தவறாகக் காணப்பட்டவை, ஏமாற்றங்கள் என்று முடிவு கட்டலாம். தவறான காட்சியும் ஏமாற்றமும் சில வேளைகளில் உண்மையான காரணங்கள் தாம். இந்தத்துறையில் மட்டுமின்றி மனித அனுபவத் தொடர்புள்ள எல்லாத்

துறைகளிலும் தவருன நினைவுகளும் தெரியாமல் நேரும் பிழைகளும் சாட்சியத்தைத் தவருக்கிவிடுகின்றன. ஆவிகள் பற்றிய ஆராய்ச்சி, உண்மைகளை நடு நிலைமையில் நின்று சேகரித்து ஆராய்ந்து குறிப்பிடும் போக்கை ஆதரிக்கிறது—அல்லது ஆதரிக்கவேண்டும். பேர் பெற்ற வரலாற்று ஆசிரியர்கள் நூலிலும் பெரும்பாலும் இம்முறை இருப்பதில்லை.

நோய்களைப் போக்கிய பல அற்புதங்களும் (Stigmatization) எண்ணத்தை ஏற்றுதல் (Suggestion) என்பதன் வழியாக விளக்கப் பெற்று இந்தக் காலத்து அனுபவத்தில் மெய்ப்பிக்கப் படும்போது நம்பத் தக்கவையாகின்றன. ஆனுல் இந்த விளக்கத்தை இன்னும் தெளிவுறச் செய்வது எதிர்காலத்து வேலையாகிறது. தெரஸா (St. Theresa) என்ற அம்மையார் விஷயத்தில் பிரான்ஸிஸ் என்னும் துறவற ஞானியார் (St. Francis de Sales) இதை ஒப்புக்கொண்டார். இதைவிட விரிவாகவும் முதன்மை வாய்ந்தனவாயும் உள்ள முடிபுகள் வருங்காலத்தில் கிடைக்கலாம். மின்சார நிகழ்ச்சிகளைப் பற்றிய சாஸ்திரம் கால்நூற்ருண்டுக்குள் வளர்ச்சியடைந்து விடவில்லை. இதைவிடக் குறைந்த காலத்தில் ஆவிகள் பற்றிய ஆராய்ச்சி சாதித்துள்ளதைவிட இன்னும் மிகுதியாகக் கேட்பது சரியன்று. இயற்கை நிகழ்ச்சிகளைப் போலன்றி, ஆன்மசக்தி ஒரே ஒழுங்குக்கு உட்படாத தனிப்போக்கை உடையதாயிருப்பதால் இந்த விஷயம் ஆராய்ச்சிக்கு எளிதாக உட்படுவதாக இலலை. தெரிந்தோ தெரியாமலோ ஏமாற்றுவதும் இடர்ப்பாட்டை மிகுதியாக்குகிறது. ஆனுல் இதுவரையில், வரலாற்றுக் காலம் முழுவதுமே நிகழ்ந்தவற்றைப் பெருவாரியாகக் குறிப் பெடுத்து அவை உண்மையில் நிகழ்ந்தனவா என்று கண்டு, அவற்றைத் தொகுத்து, ஒரு அளவுக்கு விளக்கமும் தரப்பட்டுளது. ஆவிகள்பற்றி எழுகின்ற கேள்விகளுக்கு விடையும் விளக்கமும் ஏற்படவில்லை யென்ருலும் உளநூல் ஆராய்ச்சியின் எல்லை விரிவாகியுள்ளது.

இரண்டாம் பாகம்

# ஸ்ரீ சுரைக்காய் சுவாமிகள்

பக்தர்களில் சிலர் எழுதித் தந்த

தம் அநுபவக் குறிப்புகள்

சென்னை P. W. D. எக்ஸிகியூடிவ் எஞ்சினியர்
பதவி வகித்து ஓய்வு பெற்ற

## இராய் பஹதூர் N. இரத்தினசபாபதி பிள்ளை, B. A., B. C. E., F. M. U., அவர்கள் அநுபவக் குறிப்புகள்

**[சென்னை மாகாணம், வடஆர்க்காடு ஜில்லா புத்தூர் அருகிலுள்ள நாராயணவரம் ஸ்ரீமான் சுரைக்காய் சுவாமிகள் வாழ்க்கையில் கண்ட சில நிகழ்ச்சிக் குறிப்புகளும் அடிகள் பால்கண்ட என் அநுபவங்களில் சிலவற்றையும் இங்கு வரைந்துள்ளேன்.]**

இந்த மஹான் அல்லது மஹாத்மாவை **1875-ஆம்** ஆண்டில் நாராயணவரத்தில் நான் முதல் முதலாகப் பார்த்தேன். பொதுப்பணித் துறையில் (D. P. W.) சந்திரகிரி தாலுக்கா, கார்வேட் நகரம் காளஹஸ்தி ஜமீன்களுக்கு நான் சப்டிவிஷனல் ஆபீசராக (**Sub-divisional Officer**) இருந்தேன். அப்போது நீர்ப்பாசன இலாகாவிலிருந்து L. F. **Dept.** பிரிக்கப் படவில்லை. என்னுடைய தலைமைக் காரியாலயம் புத்தூரிலிருந்தது. 1874 கிறிஸ்மஸுக்குச் சற்றுமுன்பு புத்தூருக்கு மாற்றப்பட்டிருந்த நான் 1875 ஜனவரி பிறந்த சில நாளில் போய்ச் சேர்ந்தேன். புத்தூர் அப்பொழுது ஒரு சிறு ஊராக இருந்தது. ஆனால் இப்போது போலவே அப்போதும் சென்னை வடமேற்குப் பாதையைச் சேர்ந்த என்ஜின்கள் அங்கே நீர் நிரப்பிக் கொண்டன. நாராயணவரத்திலிருந்த தலைமை அஞ்சல் நிலையத்தின் பிரிவாகப் புத்தூரில் ஒரு சிறு அஞ்சல் நிலையம் இருந்தது. இப்போது சில மாறுதல்கள் ஏற்பட்டுள்ளன. 1875 மார்ச்சு மாத சமயத்தில் என் தலைமைக் காரியாலயம் நாராயணவரத்திற்கு மாற்றப்பட்டது. முன்பு குறிப்பிட்டது போல அந்த

ஆண்டில் ஏப்ரல் மாதத்தின் இறுதியில்தான் நான் இந்தப் பெரியாரை முதன் முதலாகப் பார்த்தது. வெளித்தோற் றத்திற்கு அவர் ஓர் எளிய பிச்சைக்காரராகவே காணப் பட்டார்—உடலை மறைக்கக் கந்தைத்துணி, சடை அல்லது குடுமியோடு, எப்படியோ ஏதோ பழந்துணியால் ஒருவாறு கட்டப்பட்டிருந்த தலைப்பாகை — நீளமான துணியால் திரிக்கப்பட்டிருந்த கயிற்றில் நாய்—காவடியின் ஒரு பக்கத் தில் ஒரு குடத்தில் பழைய மலம்; மறு பக்கத்தில் பிச்சை யெடுத்த அரிசி; தோள்மீது பெருமாள் மாட்டுக்காரனை நினைவூட்டும் சில சுரைக்குடுக்கைகள்; சற்றே கூன்தோன் றும் நடை; குட்டையான உருவம்; நீண்ட தாடி; எடுக்கப் படாமல் வளர்ந்திருந்த நகங்கள்; இங்குமங்குமாகக் கறுப் பாயிருந்தாலும் நரைத்த மயிர். (அவர்) கண்கள் ஒளி மிகுந்த நீல நிறமானவை—வைரங்களைப் போல் மின்னு வன; அகன்ற அடர்ந்த புருவங்கள். அவர் மிகுதியாகச் சுருட்டு பிடிப்பார். பிச்சைக்காரராயிருந்தும் தம்மை அண்டி இரந்தவர்களுக்குத் தாம் ஏற்றதிலிருந்து ஓரளவு கொடுப்பார். அவர் நீண்ட தடியொன்றைத் தம்முட னெடுத்துச் செல்வார். இந்த நினைவுரையின் தலைவரான அவரைப் பற்றி நான் நினைவு கொள்வது இந்த விவ ரங்களே. அவரைப் பற்றி எனக்குக் கிடைத்த செய்திகள் பல திறத்தன. ஐம்பது, அறுபது ஆண்டு நிரம்பியவர்கள், தம் இளமையிலிருந்தே அவரை இதே தோற்றத்தில் பார்த்ததாகவும் அவர் தோற்றத்தில் மிகுதியாக மாறுதல் ஒன்றுமில்லை யென்றும் சொன்னார்கள். வேறு சிலர் அவர் ஒரு சாதாரண பிச்சைக்காரரல்லர்; ஆனால் ஒரு பெரிய சித்தர்—பல அற்புதங்களை நிகழ்த்தியவர் என்று கூறி னார்கள். மற்றும் சிலர் (நான் கேட்பதற்கு) இருபது முப்பதாண்டுகட்கு முன்னர், அவர் ஒரு திகம்பர் அல்லது அவதூதராக இருந்ததாகவும், உடையின்றி, ஊரிலில்

லாது, நாராயணவரத்தைச் சேர்ந்த காடுகளில் திரிந்து வந்த தாகவும் சொன்னார்கள். நான் அவரைப் பார்த்தபோது, அவரைப்பற்றித் திட்டமாக ஒன்றும் பொதுவாக யாருக்கும் தெரிந்திருக்கவில்லை. சூர்த்தபள்ளிக்கருகில் அவருக்கு மனைவியும் மகனும் இருந்ததாகக் கூடச் சொன்னார்கள். இவ்விதமான செய்திகளை உறுதிப்படுத்தக் கூடிய சான்று ஒன்றும் கிடைக்கவில்லை. ஆகவே, இம் மஹானின் இளமையைப் பற்றி ஒன்றும் தெரிந்துகொள்ள முடியாது என்ற நிலைக்கு வந்தேன். இவ்வாறு 55 அல்லது 60 ஆண்டுகள்—அவர் வாழ்க்கையின் முற்பகுதி பற்றியவை—நமக்கு விளங்காமலிருக்கின்றன. அவர் இளமையில் எப்படி இருந்தார்—பிறகு, அவர் வாழ்நாள் முழுவதுமே அவரிடம் காணப்பட்ட மன அமைதியை எப்படி அடைந்தார்; அவர் குண நலன்களை, எது உருவாக்கியது, அவரை மஹானாக்கிய பயிற்சி என்ன என்பவையெல்லாம் மறை பொருள்களாகவே இருக்கின்றன. உணவுக்கும் உடைக்கும் பிச்சையெடுத்து ஊர் ஊராகத் திரிந்த அவர், இவ்வாறு சுற்றுவதிலேயே தம் நாட்களைக் கழித்தார். அவர் நடமாடிய எல்லை, வடக்கே திருப்பதி, காளஹஸ்தி; தெற்கே திருத்தணிகை, திருவள்ளூர்; மேற்கே நகரம், கிழக்கே நாகலாபுரம், கொத்த ,கோட்டை; சில வேளைகளில் இந்த எல்லையைத் தாண்டி, பெரிய பாளையத்திற்கும் சென்னைக்கு அருகிலும் சென்றதாகவும் கூறுவார்கள். இந்த வட்டாரம் முழுவதுமே அவரை அறிந்திருந்தது. கள்ளம் கபடமற்றவராகவும், ஒருக்கால் இல்லையென்ற வீட்டில் மீண்டும் தங்கவோ, அண்டவோ விரும்பாதவராகவும் எப்பொழுதும் ஈர நெஞ்சினராயும் இருந்தார். மனிதனாயினும் மாடாயினும் ஆடாயினும் துன்பத்திலிருந்தால் உதவிபுரிவார். அருகே செல்வோரின் உதவி கொண்டு ஆவன செய்வார்.

இவ்வாறு உதவும் தன்மையிருந்ததால்தான் அவருக்கு எவ்விடத்திலும் வரவேற்பு கிடைத்ததென்று நம்புகிறேன். மக்கள் அவரைச் சுரைக்காய் புர்ரலவாடு அல்லது ராமசாமி என்ற பெயரால் அழைத்தனர். கட்டுக் கடங்காத பிள்ளைகளைக் கீழ்ப்படிய வைப்பதற்காக ஊரிலுள்ள பெரியவர்கள் அவரைக்காட்டிப் பிள்ளைகளை மிரட்டினார்கள். ஆனால் அவர்களுடனிருக்கும்போது அவர் அவர்களோடு விளையாடி அவர்களை மகிழவைப்பார். என்றாலும் அவருக்குத் தனிச் சிறப்பாக மன அமைதியும் உறுதியும் இருந்து அவரை மற்றவர்களுக்கு மேலாக்கின. உயர்ந்தவர், தாழ்ந்தவர் எல்லாம் அவர் பார்வையில் ஒத்தவர்களே, அச்சமூட்டும் மனிதராக அல்லது அறிவுமிக்க மனிதராக அவர் இவ்விடங்களில் கருதப்பட்டு வந்தார். அவருடைய ஏழைமையும் அவருக்கு மதிப்பைக் குறைக்கவில்லை. அவர் சட்டத்தை மீறுவது—அதுவும் அடிக்கடி—நாள் தோறும் 'செகிடி'யில் தீ வளர்ப்பதற்காகத்தான். ஒடிந்து விழுந்து விட்ட மரக்கிளைகள், உளுத்துப் போகும் மரம், விறகுக்கட்டை போன்றவற்றை வலிந்து எடுத்துக்கொண்டு வந்து மாலையில் தீ மூட்டுவார். இத்தீ இரவு முழுவதும் குளிர்காய்வதற்கும் அவர் சுருட்டுக்கு வேண்டிய நெருப்பிற்கும் உதவியாயிருந்தது. மார்கழி, தை மாதங்களில் அவர் நடமாடிவந்த மலைச் சாரல்களில் இது ஒரு பெரிய வசதியாயிருந்தது. இத்தீயை மூட்டுவதற்காக மக்கள் அவரோடு சேர்ந்து கொள்ளுவார்கள். அந்தப் பக்கங்களில் விறகு மலிவாயிருந்தாலும் அஞ்சத்தக்க இவர் வரம்பு மீறி விறகு எடுப்பதற்குக் காரணமாயிருந்தாலும் விறகு எடுப்பதை ஒருவரும் பொருட்படுத்தவில்லை, என்றாலும் இவர் சமூகக் கட்டுப்பாட்டுக்கு அஞ்சியதாகத் தெரிகிறது, ஏனென்றால் ஹரிஜனங்கள் வசித்துவந்த ஊருக்குள் இவர் போவதில்லை. என்றாலும் ஊர் எல்லையில் இளையவரும் முதியவருமான

ஹரிஜனங்கள் இவரைச் சந்திப்பார்கள். இவர் அவர் களுடைய துன்பங்களைப்பற்றிக் கேட்டு ஏற்ற வழியில் உதவி செய்வார். அவர்கள் கொடுக்கும் அரிசி அல்லது நெல் இவைகளை வாங்கிக் கடைக்காரரிடம் கொடுப்பார். பொருளுக்குத் தக்கதாக இராமல் தமக்குத் தோன்றிய ஏதாவது குறைந்த தொகையைக் கடைக்காரர் கொடுத்தால் இவர் அதைத் தம் விருப்பத்தின்படிச் செலவழித்து விடுவார். வண்ணானுக்கு எப்போதும் காசு கொடுத்துத்தான் தம் முடைய கந்தல்களையும் துணிகளையும் துவைத்துக் கொள்ளுவார். கருமானுக்குக் காசு கொடுத்துக் கோடரியோ பாறையோ வாங்கித் தம் சாமான்களோடு சேர்த்துக் கொள்ளுவார். இவைகளைக்கொண்டு மக்கள் தேவைக்காக ஆற்றில் ஊற்றெடுப்பார் அல்லது பள்ளங்களை நிரப்புவார். இத்தகைய பண்புகள் அவர் ஒரு போலிமஹான் அல்லர் என்ற எண்ணத்தை உறுதிப்படுத்தின. அவரைப் பார்க்கும் போதெல்லாம் பின்வருவன என் நினைவுக்கு வந்தன :

**பட்டினத்தடிகள்**

பொருளுடையாரைச் செயலிலும் வீரரைப்
[போர்க்களத்தும்
தெருளுடையாரை முகத்திலும் தேர்ந்து தெளிவது
[போல்
அருளுடையாரைத் தவத்தில் குணத்திலருளிலன்பில்
இருளறு சொல்லிலுங் காணத் தருங் கச்சியேகம்பனே.

பேய் போற்றிரிந்து பிணம்போற் கிடந்திட்ட
[பிச்சையெல்லாம்
நாய் போலருந்தி நரிபோலுழன்று நன் மங்கையரைத்
தாய் போனினைந்து தமர் போலனைவர்க்குந் தாழ்மை
[சொல்லிச்
சேய் போலிருப்பர் கண்டீர் உண்மை ஞானந்
[தெளிந்தவரே.

### தாயுமானவர்

படி முழுதும் விண் முழுதும் தந்தாலும் களியா
பாலரொடு உன்மத்தர் பிசாசர் குணம் வருமே.

### பட்டினத்தடிகள்

பருத்திப் பொதியினைப் போலே வயிறு பருக்கத்தங்கள்
துருத்திக் கறுசுவை போடுகின்றார் துறந்தோர் தமக்கு
வருத்தியமுதிட மாட்டார வரையிம்மா நிலத்தில்
இருத்திக் கொண்டிருந்தா யிறைவா கச்சியேகம்பனே.

அடிக்குறிப்பு :— இவைகளையும் பார்க்க :

### கைவல்யம்

(1) காமமாதிகள் வந்தாலும் கணத்திற்போம்
[மனத்தில் பற்றார்
தாமரையிலைத் தண்ணீர் போல் ஜகத்தொடுங்கூடி
[வாழ்வர்
பாமரரெனக் காண்பிப்பர் பண்டிதத் திறமை
[காட்டார்
ஊமருமாவா ருள்ளத்துவகையாம் ஜீவன்முத்தர்.

(2) பேதகன் மத்தால் வந்த பிராரத்துவம் நானாவாகும்
ஆதலால் விவகாரங்கள் அவரவர்க் கானவாகும்
மாதவம் செயினுஞ் செய்வர் வாணிபம் செயினுஞ்
[செய்வர்
பூதலம் புரப்பர் ஐயம் புகுந்துண்பர் ஜீவன்முத்தர்.

(3) சென்றது கருதார் நாளைச்சேர்வது நினையார் கண்முன்
நின்றது புசிப்பார் வெயில் நிலவாய் விண்விழுது
[வீழ்ந்தும்
பொன்றின சவம் வாழ்ந்தாலும் புதுமையாதொன்றும்
[பாரார்
நன்று தீ தென்னார் சாட்சி நடுவான ஜீவன் முத்தர்.

மஹான்களைப் பற்றிய இத்தகைய விவரங்களிலிருந்து நாம் தெரிந்து கொள்ளுவது உண்மையான மஹான் ஒரு சுகமுனிவராகவாவது, பட்டினத்தாராகவாவது, ஜனகராக வாவது பிச்சைக்காரராகவாவது இருக்கலாம் என்பதே. மேற்கூறிய நற்பண்புகளே இவர்களை மற்றவர்களினின் றும் வேறுபடுத்துவன. சுவாமியைப்பற்றி வேண்டியவரை கூறினேன். அவரிடம் எனக்கு எப்படி மரியாதை பெருக லாயிற்று என்று சொல்ல விரும்புகிறேன். எவ்வளவுக் கெவ்வளவு நான் அவர் செயல்களைக் கவனித்தேனோ அவ்வளவுக்கவ்வளவு அவரிடம் எனக்கு அச்சம் ஏற் பட்டது. தெய்வம் வந்தவர்களிடம் செல்வதுபோல, பகலா யினும் இரவாயினும் அடிக்கடி அவரிடம் சென்று அவர் பேசுவதைக் கேட்பேன். அவர் கூறுவன உவமைக் கதை களாக இருக்கும். அவர் கூறினவற்றை எப்போதுமே நாங்கள் சரியாகப் புரிந்து கொண்டோமென்று சொல்ல முடியாது.

1875-ஆம் ஆண்டில் ஒருமுறை அவரிடம் சென்ற போது தம்மிடம் நான் பகலில் போகக் கூடாது என்று தெளிவாகப் பணித்தார். நான் அங்கே இருந்தவரை வேண்டுமானால் விடியற்காலை 4 மணிக்குப் போகலாம் என்றும் சொன்னார். 1876-ஆம் மார்ச்சு மாதம் நான் சித்தூருக்கு மாற்றப்படும் வரையில் அவர் சொல்லிய வண்ணமே செய்து வந்தேன். "எதற்கும் ஒரு உரிய நேரம் உண்டு; உரிய இடம் உண்டு"—இதை வாழ்க்கைக்கு வேண்டிய அறிவுரை என்பதாகக் கொண்டேன்.

இத்தகைய மஹான்களுக்கு உணவளிப்பதில் எனக்கு மகிழ்ச்சி. இல்வாழ்வானுடைய கடமைகளில் இதை முதன்மையாகக் கருதினேன்.

### குறள்

துறந்தார்க்கும் துவ்வாதவர்க்கும் இறந்தார்க்கும்
இல் வாழ்வா னென்பான் துணை.

நாராயணவரத்திலிருந்து மாற்றப்பட்டதால் நான் விரும்பியபடி அடிக்கடி சுவாமியைப் பார்க்க முடியவில்லை. வேலையிலிருந்து கிடைக்கக்கூடிய உரிய விடுமுறை (Casual Leave) போன்ற விடுமுறைகளின் போதுதான் அவரைப் பார்க்கச் செல்வதுண்டு.

1876-77—பஞ்சத்தின் போது நாராயணவரத்திலிருந்த மஹாதேவ முதலியார் என்பாரிடம் சுவாமி எப்போது அங்கே வந்து தங்கினாலும் உணவளிக்கும்படி ஏற்பாடு செய்திருந்தேன். சுவாமி 15–20 உற்றாரில்லாத பிள்ளைகளைச் சேர்த்து வைத்துக் கொண்டிருந்தார். தம் தாகத்திற்குத் தண்ணீர் அருந்துவது கூட அவர்களுக்கு உணவளித்த பிறகுதான்! பஞ்சம் தீர்ந்த பின்னர் சில பிள்ளைகளை அவர்கள் உறவினர் அழைத்துச் சென்றனர். மற்றவர்கள் ஏதாவது வழி பார்த்துக் கொண்டார்கள்.

இதற்குப் பிறகு நான் அவரிடம் சென்றதெல்லாம், மற்றவர்களைப் போல குறிப்பிட்ட நோக்கத்திற்காக அவர் வாழ்த்தைப் பெறுவதற்காகவன்று — அந்த மஹானைக் கண்ணாரக் காண்பதற்காகவும் சில நாட்களுக்காவது அவர் பசியின்றி யிருக்க உணவளித்தலாகிய சிறிய தொண்டு செய்வதற்காகவுமே. எனினும் சில வேளைகளில் அவரிடம் சென்று என்னை முழுவதும் அவரிடம் ஒப்புவித்துத் தொல்லை யொன்றும் வராதிருக்க அவர் வாழ்த்தை நாடுவேன். அவ்வாறு அவரிடம் ஒருமுறை சென்றது விவரமாகக் கூறத் தக்கது. அது 1880-ஆம் ஆண்டில் நடந்தது. L. F. ஐ P. W. விலிருந்து (அப்போதுதான் பிரித்திருந்

தார்கள். புதிதாக மாற்றியமைத்திருந்த பிரிவுகளில் ஒன்ருகிய வட ஆர்க்காட்டைச் சேர்ந்த ஆரணி ஜாகீருக்கு என்னை மாற்றி இருந்தார்கள். எனக்கும் எனக்கு மேலிருந்த அலுவலருக்கும் இடையே தீர்க்க வேண்டிய சில கருத்து வேறுபாடுகள் இருந்தன. சுவாமியின் அடியாரும் என் மதிப்புக்குரிய நண்பருமாகிய திரு. V. M. செங்கல்வ ராய முதலியார் என்னோடு வந்தார். அவர் மனைவி கருத்தரித்திருந்தார்கள். இந்த முறை நாங்கள் நாராயணவரத்திலிருந்தது மிகக் குறைந்த நேரமே. நாங்கள் திரு. சுந்தரம் செட்டியார் வீட்டுத் திண்ணையில் சுவாமிக்காகக் காத்திருந்தோம். அங்கேதான் அவர் தம் சாமான்களை வைத்துவிட்டு இரவு உணவு பெற்று வருவதற்காகச் சோற்றுப் பானையுடன் சென்றிருந்தார். அவர் மாலை ஏழரை மணிக்குத் திரும்பி வந்தார். அவர் திண்ணை மீது ஏறும்போது நாங்கள் வழக்கம் போல் அவரடிகளில் விழுந்து வணங்கி நின்ருேம். தாம் கொண்டுவந்த சோற்றுப் பானையைக் கீழே இறக்கி வைத்தார். என் பக்கம் திரும்பி, "ஒரு குறைவுமில்லை" என்ருர். என் நண்பர் பக்கம் திரும்பி "ஐயோ, பாவம்! என்ன செய்யலாம்? அப்படியா விதிச்சான்!" என்ருர். பிறகு திரும்பிக் கொண்டு, "அவ்வளவு தாண்டா, போய்படுக்கிற வழியைப் பாருங்கள்" என்ருர். பிறகு அவர் சாப்பிடத் தொடங்கிஞர்.

அவர் சொன்னது முழுவதும் எங்களுக்கு விளங்கவில்லை. என்ருலும், "போக உத்தரவு கிடைத்துவிட்டது. அங்கே நீடித்து இருக்கத் தேவையில்லை" என்று முடிவு செய்தோம். அந்தத் திண்ணையில் படுத்து இரண்டு மணி நேரம் உறங்கிப் பின்னர் இரெயில்வே ஸ்டேஷனுக்குச் செல்வதற்காகப் புறப்பட்டோம்.

நாங்கள் புறப்பட்ட பொழுது இருட்டாகவே இருந்தது. சுமார் மூன்று மணிக்கு வரும் மெயிலில் ஏறுவதற்காக நாங்கள் சற்று விரைவாகவே நடந்தோம். வழியில் ஒரு வகையான இடைஞ்சல் ஏற்பட்டது. என் இடது கால் விரல் ஒரு கல்லில் அடிபட, தம்பிடி அளவு சதை பிய்த்துக்கொண்டு இரத்தம் வரத் தொடங்கியது. இரத்தத்தை நிறுத்துவதற்காக ஒரு துண்டுத் துணியைக் கட்டிவிட்டு மீண்டும் நடந்தோம். இரண்டாவது மைல் செல்வதற்குள் வலது கால் விரலிலும் இவ்வாறே அடிபட்டது. இதற்கிடையில் எங்கள் பேச்சு சுவாமி சொன்னதன் பொருளைப்பற்றி இருந்தது. என் நண்பரின் மனைவிக்கு ஏதோ ஆபத்து ஏற்படப் போகிறது என்று ஐயங் கொண்டேன். முருகம்மாள் என்ற பெயருடைய அந்த அம்மையார் உடல் உரம் அற்றவர். மெல்லிய உடலினர். ஆறு குழந்தைகள் பிறந்தும் அவர்களுக்கு மகிழ்ச்சிதர ஒன்று கூட ஒரு முழு வாரத்திற்கு மேல் பிழைத்திருக்கவில்லை. மற்ற வகையில் அவர்களிருவரும் மகிழ்ச்சியோடிருந்தனர். ஒருவருக்கொருவர் உண்மையான அன்பு கொண்டிருந்தனர். என் நண்பர் இம்முறை பிறக்கப் போகும் குழந்தையைப் பற்றி ஐயங் கொண்டிருந்தார். முன்பே சொன்னபடி அந்த அம்மையார் முடிவு நெருங்கி விட்டது என்று நான் அச்சம் கொண்டிருந்ததால் சுவாமி இதை முன்னதாகவே குறிப்பிட்டதாகச் சொன்னேன். ஆனால் என் நண்பர், சுவாமி எங்களிடம் பேசும் போது திரும்பியிருந்த பக்கத்தைக் கவனிக்காததால், முதலில் சொன்னதை நினைவு கொண்டு "ஒரு குறைவுமில்லை என்று சொல்லவில்லையா?" என்று கேட்டார். "இல்லை, நீங்கள் அவரைச் சரியாகப் பார்க்கவில்லை" என்று பதிலளித்தேன். ஆனால் சுவாமியே தாம் முன்கூட்டித் தெரிவிப்பது பிரிவுக்குள்ளாகப் போகும் கணவருக்குத் துயரம் தரக்கூடாது என்று கருதி வெளிப்

பண்டையாகச் சொல்லாதிருக்க நான் தீமையை வெளிப்படை யாக எதிர்பார்த்துச் சொல்வது போலாயிற்று.

அடுத்த சில மாதங்களில் நிகழ்ந்தவை சுவாமியின் அன்பையும் எதிர்கால நோக்கையும் தெளிவாக்கின. எங்கள் பயணத்திற்கு மூன்று மாதங்களுக்குப் பிறகு என் நண்பரின் மனைவி ஆஸ்பத்திரியில் இருந்தார். நினைவிருக்கக் கூடிய அந்த இரவு நடந்ததை நினைவூட்டி என் நண்பருக்கு ஆறுதல் சொன்னேன். அந்தப் பயணத்திற்கு மறுநாள் என் மேல் அலுவலரைப் பார்க்க வேண்டியிருந்தது. கால் விரல்களில் அடிபட்டிருந்ததால் என் வேலையின் பொருட்டு வழக்கமாக அணியும் நிஜார், ஜோடு இல்லாமல் வேஷ்டி உடுத்திச் சென்றேன். இவற்றுள் முன்னே கூறிய உடை என் வேலைக்கேற்றதாகவும் இதற்குமுன் எனக்கு மேல் அலுவலராயிருந்த ஒரு வெள்ளையரின் சொற்படி நான் மேற்கொண்டிருந்தாகவும் இருந்தது. ஆனால் பின்பு வந்த அலுவலர் இந்தியர்கள் வெள்ளையர் உடையில் வருவதை மிகவும் வெறுத்தார் என்பது தெளிவு. எனவே என் உடை மாற்றம் அவருக்கு மகிழ்ச்சி தந்தது போலும். இரண்டு ஆண்டுகளுக்கு முதல் முறையாக ஒரு மணி நேரத்திற்கு மேல் பல செய்திகள் பற்றி என்னிடம் பேசினார். என் நிலைமையில் மாறுதல் ஏற்பட்டது. உரிமை யிருந்தும் ஆறு ஆண்டுகளாக எனக்குத் தரப்படாமலிருந்த என் இலாகாத் தேர்வுக்கு முயல இசைவு கிடைத்தது. இரண்டாது வகுப்பு கிடைத்தது. ஒன்பது மாதத்திற்குள் முதல் வகுப்புக்கு மறுபடியும் தேர்ச்சி பெற்றது இலாகாவி லிருந்தவர்களுக்கே வியப்பாக இருந்தது.

மஹான்கள், இறந்தகாலம், நிகழ்காலம் மட்டுமல்ல, எதிர்காலத்தையும் உணரும் ஆற்றல் படைத்தவர்கள் என் பதைக் காட்டுவதற்காகவே இந்நிகழ்ச்சியைப்பற்றி இவ் வளவு விவரமாகக் கூறினேன்.

எதிர்காலத்தைப் பற்றிய முன் அறிவிப்புகள் அவர் கூறும்போது அவரது பார்வையிலும் பெருமிதமான தோற்றத்திலும் காணப்பட்ட சில தனிச்சிறப்புக்கள் குறிப்பிடத் தக்கன. பொதுவாக அவர் உணவருந்தி சுருட்டு பிடித்த பின்னரே இவ்வறிவிப்புக்கள் வரும். தாமிருந்த திண்ணையிலோ, கட்டிலிலோ உட்கார்ந்து கொண்டு வலது காலை இடது கால்மேல் வைத்து, நீண்டு தொங்கும் தம் தாடியைத் தடவிக்கொண்டு, தலைப் பாகையை ஒழுங்காக நெற்றிற்கு மேல் தள்ளிவிட்டு, தம்முடைய மேல் துணியையும் சாமான்களையும் பின்னால் வைத்துவிட்டு கவர்ச்சியான புன் சிரிப்புடனும் ஒளிமிக்கக் கண்களில் பொருட் செறிவும், கூர்மையும் பெருமிதமும் விளங்கவும் யாருடைய எண்ணங்களை அவர் தெரிந்து கொண்டாரோ அவற்றைத் தம் கையால் அதிகாரத்தோடு காட்டி, அவருக்குச் சில சொற்கள் ஆறுதலாகவோ மத்தியஸ்தமாகவோ அல்லது வாழ்த்தாகவோ அருள் பாலித்தல், மற்றொருவரைக் கவனிப்பதற்குமுன் சிறிது நேரம் செயலற்று மௌனமாக இருத்தல் போன்ற சுவாமியின் தோற்றத்தைப் பற்றிய சில விவரங்கள் குறிப்பிடத் தக்கன. இச்சமயங்களில் அவர் தலைசிறந்து விளங்கினார். நிறை வெய்திய மனிதனின் உண்மை உருவமாக விளங்கினார். அவர் நெஞ்சம் ஆன்ம நேய ஒருமைப்பாட்டுக்கு அடையாளமாயிருந்தது. அருளே உருவெடுத்தாற் போன்றிருந்தார். அழிவுறும் உடலை வென்றவராயிருந்தார், உலகத்திலுள்ள படைப்புப் பொருள்களைப் போலல்லாமல் அவற்றின் தலைவனைப் போன்றிருந்தார். இத்தகைய காட்சி எனக்கு அடிக்கடி கிடைத்தது. இந்த அருள் தோற்றத்தைப் பார்த்துக் கொண்டே இன்பத்தால் மெய்ம் மறந்து நிற்பது மிக்க மகிழ்ச்சி தந்தது.

கர்மம் என்பது உண்மையில் எதிர்வினை அகங்காரத்தின் விளைவான செயல், முதலில் எண்ணமாய்த் தோன்றுகிறது. பிறகு செயலாகிறது — இவ்வாறு கர்மத்திற்கு முதலாகிறது. ஆகவே அகங்காரம் கர்மத்தின் கருப்பொருள். எண்ணம் கர்மத்தின் வளர்ச்சி, செயல், கர்மம் முற்றுப் பெற்று ஆற்றலாய் இயங்குவது. இதை எதிர்க்க முடியாது. விதியென்ற கொள்கை மூலகாரணத்தை மறந்து எல்லாம் முன்னதாகவே முடிவு செய்யப் பெற்றது என நினைக்கிறது. செயலாக மாறாத வரையில் ஒரு எண்ணத்தை அதற்கு மாறான போக்கையுடைய வேறொரு எண்ணத்தால் எதிர்க்கலாம். உயிர் விளக்கம் பெற்றுத் தன் சிறுமையை உணர்ந்து தன்னினும் மேம்பட்டுத் தன்னுள் உறையும் பரம்பொருளின் ஆணை வழி நிற்கின்றபோது மூலகாரணமான அகங்காரம் ஓய்ந்துவிடும். வீடுபேறடைவதற்காக இவ்வாறு மூவகையாக இயங்கும் கர்மத்தின் போக்கை மாற்ற வேண்டும். விலக்க முடியாதது என்று முன் வினையின் விளைவை (பிராரப்தத்தை) நுகர்ந்து, பொறுத்துக் கொள்ள வேண்டும். உலக மேடையில் இதுவே நம் நிலையானால் அகங்காரத்தை விடுவதால்தான் விதியை மீறலாம். அப்பொழுதுதான் ஞானியின் ஆற்றல் ஏற்படும். அருளினால் ஞானி பிறருக்குக் கர்மத்தை வெல்லும் வழியை உணர்த்தி முன்னதாகவே பழவினையின் விளைவை அறிவித்து அதை நுகர வேண்டிய உறுதி தருகிறார். நாமே நம் விதியை ஏற்படுத்திக் கொள்ளுகிறோம். என்றாலும் தங்கள் விதியை வென்ற மஹான்களின் உதவியால் நாம் நன்மை அடையலாம். வாழ்க்கை வரலாற்றிலிருந்து தத்துவ ஆராய்ச்சியில் நுழைகிறேன் என்று அஞ்சுகிறேன். ஆனால் ஒரு மஹானின் வாழ்க்கை இங்கே பொருளாக இருப்பதால் இவ்வித விளக்கம் பொறுக்கற் பாலதே.

ஒரு முறை நான் சுவாமியிடம் சென்றபோது ஆரஞ்சுப் பழங்கள் வாங்கிச் சென்றிருந்தேன். என் நண்பர் டோக் நாராயணசாமி நாயுடு தோலை உரித்துக் கொண்டிருந்தார்; பலபிள்ளைகள் பழங்களைச் சூழ்ந்துகொண்டு பழங்களில் பங்கு பெற்றுக்கொண்டிருந்தார்கள். பழங்கள் தீர்ந்துவிடும் சமயத்தில் ஒரு பையன் ஓடி வந்து இன்னும் வேண்டுமென்றான். கடைசிப் பழத்தைச் சுவாமிக்குத் தரவேண்டுமென்று, என் நண்பர் அதை அவனுக்குக் கொடுக்க மறுத்தார். சுவாமி குறுக்கிட்டு "ஏன் பையா? அதை அவனுக்குக் கொடுத்துவிடு. அதற்காக அவன் அலைகிறான்; அது இல்லாமல் நாம் இருக்கலாம். (தம் தொண்டையைச் சுட்டிக் காட்டிக் கொண்டே) அது இங்கே வரும் வரைதான் அதைச் சுவைக்க முடியும். அது நமக்குக் கட்டாயம் வேண்டுவதன்று, கொடுத்துவிடு, பையா, கொடுத்து விடு" என்று சொன்னார். என் நண்பர் சுவாமி சொன்னபடி நடந்து பழத்தைக் கொடுத்து விட்டார். மகிழ்ச்சி முகத்தில் தோன்ற மஹான், "சபாஷ்! நல்ல வேலை செய்தாய்!" என்று சொன்னார்.

இவ்வாறு சமயம் வாய்க்கும் போதெல்லாம் தம் அடியார் கவனத்தைக் கவர்ந்து நடத்தை அளவுமீறிச் செல்லும் போதெல்லாம் கண்டித்து வந்தார். சுவாமியின் அடியார்களில் ஒருவரும், குடும்பத்தோடிருந்தாலும் துறவி என்றே சொல்லக் கூடியவருமான V. M. செங்கல்வராய முதலியார் கூறும் வரலாற்றில் மிகப் பல நிகழ்ச்சிகள் கூறப்பட்டுள்ளன. அவரைக் காணும்போதெல்லாம் மகிழ்ச்சி அடைந்து சுவாமி அவருக்கு நல்ல ஸ்வாமி என்ற பெயரைக் கொடுத்திருந்தார்,

தற்பெருமையாகவும் தற்புகழ்ச்சியாகவும் கருதப்படா விட்டாலும் எனக்குக் கிடைத்த பல நன்மைகளைப் பற்றிக் கூறுவது மிகையாகும். என்னைப் பற்றியனவும் எனக்கு விளக்கம் ஏற்படுவதற்காகக் குறிக்கப்பட்டனவுமான வற்றைப்பற்றிச் சொல்லப் போவதில்லை.

எனினும் என்வாழ்க்கையில் நிகழ்ந்த இன்னொரு செய்தியைப்பயிறி மட்டும் சொல்லி முடித்துக் கொள்ளு கிறேன். இது நடந்தது 1892-ல் ஆகும். கொடுக்கப்பட்ட ஜில்லாவில் (இராயலசீமாவில்) (Ceded Districts) நான் நான்கு ஆண்டுகள் இருந்தேன். குளிர் காய்ச்சல் என் உடல் நிலையைப் பாழ்படுத்தியிருந்தது. இலாகாவில் உயர்ந்த வகுப்புக்காகக் குறிக்கப்பட்டவர்களில் நான் ஒருவன். எங்களைப் போன்றவர்கள் நடந்து கொள்ளும் முறையைப் பொருத்ததாயிருந்தது, மற்ற இந்தியர்களின் முன்னேற்றம். ஆகவே என்னையும் என் வேலையையும் கண் காணித்து வந்தார்கள். பலவித சோதனைகள் இருந் தன. இந்த நிலைமையில் வேலை செய்வது எனக்கு மிகத் தொல்லையாக இருந்தது. வேலையிலிருந்து ஓய்வு பெறும் நாளை எதிர்பார்த்திருந்தேன். கிழக்கு நோக்கி அமர்ந்திருந்த சுவாமியின் முன் நான் நின்று கொண்டிருக்க,அவர் தமக்கு வழக்கமான புன்சிரிப்போடு என் பார்வையை ஈர்த்துக் கையை முதலில் தெற்கு நீட்டிப் பிறகு தென்கிழக்கு, சில நிமிஷங்கள் பொறுத்து வடமேற்கு நீட்டி, "ஆம், போ, முடித்துக் கொண்டு வந்துவிடு" என்றார். நான் ஓராண்டு மதுரையிலும் திருநெல்வேலியிலுமிருந்தேன். தஞ்சாவூரில் ஐந்து ஆண்டுகள் இருந்தேன். ஓராண்டு ஓய்வு பெற்றிருந் தேன். மீண்டும் மூன்றாண்டுகள் கொடுக்கப்பட்ட ஜில்லாக் களில் (இராயலசீமாவில்) இருந்தேன், பிறகு 1902-ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதத்தில் உதவிச் சம்பளம் பெற்றுக்

கொண்டேன். கர்நூலில் கடைசியாக என்வேலையை முடிப்பதற்குச் சரியாக மூன்று வாரத்திற்கு முன், சுவாமி தம்மைச்சுற்றி இருந்தவர்களிடம் தாம் இவ்வுலகைவிட்டு மூன்று நாட்களில் நீங்குவதாக முன்னதாகவேகூறி, நாராயணவரத்தில் தம் உடலை நீத்தார். அவர் உடல் அங்கே சமாதியில் வைக்கப்பெற்று இப்போது ஒரு கோவிலும் அங்கே கட்டப்படுகிறது. நாள் தோறும் வழிபாடு நடக்கிறது. ஆடிமாதத்தில் ஹஸ்த நக்ஷத்திரத்தில் ஆண்டு தோறும் ஆயிரம் மக்களுக்கு உணவளிக்கப் பெறுகிறது.

சென்னை
14-11-1910 } (கையொப்பம்) N. ரத்தினசபாபதி

கூடூர் தாசில்தார்,

## M. குப்புசாமி செட்டியார் M.A.

### அவர்கள் கடிதத்திலிருந்து சில பகுதிகள்.

சுரைக்காய் சுவாமி அவர்களைப் பற்றி அனைத்தும் எழுதுவது எளிதன்று என்று தாழ்மையோடு தெரிவித்துக் கொள்ளுகிறேன். அவரை நான் நாராயண குருவாகவும் அனைவர்க்கும் குருவாகவும் கருதினேன். நாராயணவரத்திலும் அதன் சுற்றுப்புறத்திலும் வாழ்ந்து வந்த அவரை ஸ்ரீமந் நாராயணனின் அவதாரமாகவே கருதினேன்.

எக்ஸிக்யூடிவ் எஞ்சினியராக இருந்து ஓய்வு பெற்றிருந்த N. ரத்நசபாபதி பிள்ளைக்கு எழுதிய கடிதத்தில் கூறுவதாவது :

"இதற்கிடையில் உங்கள் வேலையில் இடமாற்றத்தைப் பற்றி அவர் (சுவாமி) சொன்னது—அதாவது முதலாவது ஒரு வாய்க்காலும் பிறகு மேற்கே ஒரு பெரிய குளமும் உங்கள் பொறுப்பில் இருக்கும் என்றது—அவ்வாறே நடந்தேறியது."

சென்னை நீதிமன்ற வழக்கறிஞர் (Solicitor)

## C. விஜயராகவலு நாயுடு

## அவர்களின் அனுபவங்கள்.

அன்புள்ள சகோதரருக்கு,

நாம் வணங்கிவந்த சுரைக்காய் சுவாமியுடன் எனக்கு ஏற்பட்ட அநுபவங்களைப் பற்றி எழுத வேண்டுமென்று கேட்டிருந்த உங்கள் விண்ணப்பத்திற்கு விருப்பமில்லாமல் நான் இசைய வேண்டியிருக்கிறது. ஏனென்றால் உலக இன்பங்களில் ஈடுபட்டிருப்பவர்களுக்கு விளங்காத பொருளைப்பற்றி அவர்களுக்கு விளங்கும் வகையில் எழுத முடியாதவனாயிருக்கிறேன்.

இத்தகைய பொருளைப்பற்றி எழுதுவது அவர்களால் பைத்தியக்காரத்தனமாகக் கருதப்படும். இவ்வுலகில் நாமெல்லாரும் குறைந்த காலமே வாழும் பிரயாணிகள் என்பது நம்மெல்லோருக்குந் தெரியும். உலோகாயதரா யில்லாதவர்கள் அனைவருக்கும் இக்கொள்கை உடன்பாடு. இதனால் நாம் யூகிப்பது மனித உடல், அவன் அணியும் உடைகளில் ஒன்று என்பதாகும். இவ்வாழ்க்கையிலேயே இவ்வுடைகளை ஒவ்வொன்றாக நீக்குகிறவர்கள் பெரிய வர்கள் மஹாத்மாக்கள். அவர்கள் நம் வணக்கத்திற்கும் வழிபாட்டிற்கும் உரியவர். நாம் வணங்கி வரும் சுவாமி இத்தகையவர்களில் ஒருவர். நம் மஹானின் அறிவுரைப் படி விடாமுயற்சியோடு நடப்பவர் அனைவரும் இவ்வாறாக லாம்.

எதிலும் நம்பிக்கையற்றவர்களை இதை நம்பும்படிச் சொல்லவில்லை. நம் சுவாமி எளிமையை விரும்பினார்.

நேராக ஒருவரிடமும் அவர் பேசியதில்லை. புலன்களுக் கெட்டாதனவற்றைக் காணும் ஆற்றலுக்கும் மேற்பட்ட ஆற்றல் உடையவர். காலம், இடம் என்ற மறைப்புத் திரையை அகற்றினார். பின் வருவனவற்றைப் பலமுறை முன்னதாகவே தெரிவித்திருக்கிறார். குறிப்பிட்ட சிலர் எங்கே இருக்கின்றனர் என்று அவர் சரியாகச் சொல்லி யிருக்கிறார். பலமுறை அவர் தம் உடலை விட்டு விட்டுச் சென்று சிலருக்குத் தம் அடையாளம் தெரியாமலே உதவி விட்டுத் திரும்பி யிருக்கிறார். இந்த வித்தையை அவர் நன்றாக உணர்ந்திருந்தார். உலகத்தில் பாராட்டப்பெறும் சிறப்புக்களை அவர் விரும்பவில்லை. உட்பொருள் கொண்ட மொழியில் அனைவரையும் அனைவரிடத்தும் உண்மையாக வும் நீதியாகவும் நேர்மையாகவும், பரிவாகவும் இருக்கும்படி அறிவுறுத்தி யிருக்கிறார்.

இதுவே அவர் சமயம். இத்தகைய ஆற்றல்களைக் குறித்துச் சிறிது ஐயம் உடையவர்களுடைய நம்பிக்கையை உறுதிப்படுத்த இதை நான் எழுதுகிறேன்.

உண்மையான "நான்" என்பது எது என்பதைப் பற்றிக் கூறும் அந்தக் கல்வியைக் கற்பவர்கள் தங்களைக் கண்டு அனுபவிப்பார்கள்.

மணலைச் சர்க்கரையாக்குவது போன்ற மாயவித்தைக் காரரல்லர் நம் சுவாமி, அப்படிச் செய்கிறவர்களைப் பெரிய வர்கள் என்று நான் கருதுவதில்லை.

சென்னை
28-9-1910 (Sd.) C. விஜயராகவலு நாயுடு

## அரசாங்க உபகாரச் சம்பளம்பெற்ற

# N. ராஜு நாயுடு

## அவர்களின் சொந்த அனுபவங்கள்

1880-ஆம் ஆண்டிலிருந்து நான் ஹைதராபாத் அச்சகத்தில் (Head Account Clerk) தலைமைக் கணக்குப் பரிசீலகராய் இருந்தேன். 1890-ஆம் ஆண்டில் மூன்று மாத விடுமுறை பெற்றுச் சென்னைக்கு வந்தேன். பக்தி, நிறைந்த படிப்பு, இவற்றுடன் பெரிய தொழில் நிலைகளிலிருந்த என் நண்பர்கள் சிலர் சென்னை வடமேற்கு ரயில் பாதையிலிருக்கும் புத்தூர் ரயிலடிக்கு மூன்று மைல் தொலைவிலுள்ள நாராயணவரத்தில் ஒரு பெரிய மஹாத்மா இருப்பதாகக் கூறினார்கள். இந்தச் செய்தி, உடனே அந்தப் புனிதமான இடத்திற்குச் சென்று சத்குருவின் அடிபணிந்து வணங்க வேண்டுமென்ற பேரவாவை உண்டாக்கிற்று. என் உறவினர் சிலரும் என் மனைவியும் உடன்வர சென்னையை விட்டுப் புறப்பட்டு அன்று மாலையே நாராயணவரம் சேர்ந்தோம். சுவாமி எங்கிருக்கிறார் என்பதைக் கண்டுபிடிப்பது எங்கள் முதல் கடமையாயிருந்தது. சென்னை வாசிகள் உட்பட தம் அடியார்கள் சூழ ஒரு வீட்டுத் திண்ணையில் சுவாமி உட்கார்ந்திருந்தார். பெரியவர் ஏதோ சொல்லிக் கொண்டிருந்தார். எனக்குச் சிறிதும் விளங்காத சொற்களாக இருந்தன. தமிழாயிருந்தும் அவர் சொன்னது எனக்கு விளங்கவே இல்லை. சுமார் 2-மணிக்குத் திடீரென்று திண்ணையிலிருந்து எழுந்து எப்பொழுதும் தம்முடன் உதவிக்கிருந்த M. புருஷோத்தம நாயுடுவைப் பார்த்து, "வா, நாமிங்கிருந்து போய்விடலாம்" என்றார். நாயுடு புறப்பட விரும்பவில்லை. சுவாமி, மறு

படியும் உட்கார்ந்து கொண்டு, கால் மணிநேரம், "அவன் வராண்டா அவன் வராண்டா" என்று வாய்க்குள் சொல்லிக் கொண்டிருந்தார். அவர் சொன்னதன் பொருள் தெளிவாக இருந்தாலும் அந்த நிலையில் அது யாரைக் குறித்தது என்பது விளங்கவில்லை. பிறகு சுவாமி படுத்துக் கொண்டார். அவர் படுத்தவுடன், பெரிய இரட்டை மாட்டு வண்டி ஒன்று மெதுவாக வந்து திண்ணைக்கு எதிராக நின்றது. திடீரென ஏற்பட்ட அக்காட்சி நாடகத்தை யொத்திருந்தது. வண்டியிலிருந்து ஒரு இளைஞரும் இரண்டு பெண்களும் இறங்கினார்கள். அவ்வாலிபன் சுவாமியிடம் சென்று வணங்கி, அவரடிகளில் வீழ்ந்து வணங்கி மிக்க பணிவோடு ஆரஞ்சுப் பழங்கள் முதலியன கொடுத்தான். ஆனால், வியக்கத்தக்க வகையில் சுவாமி மிகுந்த கோபங்கொண்டு அவைகளை வாங்க மறுத்து, "யார் கிட்ட வந்தாயோ அவன் கிட்ட போடா, நான் தெய்வமா? என் கிட்ட என்ன வேலை? போ" என்றார். அப்போது சென்னையிலிருந்து வந்திருந்தவர்கள் குறுக்கிட்டு மருண்டு நின்ற அவரைப் பார்த்து "நீ யார்? எங்கிருந்து வருகிறாய்? சுவாமியைப் பார்த்து வணங்குவதற்கென்றே நேராக சென்னையிலிருந்து வருகிறாயா? அல்லது வேறு எதற்காகவாவது அல்லது எவரையாவது பார்க்க வருகிறாயா? உண்மையைச் சொல். இது பொய் சொல்வதற்கிடமன்று. சுவாமியிடம் விளையாட்டு வைத்துக்கொள்ளக் கூடாது. அக்கரையுடனும் உண்மையாகவும் பேசாவிட்டால் நிலைமை இடைஞ்சலாகிவிடும்" என்றார்கள். அச்சத்தால் நடுங்கிக்கொண்டிருந்த அவர் "நான் முனிசிபல் ஓவர்சீயராகப் பல ஆண்டுகளாக வேலைசெய்து வருகிறேன் சென்ற ஆண்டிலிருந்து எனக்குக் கடுமையான தலைவலி இருந்து வருகிறது. என் மூளை வெடித்துச் சிதறிவிடும் போலிருக்கிறது. என்னால் வலி பொறுக்க முடியவில்லை,

திருத்தணிகை சுப்ரமண்ணிய சுவாமிக்குப் பிரார்த்தனை செய்து கொண்டேன். அங்கிருந்துதான் இப்போது வருகிறேன். அங்கே சிலர், "புத்தூருக்கு மூன்று மைல் தொலைவிலுள்ள நாராயணவரத்தில் ஒரு பெரிய மஹாத்மா இருக்கிறார். அவர் உண்மையாகவே ஒரு மஹான். அவர் தம் அடியார்களை வாழ்த்தி அவர்களுக்கு நன்மை செய்கிறார். அவர், நோயாளிகளுக்கு உடல் நலம் அளித்தல், வருங்காலத்தைப் பற்றி முன்னதாக அறிவித்தல், துன்பத்திலுள்ளவர்களுக்கு ஆறுதலளித்தல் போன்ற பல அற்புதங்களைச் செய்கிறார்" என்று சொன்னார்கள். ஆகையால், நான் இங்கே வந்தேன்' என்றார். தலைவலிக்குக் காரணம் என்ன என்று அங்கிருந்தவர்கள் கேட்டனர். அதற்கு அவர் "ஓரிரவு நான் உறங்கிக் கொண்டிருக்கும் போது இரண்டு எலிகள் சண்டையிட்டு என் தலைமேல் விழுந்து என்னைக் கடித்தன. அதுமுதல் இந்தக் கடுமையான தலைவலி என்னைப் பிடித்துக் கொண்டது" என்று பதிலளித்தார். இவற்றையெல்லாம் கேட்டுக்கொண்டிருந்த சுவாமி திடீரென்று கோபத்துடன் எழுந்து அச்சத்தால் நடுங்கிக் கொண்டிருந்த அவரைப் பார்த்து எல்லோர் முன்னிலையிலும் இங்கிருந்து போய்விடு. இன்னும் சில பெண்களோடு போ" என்றார். அங்கிருந்தவர்கள் ஓவர்சீயர் பேச்சில் ஐயங்கொண்டு அவரை உண்மையைக் கூறும்படிச் சொன்னார்கள். எதிர்பாராத வகையில் இவ்வாறு குற்றஞ் சாட்டப்பெற்ற அவர், தாம் ஒரு பாவியென்றும் பெண்களிடத்தில் தவறாக நடந்தவரென்றும் அதனால் பல கொடிய நோய்களால் வருந்துவதாகவும் கூறினார்.

உடனே சுவாமி திண்ணையை விட்டிறங்கி தம்முடன் உதவிக்கு இருப்பவரை உடன் வரச்சொல்லி எங்கேயோ புறப்பட்டார். உதவிக்கு இருப்பவர் அவர் பின் சென்றார். மற்றவர்களும் அவர்களைத் தொடர்ந்தார்கள். சுவாமி

அங்கில்லாதபோது நான் இருப்பதில் பயனில்லை யென்று நானும் அவர்களைத் தொடர்ந்தேன். சுவாமி தம் அடியார் களுடன் நடந்துகொண்டிருந்தார். ஆனால் திரும்பிப் பார்த்து பொய் சொன்ன ஓவர்சீயர் முதலியார் உடன் வருவதைக் கண்டவுடன் மிக விரைவாக நடக்கத் தொடங்கினார். எங்களில் ஒருவராலும் அவருடன் நடக்க முடியவில்லை.

சுவாமியின் அடியார்கள் சிலர் ஓவர்சீயர் முதலி யாரைப்பார்த்து, "இப்போது நீங்கள் வீடு திரும்புவது நல்லது. பிறகு ஒரு முறை வரலாம். இல்லாவிட்டால் ஏதாவது கெடுதி நேரிடும்" என்று சொன்னார்கள். நடுங்கிக் கொண்டிருந்த அவர் உடனே எங்களனைவரிடமும் விடை பெற்றுக்கொண்டு போய்விட்டார். அவர் சென்றவுடன் சுவாமி அங்கேயே நின்று விட்டார். அவர் நின்ற அதே இடத்தில் தான் இப்போது அவர் சமாதி இருக்கிறது.

சுவாமி நின்று கொண்டிருந்த இடத்தில் அவரடிகளில் விழுந்து வணங்கினேன். என்முதுகைத் தம் வலதுகையால் தட்டிக்கொடுத்து, "குழந்தை! எழுந்திரு" என்றார். நான் எழுந்து நின்றேன். புன்சிரிப்போடு அவர் என்னைப்பார்த்து "உனக்கு என்ன வேண்டும்? குழந்தை!" என்றார். நான் அதற்கு, "இளவயதில் பெரிய குடும்ப சுமை என்மீது சுமத்தப் பட்டுள்ளது. அதனால் நான் மிகவும் அச்சங் கொண்டிருக்கிறேன்" என்றேன். சுவாமி என்னை வாழ்த்தி விட்டு, "குழந்தை, நீ அஞ்ச வேண்டாம். உனக்கு ஒரு கெடுதியும் ஏற்படாது. நீ யாருக்கும் சுமையாயிருக்க மாட்டாய். மற்றவர்கள் தாம் உன் உதவியை நாடுவார்கள்" என்றார். நான் அவரை வணங்கி, "உங்கள் தெய்வீகம் பிரிவின்றி என்னுடன் எப்போதும் இருக்கவேண்டும் என் றேன். சுவாமி அதற்கு உடன்பட்டு என் தலைமீது தம் கையை வைத்து என்னை வாழ்த்தினார். பிறகு என் உற வினர் தங்கியிருந்த இடத்திற்குத் திரும்பினேன். (இந்த

இடத்தில் தான் சுவாமி எப்போதும் இருப்பது.) சுவாமியிடம் பெற்ற வாழ்த்துக்களைப்பற்றி என் உறவினரிடம் சொன்னேன். அப்போது மாலை, மணி சுமார் ஆறு இருக்கும்.

பிறகு என் உறவினரும் நானும் உணவு முடித்துக் கொண்டு உறங்கினோம். அடுத்த நாள் காலை, பொழுது விடிவதற்கு முன் அதாவது சுமார் நாலு மணிக்கு நான் விழித்தெழுந்து சுவாமியைப் பார்க்கப்போகிறேன் என்று என் உறவினரிடம் கூறினேன். அவர்கள், "நீங்கள் இந்த ஊருக்குப் புதியவராயிற்றே! எங்கே போய் சுவாமியைத் தேடிக் கண்டுபிடிப்பீர்கள்?" என்று கேட்டார்கள். இப்படி எங்களுக்குள் பேச்சு நடந்துகொண்டிருக்கும் போது திண்ணைமீது உறங்கிக் கொண்டிருந்தவர்களுள் ஒருவர், திடீரென்று எழுந்து வந்து, "சுவாமி வழக்கமாகத் தங்குமிடங்களெல்லாம் எனக்குத் தெரியும். என்னுடன் வந்தால் சுவாமி எங்கிருந்தாலும் நான் அவரிடம் உங்களை அழைத்துச் செல்லுகிறேன்" என்றார். இதற்கு என் உறவினர் உடன்பட்டு அவருடன் என்னையனுப்ப இசைந்தனர். எட்டுமைல் நடக்கவைத்து சுவாமி இருந்த சுப்பா நாயுடு கண்டிகைக்கு அழைத்துச் சென்றார். அவ்வளவு தொலைவு நடக்கும் பழக்கம் எனக்கில்லாதிருந்தும் எனக்கு நடந்த இளைப்பு தெரியவே இல்லை. கண்ணிமைப் பொழுதில் நாங்கள் சுவாமியைச் சென்று பார்த்தது போல எனக்குத் தோன்றியது. நான் அங்கே செல்வதற்குப் பதினைந்து நிமிஷங்களுக்கு முன்பு சுவாமி, "பாவம்! குழந்தை இவ்வளவு தொலைவு நடந்து வருகிறது" என்றாராம். சுவாமியோடு இருந்தவர்களில் ஒருவருக்கும் இது புரியவில்லை.

சுவாமி நான் வருவதை முன்னதாகவே தெரிவித்ததாக என்னிடம் சொன்னார்கள். நான் அவரடிகளில் விழுந்து வணங்கி நின்றேன். தம்முடன் இருந்தவர்களில் ஒருவரை என்னுடன் அனுப்பி அருகேயிருந்த குளத்திற்கு என்னை

அழைத்துப்போய் கை, கால், முகம் அலம்பவைத்துக் கருத் தாகத் திரும்ப அழைத்து வரச்சொல்லி "குழந்தைக்கு ஒன்றும் தெரியாது; பார்த்துக்கொள்" என்றார். நான் திரும்பி வந்தவுடன் அறுபது வயதான அந்த வீட்டுக்காரம் மாவைப் பார்த்து "என் குழந்தைகள் மிகவும் பசியாக இருக்கிறார்கள். ஏதாவது சாப்பிடக் கொடுங்கள்" என்றார். அந்தக் கிழவி தயிருடன் கலந்த பழஞ்சோறு இருந்த ஒரு பெரிய பானையைக் கொண்டுவந்து சுவாமி முன்பு வைத்தார், சுவாமி அந்த அம்மையாரைப் பார்த்து, "யாருக்காக அங்கே நல்ல மோரை மறைவாக வைத்திருக்கிறீர்கள்? என் குடலை அறுக்கவா? அதைக் கொண்டு வாருங்கள் என் குழந்தைகள் உண்டு மகிழட்டும்" என்றார். அந்த அம்மை யார் நடுங்கிக்கொண்டே உள்ளே சென்று மோரை எடுத்து வந்து சுவாமியிடம் கொடுத்து, "உங்களைக் கிருஷ்ண பரமாத்மா என்று சொல்வதில் ஒரு சிறிதும் ஐயமில்லை" என்றனர்.

நாங்களனைவரும் உண்டு முடித்தவுடன் சுவாமி எழுந்து "குழந்தைகளே, வாருங்கள், போகலாம்" என்றார்.

நாங்கள் புறப்படும்போது அந்த அம்மையார் இரண்டு கை நிறைய வெற்றிலை பாக்கு கொண்டுவந்து சுவாமியிடம் கொடுத்தார்கள். அவர் அவற்றை வாங்கித் தம் மேல் துணி யில் கட்டிக்கொண்டார், அருவிகள், முள் நிறைந்த புதர்கள் இவற்றின் வழியாகச் சுவாமி எங்களை வெறுங் காலுடன் நடக்கச் செய்தார். அவர் சொற்படி நடந்தோம். முட்கள் எங்களுக்குப் புல்லைப்போல இருந்தன என்பது வியக்கத்தக்கது.

ஒருமணி நேரம் நடந்த பிறகு வேறொரு சிற்றூரை யடைந்தோம். ஒரு குடிசையுள் சுவாமி சென்று "ஓ அம்மா. ஓ அம்மா, வா." என்று கூப்பிட்டார். குடிசைக் குள்ளிருந்து

சுமார் எழுபது வயதான ஒரு அம்மையார் வந்து அவரடிகளில் விழுந்து வணங்கினார்கள். சுவாமி தமக்குத் தரப்பட்ட வெற்றிலைப் பாக்கை இந்த அம்மையாரிடம் கொடுத்தார். ஐந்து நிமிஷம் சென்றபிறகு, "வாருங்கள் நாமெல்லோரும் நாராயணவரம் போகலாம். அங்கே என் குழந்தைகள் ஆவலோடு எனக்காகக் காத்துக்கொண்டிருக்கிறார்கள்," என்றார். அப்பொழுது மணி பதினொன்று இருக்கும். நாங்கள் ஊருக்கருகில் செல்லும் போது ஒரு ஆளை முன்னதாக அனுப்பி சுவாமியோடு சிலர் வருவதாகவும் சாப்பாடு தயாராக இருக்கவேண்டும் என்றும் என் வீட்டாருக்குச் சொல்லச் சொன்னேன். ஒரு மணி நேரத்தில் நாங்கள் நாராயணவரம் போய்ச் சேர்ந்தோம். பத்து நிமிஷம் திண்ணையில் உட்கார்ந்து விட்டு சுவாமி எழுந்து உள்ளே சென்று "பாட்டி, எனக்குப் பசிக்கிறது. சோறு போடு" என்றார். நான் ஆள் அனுப்பி ஒரு மணி நேரம் தான் சென்றிருக்குமாதலால், அதற்குள் உணவு செய்தாயிருக்குமா என்று அஞ்சினேன். நான் உள்ளே சென்று உணவு செய்தாகிவிட்டதா என்று கேட்டதற்குச் செய்தாகிவிட்டது என்று சொன்னார்கள். நான் மிகவும் வியப்படைந்தேன். பெரிய மணைமீது சுவாமியை அமரும்படிக் கேட்டுக்கொண்டு அவருக்கு மாலை சூட்டி ஆசார்ய பூஜை செய்தோம். பூஜை முடிந்தவுடன் அவருடன் அமர்ந்து அனைவரும் சாப்பிட்டோம்.

சாப்பிட்டு முடிந்தவுடன் வலது காலை நீட்டி உட்கார்ந்து கொண்டு, புன்சிரிப்புடன் சுவாமி, "நீங்கள் அனைவரும் நன்றாயிருக்கவேண்டும்" என்றார். சுவாமியுடன் எப்போதுமிருந்த அடியார் என் மனைவியை அவரிடம் காட்டி அவள் வணங்கும்போது "இந்த அம்மாள் நான்கு குழந்தைகள் பெற்றார்கள். ஒன்றுகூட உயிரோடில்லை. நீங்கள் அவர்களை வாழ்த்தவேண்டும்" என்றார். அப்படிச்

செய்யத் தாம் சுவாமியும் அல்ல அம்மனும்மல்ல என்று சுரைக்காய் சுவாமி சொன்னார். ஆனால் பொருள் செறிந்த பார்வையுடன் என் மனைவியை வாழ்த்தி ஒரு பெண்ணும் ஒரு ஆணும் பிறக்கும் என்றார். அந்த ஆண்டே ஒரு பெண் குழந்தை பிறந்தது. ஐந்து ஆண்டுகளுக்குப் பிறகு ஒரு ஆண் குழந்தை பிறந்தது. ஆண் குழந்தை பிறந்த செய்தி சுவாமிக்குத் தெரிவிக்கப்பட்டது. அவர் குழந்தைக்கு அர்ஜுனன் என்று பெயரிட்டார். இரண்டு குழந்தைகளும் இப்போது நன்றாக இருக்கிறார்கள். இவர்களுக்குப் பிறகு இரண்டு குழந்தைகள் பிறந்தன; ஆனால் அவை பிழைக்க வில்லை.

ஆயிரத்துத் தொளாயிரத்தில் அரசாங்க வேலையில் நானிருந்த போது ஒரு நாள் மாலை இரண்டு மணிக்கு வழக்கம் போல் என்னுடன் வேலை செய்பவர்களோடு சிற்றுண்டிக்குப் பிறகு சிறிது ஓய்வுக்காக ஹைதராபாத் நல்வாழ்வுப் பூந்தோட்டத்திற்குச் (Residency Gardens) சென்றிருந்தேன். நான் இளைப்பாறு மிடத்தருகில் ஒரு சிறு குன்றும் அதன் பின்புறத்தில் ஒரு சுவரும், எதிரில் ஒரு பெரிய புளிய மரமும் இருந்தன. குன்றின்முன் துணை அலுவலர் (Asst. Resident) உடைய விடுதி பெரிய வெளியில் இரும்பு கம்பி வேலிகளுக்கிடையில் இருந்தது. குன்றின் ஓரமாக அலுவலக (Residencygate) வாயில் இருந்தது. அதன் வழியாக ஹைதராபாத் நகரத்திற்கு வழியிருந்தது. வாயிலருகில் ஒரு சிப்பாய் காவலிருந்தார். முன்பு குறிப்பிட்ட வேலிக்குள் ஏறத்தாழ பன்னிரண்டு பசுக்கள் மேய்ந்து கொண்டிருந்தன. அவற்றுள் ஒன்று பழுப்பு நிறமாயும் உடல் முழுவதும் வெள்ளைப் புள்ளி களுடனும் பார்வைக்கு அஞ்சத்தக்கதாகவும் இருந்தது. அந்தப் பசு, திடீரென்று, கண்ணிமைப்பதற்குள் வேலியைத் தாண்டி குதித்துத் தன் இரண்டு கூரிய கொம்புகளால்

என்னைக் குத்துவதற்காக என் முன் நின்றது. காவல் செய்து கொண்டிருந்த சிப்பாய் என்னைவிட மிகுதியாக அச்சங்கொண்டு, "கடவுளே, அவர் போய் விட்டார், அவர் போய் விட்டார்" என்று உரத்துக் கத்தினர். அவரால் வேறென்றும் செய்ய முடியவில்லை; அவர் கை, கால்கள் செயலற்றுப் போயின, குரல் நடுக்கங்கண்டு விட்டது; மனம் குழம்பிக் கிடந்தது. என்னைப் பொறுத்த வரையில், நான் மிகுதியும் அச்சங்கொண்டு கண்களை மூடிக்கொண்டு, நடுங்கிக்கொண்டே நான் பெரிதும் நம்பியிருந்த மஹாத் மாவை மனத்தால் பற்றிக் கொண்டேன். மின்சாரம் போன்ற இந்த அதிர்ச்சியினின்றும் மீளப் பத்து நிமிடங்கள் ஆயின. கண்களைத் திறந்த போது, ஏறக் குறைய ஒரு முழந்தொலைவில் அப்பொழுதும் அச்சுறுத்தும் நிலையிலேயே பசு நின்று கொண்டிருந்தது. ஆனல் ஐந்து நிமிஷங்களுக்குள் புலியைப் போல சினங்கொண்டிருந்த அந்தப் பசு ஆட்டுக் குட்டியைப்போல அமைதியாகி, பிறகு திரும்பி வந்த வழியே சென்றுவிட்டது. காவலாளியும் இதற்குள் தன்னுணர்வு பெற்று அச்சத்தை விட்டவனய், "ஐயா, நீங்கள் அதிர்ஷ்டசாலி. நீங்கள் தொலைந்து போய் விட்டீர்களென்று நாங்களெல்லாம் நினைத்தோம். கடவுள் தான் உங்களைக் காப்பாற்றினர். அவருக்கு நன்றி" என்று நான் தப்பிப் பிழைத்ததற்காகக் கடவுளுக்கு நன்றி செலுத் தினேன். இத்தகைய நிகழ்ச்சிகள் எவ்வளவோ உண்டு. விரிவஞ்சி அவற்றைக் குறிப்பிடவில்லை.

இடர்ப்பாடுகளும் சோதனைகளும் ஏற்படும் போதெல் லாம் சுவாமியின் பெயரை மூலமந்திரமாகக் கொண்டு தியானம் செய்கிறேன். இடர்கள் பகலவனைக் கண்ட பனிபோல விலகிவிடுகின்றன இந்த மஹாத்மா கடவு ளுடைய அவதாரங்களில் ஒன்று என்பதில் சிறிதும் ஐயமில்லை.

N. ராஜு நாயுடு

## செங்கல்பட்டு ஜில்லா பழைய சீவரம் சுரோத்திரியம்தார்
## B. வேணுகோபால் நாயுடு,
## அவர்கள் அனுபவங்கள்

1901-ஆம் ஆண்டு ஈஸ்டர் விடுமுறையின் போது சுவாமியை வணங்கி வருவதற்காக நான் நாராயணவரம் சென்றேன். நான் சென்ற மூன்றும் நாள், அதாவது விடுமுறை முடிவதற்கு இரண்டு நாட்களுக்கு முன்பு சென்னைக்குத் திரும்புவதற்காகச் சுவாமியின் இசைவு பெற அவர் முன் நின்றேன். அரைமணி நேரத்திற்குமேல் அவர்முன் நின்றும் அவர் பேசாமலிருந்தார். வண்டிக்கு மணியாகவே, நான் ஸ்டேஷனுக்குச் செல்லப் புறப்பட்டேன். துரதிருஷ்ட வசமாக வண்டி தப்பிவிடவே, நாராயணவரம் திரும்பினேன். நான் நாராயணவரம் திரும்புமுன் சுவாமி புன்சிரிப்போடு, "ஸ்டேஷனுக்குப் போனவர் இதோ வருகிறார்" என்று சொன்னாராம். அங்கே இருந்தவர்கள் நான் திரும்பியதைப் பார்த்து வியப்படைந்தார்கள். சுவாமி பேசாமலிருந்ததின் பொருளைத் தெரிந்து கொள்ளாத அறிவீனத்தால், அதன் விளைவை ஏற்க வேண்டியதாயிற்று.

1901-ஆம் ஆண்டில் சென்னை ஐஸ்ஹவுஸ் ரோட் தோட்டத்தில் சுமாமி தங்கியிருந்த போது பிசாசு பிடித்த பெண்கள் அவரிடம் சென்று எவ்விதச் சடங்குமின்றி நலமடைந்தார்கள். அவர்களுள் ஒரு பெண் 70 அல்லது 80 பவுண்டு நிறையுள்ள கற்களைத் தலையில் சுமந்து கொண்டு தோட்டத்தில் இங்குமங்கும் ஓடிப் பொருளற்ற சொற்களையும் தெரியாத வேறு மொழிகளையும் பேசுவது

வழக்கம். ஒருமுறை, எரிகிற ஒரு பெரிய கொள்ளியை எடுத்துக்கொண்டு சுவாமி முன் திரிந்தாள். ஒரு நாள் சுவாமி அந்தப் பெண்ணை அழைத்துத் தாம் உண்ணும் சோற்றில் ஒரு பிடியும் தாம் குடிக்கும் செம்பிலிருந்து சிறிது நீரும் கொடுத்தார். இதை உட்கொண்டவுடன் அந்தப் பெண் பதினைந்து நிமிஷங்கள் உணர்வற்றுக் கிடந்தாள். பின்பு வேறொரு பெண் என்று சொல்லத் தக்க வகையில் எழுந்து மிக்க அடக்கத்தோடு ஒரு மூலையில் நின்றாள். அன்றுமுதல் அவள் நலமடைந்து நல்லபடி நடந்து கொண்டாள். சுவாமி சென்னையிலிருந்த போது செய்த அரிய நிகழ்ச்சிகளில் இது ஒன்று.

1901-ஆம் ஆண்டில் என் உடன்பிறந்தார். B. ராஜ கோபால் நாயுடு L. R. C. P. & S. (Edin) D. P. H (Cantab) மூன்று மாதங்கள் கீல்வாயுவால் நடமாட முடியாதவரா யிருந்தார். அடுத்த வாரத்தில் அவர் ஒரு தேர்வுக்குச் செல்ல வேண்டியிருந்தது. ஆனால் மருத்துவர்கள் அவர் செல்ல முடியாது என்றார்கள். அப்போது சுவாமி சென்னை யிலிருந்தார். அவரை இரண்டு முறை வீட்டிற்கு அழைத்து வந்தோம். ஆனால் அவர் வீட்டிற்குள் நுழையாமலே போய் விட்டார். ஒரு நாள் பகல் சுமார் 12 மணிக்குத் தோட்டத்திலிருந்த வண்டியில் ஏறிக்கொண்டு எங்கள் வீட்டிற்கு வந்து நேரே என் உடன்பிறந்தாரின் கால்களைச் சுவாமி பிடித்துப் பார்த்துவிட்டு வேப்பிலைப் பற்று போட்டால் சரியாய்விடும் என்றார். மற்ற மருந்துகள் அனைத்தை யும் விட்டு வேப்பிலைப் பற்று மட்டும் போட்டோம். மூன்றும் நாள் அவரால் நடக்க முடிந்தது. ஏழாம் நாள் எங்களுக்கெல்லாம் வியப்புண்டாகத் தக்கபடி அவர் சென்னைப் பல்கலைக் கழகத் தேர்வுக்குச் சென்று அதில் வெற்றி பெற்றார். அவர் தேர்வுக்குச் சென்றார் என்று கேட்டு வியப்படைந்த மருத்துவர்கள் நாங்கள் என்ன

மருந்து போட்டோம் என்று கேட்டார்கள். வேப்பிலைப் பற்றைத் தவிர வேறொன்றும் நாங்கள் போடவில்லை என்று சொன்னவுடன் சுவாமியிடமிருந்து இந்த முறையைப் பெற விரும்பினார்கள். ஆனால் அவர்களால் அதைப் பெற முடியவில்லை.

சமாதி அடைவதற்கு முன், 1902-ஆம் ஆண்டு ஜூலை மாதக் கடைசியில் அவர் சென்னையிலிருந்து புறப்பட்ட போது வண்டியில் உட்கார்ந்ததும் தம் வழக்கத்திற்கு மாறாகத் தம் கைத்தடியை நிற்கவைத்துக் கொண்டிருந்தார். சுவாமி எங்கே உட்கார்ந்தாலும் தம் தடியைப் பக்கத்தில் வைப்பார். ஆனால் அன்று வண்டியில் உட்கார்ந்த பிறகும் தடியை நிற்கவைத்தார். பம்பாய் மெயில் மாலை ஆறு மணிக்குச் சென்னை சென்ட்ரலை விட்டுப் புறப்படுவது வழக்கம். ஆறுமணி ஆனதும் 'கார்டு' (Guard) கொடி காட்டினார். ஆனால் வண்டி புறப்படவில்லை. என்ஜினில் ஏதோ கெடுதி என்று நினைத்து ரெயில்வே அதிகாரிகள் வேறு என்ஜினை மாட்டினார்கள். அப்போதும் வண்டி புறப்படவில்லை. அதற்குள் மணி ஆறேகால் ஆகிவிட்டது. பிறகு சுவாமி தடியைப் பக்கத்தில் வைத்தார். வண்டி உடனே புறப்பட்டது. பிளாட்பாரத்தில் நின்று கொண்டிருந்தவர்களில் நானும் என்னுடனிருந்த சிலருமே இந்த அரிய நிகழ்ச்சியின் காரணத்தை உணர்ந்தோம். ஆனால் எந்த நோக்கத்தோடு சுவாமி தம் ஆற்றலைக் காட்டினார் என்பது எங்களுக்கு விளங்கவில்லை. ஒரு வேளை, அதுவே கடைசி முறையாகத் தம் சீடர்களைப் பார்ப்பது என்பதற்காக அவர்களுக்குத் தம் ஆற்றலைக் காட்டினார் போலும். ஏனெனில் சென்னையிலிருந்து புறப்பட்ட ஒரு வாரத்தில் அவர் இவ்வாழ்வை நீத்தார். ஸ்டேஷன் மாஸ்டரும் மற்றவர்களும் என்ஜின் செல்லாததின் உண்மையான

காரணத்தைத் தெரிந்து கொண்டதும் வியப்படைந்தார்கள். பிளாட்பாரத்தில் கந்தைத்துணி கட்டியிருந்த சுவாமியைப் பார்த்த போது அவர் ஒரு எளிய பிச்சைக்காரன் என்று பராமுகமாயிருந்ததற்காக வருந்தினார்கள்.

அவர் யாரும் வியக்கத்தக்கவாறு தம் ஆற்றலை காட்டிய பல நிகழ்ச்சிகள் உண்டு. ஆனால் நேரமும் இடமுமில்லாததால் இதனுடன் முடித்துக்கொள்ளுகிறேன்.

(Sd.) B. வேணுகோபால் நாயுடு.

---

சென்னை, ராயபுரம்

மதராஸ் ரெயில்வே, ஹெட் ட்ராப்ட்ஸ்மன்

## ம-ா-ா-ஸ்ரீ C. முத்துசாமி முதலியாருடைய அநுபவங்கள்.

ஸ்ரீமத் ஸ்ரீமான் சுரக்காய் சுவாமி அவர்களின் சரித்திரத்தையும் அவரை அடுத்தவர்களின் ஸ்வானுபவத்தையும் ஒருமித்துப் புத்தகம் அச்சிடத் தயார் செய்திருப்பதைப் பற்றித் தாங்கள் அன்புகூர்ந்து 27 செப்டம்பர் 1910-ல் எழுதின லெட்டருக்குப் பதில் எனக்குத் தோன்றியவரையில் எழுதுவது யாதெனில் :—

1. மேமீ (1898) முதற்கொண்டு சுவாமியை எனக்குத் தெரியவரும். அந்த மாதத்தில் குடும்பத்துடன் சுவாமியை தரிசிக்கப்போனபோது நாராயணவரத்திற்குத் திரும்பி வருகிற வழியில் மாங்காட்டில் தங்கிவிட்டார். அப்போது சுமார் மாலை 5-மணி. அந்தக் காட்டில் விசேஷ வானரங்கள். நாங்களும் அவருடன் தங்கும்படி நேரிட்டது. அந்த வழியில் ஜனங்களும் இல்லை, அருகாமையில் ஊருமில்லை. சுவாமிக்குப் பால்கிச்சிடி தயார் செய்ய யோசித்ததில் பால் அகப்படவில்லை. அந்தச் சமயத்தில் தற்செயலாய் யாரோ ஒருவர் பெரிய செம்பு நிறைய கலந்த பால் நுரையுடன் சுமார் 2 படி கொண்டுவந்து சுவாமிக்குக் கொடுக்க வந்தார். சுவாமி அவர்கள் நான் கேட்கவில்லை, அவான் கிட்டகொடென்று சொன்னார். அந்த அமிர்தத்தைப் பெற்றுக்கொண்டு அடர்ந்த காட்டில் கிச்சிடி செய்து சுவாமிக்குச் சமர்ப்பித்து எல்லோரும் புசித்துக் கட்டை

யைக் கொளுத்தி நித்திரை செய்தோம். நித்திரை செய்து எழுந்திருக்கும்போது வீட்டில் படுத்தெழுந்தாற் போலிருந்தது. விடிந்தவுடன் சுவாமி நாராயணவரம் போய் விட்டார்.

பால் கொண்டுவந்ததும், குரங்குகளின் சேஷ்டை கிஞ்சித்து மில்லாதிருந்ததும் நினைக்க எனக்கு விசேஷமாயிருந்தது.

2. 1898ஆ செப்டம்பர்மீ 30உ வெள்ளிக்கிழமையன்று நாராயணவரம் குடும்பத்துடன் சேர்ந்து சுவாமியை தரிசித்து அவர்படத்தை அவர் கையில் கொடுத்துப் பெற்றுக்கொண்டேன். அன்றையதினம் சாயரட்சை சுமார் 4-மணிக்கு 2 காசு கொடுத்தார். அன்றுமுதல் 15-நாளுக்குள் எனக்கு உத்தியோகங் கிடைத்தது.

3. 1899 ஆ ஜுலை மீ 1உ ஞாயிற்றுக்கிழமை நின்றை கோட்டையில் சுவாமியை தரிசனஞ் செய்தபோது சதா "அருச்சுன" என்று சொல் என்றார்.

நாளதுவரையில் சுவாமிகள் தம்முடைய கிருபையினால் சுக ஜீவனம் கொடுத்துவருகிறார்.

(கையொப்பம்) C. முத்துசாமி முதலியார்.

## மெஸர்ஸ் கார்டன் வூட்ராப் அண்டு கம்பெனி

மானேஜர் காலஞ்சென்ற

ம-ா-ா-ஸ்ரீ தங்கவேலு முதலியாரவர்களுடைய

## தர்மபத்னி காமாக்ஷி அம்மாள் அநுபவம்.

ஸ்ரீமத் ஸ்ரீமான் சுரக்காய் சுவாமி அவர்களின் சரித்திரத்தையும், அவரை அடுத்தவர்களின் சுவானுபவத்தையும் சேர்த்துப் பிரபலப்படுத்தும்படி புத்தகம் அச்சிடத் தாங்கள் அன்புகூர்ந்து எழுதிய கடிதத்திற்குப் பதில் எனக்குத் தெரிந்தவரையில் எழுதுவது யாதெனில் :—

1. சுமார் 20-வருஷகாலமாய் சுவாமி எனக்குத்தெரியும். முதல் முதல் அவரைப் பிரஜைகளுடன் சேவித்து வருவது வழக்கம். பிறகு என்பேரன் சிரஞ்சீவி அங்கு முதலியாருக்கு 10-நாள் குழந்தையில் அண்டவாதங் கண்டு ஏறுவதும் இறங்குவதுமாயிருந்து அனேக தமிழ் இங்கிலீஷ் முதலான வயித்தியங்கள் செய்தும் தீராமலிருப்பதைப் பற்றி அதிக கவலையாயிருந்து ஒருநாள் இந்த பகவானிடம் குடும்பத்துடன் நாராயணவரஞ் சென்று அவரைச்சேவித்து குழந்தையின் வியாதியைக் காண்பிக்க அவர் அன்புகூர்ந்து, "ஆக்கப் பொறுத்தது ஆறப்பொறு," என்று சொல்லி 3-விரல் காண்பித்துக் கடலெக்காய் எண்ணெயைப் பூசச் சொன்னார், அதுமுதல் நான் எண்ணெயும் அவரிடமிருந்த நெடிவிபூதியையும் பூசிவர நாளுக்கு நாள் குணப்பட்டு அதிகரிக்காமலிருந்தது.

இன்னொருவிசை அவரிடம் சென்றபோது சிறிய பெண் குழந்தைக்கு இருமல் கண்டிருந்ததைப் பற்றிச் சுவாமியை வணங்கிக் கேட்டதற்கு முசுமுசுக்கை வார்க்கும்படி

சொல்லித் தாமரைக் குளத்திற்குச் சென்றார், அப்போது எல்லோரும் அவருடன் குளத்திற்குச் சென்றார்கள். இது மத்தியில் சுவாமி வீட்டில் குழந்தைக்கு முசுமுசுக்கை வார்த்துவிட்டார்கள். பகவானுடன் தாமரைக் குளத்திற்குச் சென்றவர்களில் என் கணவராகிய ம-ா-ா-ஸ்ரீ தங்கவேலு முதலியார் அவர்கள் (வீட்டில் குழந்தைக்கு முசுமுசுக்கை வார்த்தது தெரியாமல்) வழியில் மூலிகையைப் பறித்து மடியில் வைத்துக்கொண்டு சுவாமி பின்னர் போயினர். அப்போது தூரச்சென்ற பகவான் இவர் மடியில் வைத்திருப்பதைத் தெரிந்துகொண்டு கூப்பிட்டு மடியில் என்னவென்று கேட்டு அதை யாரோ எதிரில் நின்ற கிழவியிடம் கொடுத்துவிடென்று சொல்ல, இவர் தம் குழந்தைக்குக் கொஞ்சம் வேண்டுமென்று மனதில் கருதி மடியில் கொஞ்சம் நிறுத்திக்கொண்டு மிகுதியெல்லாம் அந்தக் கிழவியிடம் கொடுத்துவிட்டார். அதைப் பார்த்து பகவான் தன் அரையைத் தடவி இன்னும் கொஞ்ச நாளென்று சொன்னார். அப்போது கூடவிருந்த சுவாமியின் அடியார்கள் ஏன் முழுமையும் சுவாமி சொன்னபடி கொடுத்துவிடக்கூடாது கொஞ்சம் நிறுத்திக்கொண்டபடியினால் இன்னும் கொஞ்சம் நாள்வரைக்கும் இருமல் பாதைப் படவேண்டுமென்று சொன்னார்கள். தெரியாமல் செய்ததைப்பற்றி என் கணவர் கவலைப்பட்டிருந்தார்.

அதுமுதல் 8-மாதத்தில் பூரணமாக யாதொரு மருந்தில்லாமலே சொஸ்தமாய்விட்டது. முதல் சொன்ன குழந்தைக்கு வயது 3-ல் விரைவாதம் பூரண சௌக்யமானது. முன் 3-விரல் காண்பித்தது 3-வது வயதில் நீங்குமென்று பின்னர் விளங்கிற்று.

மறுபடியும் சுவாமியிடம் குடும்பத்துடன் போனபோது ஷை குழந்தை அங்கு முதலியாருக்கு ¼ ரூபாய் கையில் கொடுத்து " என்றுஞ்சிரஞ்சீவியாய் மார்க்கண்டா

யுசாயிருப்பாய்" என்று ஆசிர்வாதஞ்செய்தார். சுவாமி சொன்னபடி அந்தப் பிள்ளை இதுவரையிலும் புத்திசாலி யாய் அடக்கத்துடன் படித்து வருகிறான்.

2. சிலகாலம் பொறுத்து என் குடும்பத்தில் அதிக ஆபத்து நேர்ந்து அதில் துயரப்பட்டிருக்கும்போது அச் சமயத்தில் தெய்வாதீனமாக பகவான் பட்டணத்தில் வந் திருந்தார். சுவாமியை என் வீட்டுக்கு இட்டுக்கொண்டு போய் சோடச உபசாரங்கள் செய்து கற்பூர தீபாராதனை செய்யுங்காலையில் பகவான் ம-ா-ா-ஸ்ரீ தங்கவேலு முதலி யாரை நோக்கி, "தேங்காய் கருராய் உடைந்தது, பயப் படாதே" என்று வாக்களித்தார். அவர் வாக்குப்படியே எங்களுக்கு இடிபோல் வந்த ஆபத்துகள் சூரியன்முன் பனி போல நீங்கிவிட்டன.

3. ம–ா–ா–ஸ்ரீ தங்கவேலு முதலியார் காலமான பிறகு 2-வருஷகாலமாய் எனக்குக் கைசெலவுக்குப் போது மானது கிடைக்காமலிருந்து சுவாமி சமாதியடைய ஒரு வாரம் முன்பாக அவரிடம் போனபோது அவரே அவர் பையிலிருந்த பணத்தை என் கையைப் பிடிக்கச் சொல்லிக் கொட்டினார். அதை எண்ணிப் பார்க்கும்போது ரூபா 5 இருந்தது. அதே மாதத்திலிருந்து என் புருஷன் உத்தியோகஞ் செய்திருந்த (Gordon Woodroffe & Co.) கார்டன் வூட்ராப் கம்பெனியிலிருந்து ரூபா 5 எனக்கு (Pension) பென்ஷன் கொடுத்து வருகிறார்கள்.

இதனால் என்குடும்பம் யாவும் அவராலேயே போஷிக் கப்பட்டு வருகிறதென்று நினைக்க யாதொரு ஐயமுமில்லை.

என்னால் அவருடைய மகிமையைச் சொல்லத் திறமை யில்லாததினால் என் அனுபவத்தைச் சொல்லும்படி நேரிட்டது.

(கையொப்பம்) **காமாக்ஷி அம்மாள்.**

சீவரம் சுரோத்திரியந்தாரரும்
சென்னை நகராண்மைக்கழக உறுப்பினருமான

# B. V. ராமானுஜலு நாயுடு

## அவர்களின் சொந்த அனுபவங்கள்.

1880-ஆம் ஆண்டில் சுவாமியைப் பற்றி என் நண்பர் காலஞ்சென்ற டோக் நாராயணசாமி நாயுடு மூலமாய்க் கேள்விப் பட்டேன். ஆனால் 1886-ஆம் ஆண்டு வரையில் அவரைப் பார்க்கும் பேறு எனக்குக் கிடைக்கவில்லை. எனினும் அவரிடத்தில் எனக்கு மிக்க மதிப்பு இருந்தது. நான் கேள்விப்பட்டவற்றிலிருந்து அவர் பெருமையைப் பற்றி உறுதி கொண்டேன். அப்போது அவர் தியானத்தில் திளைத்திருந்தார். தம்மை நன்றாகக் கட்டுப்படுத்தி வைத் திருந்தார். அவர்பொறிகளுக்கு அடிமையாக இல்லை. பசித்த போது உணவு கேட்பதும் பசி தீர்ந்தவுடன் தியானத்தில் ஆழ்ந்து விடுவதுமாக இருந்தார்.

ஆனால் அவர் மனம் தம்மிடம் வந்தவர்கள் யார் மீதா யினும் திரும்பினால் அவர்கள் வாழ்க்கை முழுவதும் அவருக்குக் கண்ணாடியில் தோன்றும் உருவம் போலத் தெளிவாகிவிடும் — அப்பிறப்பின் வாழ்க்கை மட்டுமன்று முற்பிறப்பும் கூட!

சாதுக்கள் கூட்டத்தில் அவ்வப்போது பழகும் பேறு எனக்குக் கிடைத்திருந்தது. பொது மக்களுடைய வாழ்க்கை முறைகள் எனக்கு வெறுப்பைத் தந்தன. மக்கள் தங்கள் வாழ்க்கையின் பயனை மறந்து நிலையாப் பொருள்களுக்காக அலைகின்றனர். இப்பொருள்கள் கவர்ச்சியுடையனவேனும்

இறுதியில் கவலை, துன்பம், அழிவு இவற்றில் நம்மை விட்டு விடுகின்றன. ஆகையால், இந்தப் பாதையில் உள்ள இடைஞ்சல்களினின்றும் காத்து நன்னெறி செலுத்த ஒரு குருவேண்டும் என்பது தெளிவாகிறது. அத்தகைய குருவைத் தேடிக்கொண்டிருந்தேன். இந்த மஹாத்மா அத்தகையவராயிருப்பாரென்று எண்ணினேன். அவர் கடவுளால் அனுப்பப்பட்டவரென்பது உறுதி. குருவுக்கு வேண்டிய பண்புகள் அனைத்தும் அவரிடமிருந்தன. ஆனால் குருவின் அருள் பெறுவதற்குச் சீடன்தான் சரியாயில்லை.

அவர் எவருக்கும் அறிவுரை கூற மறுத்ததில்லை. அவருடைய அடியார்கள் நன்னெறியில் ஒழுகி வந்தார்கள். அவர்கள் அவரிடம் சென்றபோது ஏதாவது குற்றம், குறைகளிருந்தால் அவற்றை அவர் வன்மையாகக் கண்டிப்பார்.

அவர் அடிக்கடி சுட்டிக்காட்டிய குறை தம்மிடம் வந்தவர்கள் பல்வேறு நோக்கங்களோடு—சிலர் மருந்துக்காக, சிலர் குழந்தை பெறுவதற்காக, சிலர் ரஸவாதத்திற்காக—வந்தார்களே தவிர ஒருவரும் வீடு பேறடையும் வழியைக் கோரியன்று என்பதாகும். "அடிமடியிலே கை போடுவான் ஒருத்தனும் காணோமடா" என்று அவர் அடிக்கடி கூறுவதுண்டு.

அவர் தம் சீடர்களுக்கு அறிவுரை கூற ஊக்கம் காட்டாதிருந்தார் என்று யார் சொல்லக்கூடும்? அறிவுரை பெறும் தகுதி அவர்களுக்கு இருந்தால் அவர் தயங்காது கூறியிருப்பார். விதைப்பதற்கு நிலம் வளமாயும் நன்றாக உழுது பண்படுத்தப் பட்டதாகவும் நீர்ப்பாய்ச்சப்பட்டதாகவும் இருக்க வேண்டும். குரு அறிவுரை கூறுவார் என்று எதிர்பார்ப்பதன் முன் மாணவனிடத்து ஊக்கமும் ஏற்ற மனப்பாங்கும் இருக்க வேண்டும்.

அனைவரும் புரிந்துகொள்ளக் கூடியதாக இருக்கும் என்று அவர் உழவுத் தொடர்புள்ள உவமைகளையே தம் அறிவுரையில் பயன்படுத்தினார்.

சில வேளைகளில் ஆறு அல்லது ஆறுக்கு மேற்பட்ட மாணவர்கள் அவரைச் சூழ்ந்து கொண்டிருப்பார்கள். ஆனால் அவர் கூறுவது அதற்குத் தொடர்புள்ளவர்களுக்கு மட்டுந்தான் விளங்கும். சில வேளைகளில் அவர்கள் கூட நிகழ்ச்சிகள் ஏற்படும் வரையில் அவர் கூறியதன் பொருளை விளங்கிக் கொள்ளாதிருக்கின்றனர். சுருங்கச் சொல்ல வேண்டுமானால் இந்தக் காலத்திய மிகப் பெரிய மஹான் இவர்தாம். ஆயினும் ஆள் நடமாட்டம் இல்லாத காட்டில், தம்மை மிகச் சிலரே தெரிந்துகொள்ளக் கூடிய இடத்தில் வாழ விரும்பினார். உண்மைத் தகுதியுடையவர்களுக்கு எப்போதும் அவர் உதவினார். அத்தகுதி வாய்ந்தவர்களின் எண்ணிக்கை மிகக் குறைந்ததே.

அவர் பேச்சில் அவர் தம்மைச் சுற்றியிருந்த உயிர் வகைகள்—மக்கள், விலங்குகள், பறவைகள் போன்றவை மீது கொண்டிருந்த பேரன்பு நிறைந்திருந்தது.

உலகியலில் ஈடுபாடு மிகுந்துள்ள இக்காலத்தில் சிறிதளவு மக்களுக்கு உதவுவதற்காக அவர் வாழ்ந்தார். ஆனால் உடல் தளர்ச்சியுற்றவுடன் ஆகஸ்டு 1902-ல் அதை இறுதியாக நீத்தார் என்று சொல்லலாம். அவர் உயிருடனிருந்த பொழுது அவரிடமிருந்து உண்மைகளைத் தெரிந்து கொள்ளக்கூடிய அரிய வாய்ப்பை இழந்ததற்காக மக்கள் எவ்வளவு வருத்தப்பட வேண்டும்!

இந்த மஹாத்மாவின் பெருமையைப் பற்றிப் பேச எனக்குத் தகுதியில்லை. எனக்குத் தெரிய வந்த சில

நிகழ்ச்சிகளைப் பற்றிக் குறிப்பிடுகிறேன். உலகத்தார் தாமே ஏற்ற முடிவு காணலாகும். நிகழ்ச்சிகள் நடந்த முறையில் தருகிறேன்.

(1) 1880-ஆம் ஆண்டில் இவரைப் பற்றி நான் கேள்விப்பட்டிருந்தாலும் 1886 ஜனவரி வரையில் இவரை நான் பார்த்ததில்லை. இதில் வியப்பு என்னவென்றால் இவரிடம் எனக்கு அன்பு பெருகப் பெருக் இவர் உருவத்தை நான் எவ்வாறு மனத்தில் தெளிவாகக் கொண்டேனோ அவ்வாறே இவரை முதலில் நான் பார்த்த போது இவர் இருக்கக் கண்டேன்.

(2) எனக்குத் திருமணம் 1886-ஆம் ஆண்டு மே 21-ஆந் தேதி நடந்தது. திருமணத்திற்கு முன்பு இவரைப் பார்த்து வணக்கம் செலுத்த விரும்பினேன். ஆனால் என் தகப்பனார் நான் ஊரைவிட்டுச் செல்லுவதை விரும்பவில்லை. திருமண நாள் விரைவில் நெருங்கிக் கொண்டிருந்தது. மஹாத்மாவுக்குப் பழங்கள் பூ, வெற்றிலை, பாக்கு, மஞ்சள் இவற்றை ரெயில்வே பார்ஸல் மூலமாக அனுப்பினேன். அந்தச் சமயத்தில் எனக்கு மிகவும் வேண்டிய நண்பர்கள் சிலர் அவரோடு நாராயணவரத்தில் இருந்தார்கள். வீடு திரும்ப அவர்களுக்கு உத்தரவு கொடுத்தார். ஆனால் அவர்களோடு புத்தூர் வரையில் வந்தார். வழியில் திடீரென்று ஒரு திண்ணைமீது அமர்ந்து தமக்கு ஒரு திருமண வரிசை வருவதாகவும் அதை அனைவரும் இருந்து பெற்றுக்கொள்ள வேண்டும் என்றும் சொன்னார். சிறிது நேரத்தில் ரெயில்வே பார்ஸல் அவரிடம் கொடுக்கப்பட்டது. அதைத் திறந்து தம்மிடம் வெற்றிலை பாக்கு மஞ்சள் இவற்றையெடுத்துத் தரச் சொன்னார். ஒரு பகுதியை எடுத்து வாழ்த்தி, "பயப்பட வேண்டாம். கல்யாணம் பண்ணிக்கச் சொல்லு" என்று என் நண்பர்

டோக் நாராயண்சாமி நாயுடுவிடம் கொடுத்து என்னிடம் அவ்வாறே சொல்லிக் கொடுக்கச் சொன்னார். நான் வேண்டியது இந்த உறுதிதான்.

(3) மஹாத்மாவிடம் நான் முதல் முறையாகச் சென்றிருந்தேன். முன்பு கூறியது போல நான் நேரில் கண்ட உருவம் என் உள்ளத்தில் இருந்ததே. என்னை அவர் கேட்ட முதல் கேள்வி "கல்யாணம் செய்து கொண்டாயா?" என்பது. "ஆம். சுவாமி, உங்கள் சொற்படியும் உங்கள் வாழ்த்துடனும்" என்றேன். அவர் என்னை முதுகில் தட்டிக் கொடுத்தார். சிறிது நேரங் கழித்து ஆற்றில் குளிப்பதற்குப் புறப்பட்டு என்னையும் உடன் வரச் சொன்னார். போகிற வழியில் ஒரு தோப்பில் சில கருங்கல் தூண்கள் இருக்கக் கண்டோம். சுவாமி அவற்றைச் சுட்டிக் காட்டினார். எங்களுக்குள் பின்வரும் உரை நிகழ்ந்தது :

சுவாமி : பையா, அங்கே இருக்கும் தூண்கள் எதற்காக?

நான் : எதற்காக என்று எனக்குத் தெரியாது சுவாமி.

சுவாமி : அவைகள் யானையின் கால்களைக் கட்டுவதற்காக.

நான் : ஆம். அதற்காக இருக்கலாம்.

சுவாமி : யானை எங்கே?

நான் : அங்கே காணோம்.

சுவாமி : ஏன் அங்கில்லை?

நான் : எனக்குத் தெரியாது, சுவாமி.

சுவாமி : யானையைச் சரியாகக் கட்டி வைக்கவில்லை. அதைக் கட்டி வைத்த பிறகும் சும்மா யிருக்கக்

கூடாது. அது சங்கிலிகளை அறுத்துக்கொண்டு எந்த நேரத்திலும் ஓடிவிடக் கூடும். எப்போதும் விழிப்பாக இருக்க வேண்டும். யானை எங்கே பையா?

நான் : சுவாமி. அங்கே காணுமென்று முன்பே சொன்னேன். வாருங்கள் ஆற்றுக்குப் போகலாம்.

ஆற்றுக்குப் போய் குளித்த பிறகு சுவாமி இதே கேள்வி கேட்டார். நான் சிறு பிள்ளைத் தனமாக "என்ன சுவாமி. அங்கே காணுமென்று எத்தனையோ முறை சொன்னேனே" என்றேன். மறுபடியும் அவர் அன்பான குரலில் "எங்கடா போச்சி பையா?" என்றார். நான், "நேரமாகிறது, வீட்டிற்குப் போகலாம்" என்றேன்.

நாங்கள் அந்தத் தோப்பு வழியாகத் திரும்ப வேண்டியிருந்தது. அந்த இடம் வந்தவுடன் சுவாமி அங்கே நின்று அதே கேள்வி கேட்டார். நான் அக்கரை கொள்ளாது "அங்கே இல்லை" என்றேன். அவர் என் வலக்கையைப் பிடித்துக் கொண்டு அதே கேள்வியைக் கேட்டார்.

என் உடம்பில் ஒரு அதிர்ச்சி ஏற்பட்டது. நான் அசைவின்றி, பேச்சின்றி நின்றுவிட்டேன். என் கண்களில் நீர் பெருகிற்று. அவர் என்னைத் தொட்டவுடன் அவர் கேள்வியின் உட்கருத்தை உணர்ந்தேன். உண்மை காணும் முயற்சியில் நான் பட்ட இன்னல்களையும், அடைந்த தோல்விகளையும் அது குறித்தது. ஒரு மணி நேரத் திறமையான பேச்சு விளக்கக் கூடியதைவிட மிகுதியாக அது ஒரு விநாடியில் எனக்கு விளக்கிற்று.

(4) ஒருமுறை நான் அவர் முன்பு உட்கார்ந்து கொண்டு "ஏன் எனக்கு அறிவுறுத்த அவர் நினைக்கவில்லை," என்று மும்முரமாக எண்ணிக் கொண்டிருந்தேன்.

அவர், "பையா, என் முகத்தை ஏன் பார்க்கிறாய்? உன் குழந்தைக்கு நீதான் பாலூட்ட வேணுமடா" என்று பளிச் சென்று பதில் சொன்னார்.

அவர் சொன்னதோடு பின்வரும் பகவத் கீதை ஸ்லோகத்தை ஒப்பிடுக.

"தன்னைத் தான் உயர்த்திக் கொள்க; தன்னைத் தன்னால் இழிவுறுத்த வேண்டா; தனக்குத் தானே நண்பன்; தனக்குத் தானே பகைவன்."

**கீதை (அத்யாத்மயோகம்)**

(5) என் நண்பர்களில் சிலரோடு ஒருமுறை அவரிடம் சென்றிருந்தேன். அவரடி வீழ்ந்து வணங்கினோம். (இம்முறையை அவர் விரும்பவில்லை. இதைவிட மன அமைதியோடு உள்ளத்தால் வணங்குவதையே அவர் பாராட்டினார்.) பிறகு அவர் முன் அமர்ந்து, நான் அணிந் திருந்த தொப்பியைக் கழற்றி அதில் சில ஆரஞ்சு பழங்கள் வைத்து அவரிடம் கொடுத்தேன். அவர் தொப்பியை அணிந்து கொள்ள விரும்பினார். உடனே பழங்களை எடுத்துவிட்டுத் தொப்பியை அவரிடம் கொடுத்தேன். ஒரு நிமிஷம் அதை அணிந்திருந்து பிறகு அதை எடுத்து அதில் சில வார்த்தைகள் எழுதியிருந்ததாகச் சொல்லிப் படிக்கத் தொடங்கினார். "ரத்னசபாபதி தம்பி இறந்து போட்டான். இனிப் பிழைக்க மாட்டான். ரெட்டை குதிரை சாரட்டு. ஆஹா!". அப்போது செங்கல்வராய முதலியார் நாராயண சாமி நாயுடு, இன்னும் இரண்டு மூன்று பேர்கள் (அவர்கள் பெயர்கள் எனக்கு நினைவில்லை) அங்கே இருந்தார்கள். சிறிது கூட எங்களில் ஒருவருக்கும் விளங்கவில்லை. ஆனால் அவர் சொன்ன ஒவ்வொரு சொல்லும் உண்மையாக இருந்தது. அடுத்த நாள் தபாலில் ரத்னசபாபதி பிள்ளை

யின் இரண்டாவது மனைவி பெங்களூரில் காலமானதாகச் செய்தி வந்தது. மனைவி என்று சொல்லாமல் என் தம்பி என்று சுவாமி சொன்னார் என்பது எனக்கு விளங்கவில்லை. ஒரு வேளை மனைவி, தம்பியைப் போல—அல்லது தம்பியை விட— மேலானவர் என்று நினைத்தாரோ, என்னவோ! ஆனால் N. R. பிள்ளை தம்பிகூட ஓர் ஆண்டிற்குள் இறந்து விட்டார். ரெட்டை குதிரை சாரட்டு என்பது இரண்டாவது மனைவி என்பதைக் குறிப்பதற்காக என்பது வெளிப்படை. கடைசியில் சுவாமி சிரித்தார். இதற்கும் பொருளிருந்தது. ஏனெனில் நான்கு மாதங்களுக்குள் N. R. பிள்ளை மூன்றும் மனைவியை மணந்தார். ஆகவே சுவாமி சொன்ன ஒவ்வொரு சொல்லும் மெய்யாயிற்று. என்றாலும் முதலில் அவற்றின் பொருள் விளங்கவில்லை.

(6) நாராயணவரம் சென்று சுவாமியை வணங்குவதற்காக ஒருநாள் காலையில் புறப்பட்டேன். என் பழைய நண்பர் ஒருவர் என்னை அரக்கோணத்தில் சந்தித்து மேற்கொண்டு அதே வண்டியில் போகாமல் நிறுத்திவிட்டார். என் விருப்பத்திற்குமாறாக நான் அவருடன் தங்கி உண்டு, அடுத்த வண்டியில் நாராயணவரம் செல்ல வேண்டியதாயிற்று. தங்க நேர்ந்ததைக் குறித்து மிக வருந்தினேன். என் நினைவெல்லாம் சுவாமியைப் பற்றியே இருந்தது. அப்போது காலை ஒன்பதரை மணி.

இதே சமயத்தில் நாராயணவரத்தில் என் நண்பர்கள் சிலர் சுவாமி யோடிருந்தனர். உணவு சமைக்கப்பட்டிருந்தது. இலை போட்டுச் சுவாமியை உணவருந்த அழைத்தனர். அவர் எழுந்திருக்கவில்லை. "பையன் வரட்டும், சாப்பிடலாம்" என்று மட்டும் சொன்னார். ஒரு மணி நேரம் பொறுத்து அழைத்த போதும் அதே பதில் சொன்னார். "செவத்தவன் தலைஷிரிச்சான் வரான், தெரு

கோடியிலே வரான். இட்டுகுனுவா சாப்பிடலாம்" என்றார். நான் போய்ச் சேர 12-30 மணி ஆகியிருக்கும். அது வரையில் அவர் சாப்பிடச் சொல்லவில்லை. நான் போய்ச் சேர்வதற்குச் சற்றுமுன் அங்கிருந்தவர்களில் ஒருவரை யனுப்பி என்னை அழைத்து வரச் சொன்னார். நான் சென்று வணங்கியவுடன் "வந்துவிட்டியா, சாப்பிடலாம் வா" என்றார்.

அவரிடம் அவ்வளவு அன்பைப்பெற எனக்குத் தகுதி யில்லையென்று நினைக்க வெட்கமாயிருக்கிறது. நான் அவரைப்பற்றிச் சில நிமிஷங்கள் நினைத்ததற்கு அவர் என்னைப்பற்றி இவ்வளவு கருத்தாக இருந்தார். அவர் அடிக்கடி "என்னைப் பார்த்தால் உன்னைப் பார்க்கிறேன்" என்று சொல்வது வழக்கம்.

இது ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா சொல்லுவதை நினை வுறுத்துகிறது. வேறு நினைப்பின்றி என்னை வழிபடுவார் யாவரோ அந்த நித்திய யோகிகளின் நன்மை தீமையை நான் பொறுப்பேன். (கீதை IX, 22).

ஆதலால் எல்லாக் காலங்களிலும் என்னை நினை. போர் செய். என்னிடத்தே மனத்தையும் புத்தியையும் அர்ப்பணம் செய்வதனால் என்னையே பெறுவாய்." (கீதை VIII, 7.)

(7) சில ஆண்டுகளுக்குமுன் என்னுடைய மருத்துவர் என்னை மருந்து வகையைச் சேர்ந்த (Vermouth) என்ற திராட்ச ரசத்தை உட்கொள்ளச் சொன்னார். முதல் புட்டி எட்டு நாள் வந்தது; இரண்டாவது புட்டி நாலு நாட்களில் முடிந்துவிட்டது. மூன்றாவது புட்டி இரண்டு நாட்களி லும் நான்காவது ஒரே நாளிலும் முடிந்துவிட்டன,

திராட்சரசத்தை உட்கொள்ள விருப்பம் மிகுதியாவதை யுணர்ந்தேன். கையிருப்பாக இன்னும் ஒரு புட்டி இருந் தாலும் விழித்துக்கொண்டு அதை நிறுத்திவிட்டு வேறு மருந்து தரும்படி என் மருத்துவரைக் கேட்டு எழுதினேன். இது நடந்த ஒரு மாதத்திற்குப்பின் சுவாமியிடம் போயி ருந்தேன். அவர் முன் நின்று வழக்கம் போல் வணங்கிய தும், அவர், "அடா பையா, குடியனாய் போய்விட்டியே; முழிச்சி கொண்டாயா பத்ரம்" என்றார். நான் மருந்து சாப்பிட்டுவந்த போது அவருக்கு ஏறக்குறைய நூறு மைல் தொலைவில் இருந்தேன். நான் சாப்பிட்டது என்னைத் தவிர வேறு யாருக்கும் தெரியாது. சுவாமிக்கு இது தெரிய வந்தது வியக்கத்தக்கது. தம் பையனாகிய என்னுடைய அறியாமையைக் கண்டித்து அறிவுரை கூறுவதற்குக் காரணமாயிருந்தவை அவர் என் மீது கொண்டிருந்த பேரன்பும் கண்காணிப்பும் அல்லவா?

(8) சுவாமி சமாதியடைவதற்கு ஆறு ஆண்டுகளுக்கு முன் காசியிலிருந்து ஒரு பிராமணர் தம் தியானத்தில் சுவாமி இருக்குமிடம் தெரிந்து குருவாக அவரை நாடி வந்தார். அவர் உண்மைகாண மிகுந்த ஊக்கம் கொண் டிருந்தார். அவருக்குச் சில ஐயங்கள் இருந்தன. குருவைத் தேடிக்கொண்டிருக்கும்போது சுவாமியுடைய ஆற்றலை. உணர்ந்து அவரிடம் அறிவுரை பெற இவ்வளவு தொலைவு வந்தார். மஹாத்மாவின் திருமுன் மூன்று மாதங்களிருந் தார். அவருடைய ஐயங்கள் தீர்ந்து விட்டன. அவர் காசிக்குத் திரும்பினார். இது ஒரு வியப்பான செய்தி. ஏனெனில் அவருக்கு ஹிந்துஸ்தானி தவிர வேறொரு மொழியும் தெரியாது. சுவாமிக்குத் தமிழ்தான் தெரியும். அவருக்குத் தமிழும் சுவாமிக்கு ஹிந்துஸ்தானியும் தெரியா திருக்கும்போது அவருடைய ஐயங்கள் எப்படி தீர்ந்தன என்று நான் அந்தப் பிராமணரைக் கேட்டேன். அவர்

" அதுதான் வியப்பாயிருக்கிறது. என் ஐயங்கள் எல்லாம் தீர்ந்துவிட்டன. அவர் திருமுன் என் ஐயங்கள் ஒன்றன் பின் ஒன்ருகத் தீர்ந்துவிட்டன. விடைகள் தாமாகவே என் மனத்தில் தோன்றின. உலகத்தின் இந்தப் பகுதியில் இவ்வளவு பெரியவர் இருப்பார் என்று நான் நினைத்தது கிடையாது " என்ருர்.

இந்த நிகழ்ச்சி, ஸ்ரீ தக்ஷிணுமூர்த்தியையும் அவர் மாணவர்களையும் பற்றிக் கூறப்பட்டிருப்பதை நினைவுறுத்துகிறது. "என்ன வியப்பு! ஆலமரத்தடியில் இளவயதுள்ள குருவும் முதியவரான மாணவர்களும் அமர்ந்திருந்தார்கள்! குரு சிறிதும் பேசாமலிருந்தார். மாணவருடைய ஐயங்கள் எல்லாம் தீர்ந்து விட்டன."

(9) ஒரு நாள் காலை சுவாமி ஒரு திண்ணையில் உட்கார்ந்து சுருட்டு பிடித்துக் கொண்டிருந்தார். அப்போது அவருடன் நானும் ஆராவமுது நாயுடு அவர்களும் கத்திகா பார்த்தசாரதி நாயுடு அவர்களும் இருந்தோம். மரத்தின்மீது இருந்த இருபறவைகளைச் சுவாமி சுட்டிக் காட்டி, " பார்த்தாயாடா அவன் சும்மா உட்கார்ந்து கொண்டு இருக்கிறது. அவன் கண்ட பழத்தைச் சாப்பிடுகிறது " என்று சொன்ஞர். அவர் எங்களுக்கு என்ன உணர்த்த விரும்பிஞர் என்பது விளங்கவில்லை. சிறிது நேரம் சுருட்டு பிடித்துக்கொண்டு பேசாமலிருந்து விட்டுப் பிறகு, "சும்மா இருக்கிறது தான் பரமாத்மாடா" என்று சொன்ஞர்.

இப்படி அவர் விளக்கிச் சொல்லியும் எங்களுக்கு அவர் சொன்னதன் பொருள் விளங்கவில்லை. சுவாமி ஏதோ ஒரு பெரிய உண்மையை எடுத்துச் சொன்ஞர் என்று K. பார்த்தசாரதி நாயுடு சொன்ஞர். அதற்குமேல் அவராலும் ஒன்றும் விளக்கமுடியவில்லை,

தற்செயலாக ரிக் வேதத்திலிருந்து ஒரு மேற்கோளைப் படிக்கும் வரையில், எனக்குச் சுவாமி சொன்னதன் தெய்வீக உள்ளுரை தெரியவில்லை. துறக்க நீக்கம் (Paradise Lost) என்ற நூலின் தொடக்கத்தில் மில்டன் இந்தக் கருத்தை மிக அழகாகக் கூறுகிறார். "மனிதனுடைய கீழ்ப்படியாமையையும் தன் சுவையால் இறப்பையும் துன்பத்தையும் உலகத்திற்குக் கொண்டு வந்த விலக்கப்பட்ட மரத்தின் பழத்தையும் பற்றி" (என்று தொடங்குகிறது இந்நூல்).

"அழகான இறக்கைகளையுடைய இரண்டு பறவைகள் நட்பால் பிணிக்கப்பட்டு ஒரே மரத்தில் தொத்திக் கொண்டிருக்கின்றன; ஒரு பறவை அத்தி மரத்தின் இனிய பழங்களைத் தின்று கொண்டிருக்கிறது; மற்றொன்று தின்னுமல் பார்த்துக் கொண்டிருக்கிறது" (ரிக் வேதம்—1-164-10).

அனைவருக்கும் நன்றாகத் தெரிந்த இந்த ரிக் வேத மந்திரம் கடவுளையும் உயிரையும் ஒரே அத்தி மரத்தில், அதாவது மனித உடம்பில், வசிக்கும் இரண்டு பறவைகளாகக் குறிப்பிடுகிறது. இவற்றுள் பிந்தியதுதான், அதாவது மனித உயிர்தான், அத்தி மரத்தின் பழங்களாகக் குறிக்கப்பட்ட வாழ்க்கையின் இன்ப துன்பங்களில் ஈடுபடுவது; முந்தியது, அதாவது கடவுள், இன்ப துன்பங்களால் தாக்குறுமல் பார்த்துக் கொண்டிருப்பது.

மஹாத்மாவின் அறிவுரைகளில் பல, தனிப்பட்ட முறையிலும் ஏட்டில் எழுதக்கூடாத தூய்மை வாய்ந்தனவாகவும் உள்ளவை.

(10) சுவாமி ஒரு நாள் ஒரு வீட்டிற்குச் சென்றார். அந்த வீட்டுக்காரர் சுவாமி காலில் விழுந்து வணங்கித் தம்மை வாழ்த்தும்படி வேண்டினர். அந்த வீட்டுக்காரர்

குடிகாரர், முன் கோபக்காரர். சுவாமி அவருக்குக் கூறிய அறிவுரை மிக நயமாகவும் நன்னடத்தைக்குத் தூண்டு கோலுமாயிருந்தது.

"தம்பி, நீ என்னமோ நல்லவன்தாண்டா, குடிகாரனைப் பார்த்தால் குடிக்க வேண்டாமென்று சொல்லு" என்றார்.

கண்ணுக்கெட்டாத தொலைவில் நடக்கின்றவைகளைச் சுவாமி தெரிந்துகொள்ளுவார் என்பதைக் கீழ்க்கண்ட நிகழ்ச்சி காட்டுகிறது.

சுவாமியுடன் ஓர் இரவு தங்கியிருந்தேன். இரவு ஒரு மணிக்கு என்னை எழுப்பிச் சுருட்டு பிடிப்பதற்கு நெருப்பு கேட்டார். நெருப்பு கொடுத்தேன். அவர் சுருட்டைப் பற்ற வைத்துச் சிலமுறை புகை இழுத்துவிட்டார். பிறகு, அவர் "அம்மா, அம்மா இறந்து போறாளே, யாருமில்லையே நல்ல மஹாலக்ஷ்மி பிச்சையிடுவாடா. ஐயோ, போச்சு, போச்சு" என்றார். அவர் சொன்னது எனக்கு விளங்கவில்லை. ஆனால் யாரோ ஒரு நல்ல பெண் குளத்திலோ எங்கோ தற்செயலாய் யாரும் உதவி செய்ய முடியாத நிலையில் விழுந்து விட்டிருக்க வேண்டுமென்று முடிவு செய்தேன்.

அடுத்த நாள் காலை சுவாமி தம்முடன் என்னை வரச் சொன்னார். இரண்டு மைல் நடந்த பிறகு ஒரு குளத்தருகில் வந்தோம். அங்கே இறந்து கிடந்த பெண்ணையும் அருகில் ஒரு குடத்தையும் பார்த்தோம். சுவாமி அவளைச் சுட்டிக்காட்டி "இந்த மஹாலக்ஷ்மிதாண்டா என்றார். இதைத்தான் முன் இரவு சொன்னார் என்பது தெளிவு.

உயர்ந்த வகைச் சுருட்டு ஒன்றை நான் ஒரு முறை சுவாமியிடம் கொடுத்தேன். அது திண்டுக்கல்லில் ஸ்பென்ஸர் கம்பனியாரால் செய்யப்பட்டது. அதற்கு

'ஸியஸ்டர்' என்று பெயர். வியாபார அடையாளம் ஒரு பெண் சாய்வு நாற்காலியில் பகலுறக்கத்திலிருப்பது. அந்தச் சுருட்டை நான் கொடுத்தவுடன் அவர் "இது எனக்கு வேண்டாமடா, பெரியவங்க கால் மேலே கால் போட்டுக் கொண்டு பிடிக்கிற சுருட்டடா" என்றார். சுருட்டின் வியாபார அடையாளத்தையும் வகையையும் விவரமாகக் குறித்தன. அவ்வளவு செல்வ வாழ்க்கை (Luxury) அவருக்குத் தேவையில்லை. கடையில் விற்ற புகையிலையால் செய்யப்பட்ட எளிய சுருட்டு அவருக்குப் போதியதாயிருந்தது.

குறிப்பிடத்தக்க வகையில் உயிர்களிடத்தில் அவர் கொண்டிருந்த பேரன்பை இரண்டு நிகழ்ச்சிகள் எனக்குக் காட்டின:

காலொடிந்த கழுதையொன்று மிகவும் இரங்கத்தக்க வகையில் கத்திக்கொண்டு அவர் எதிரே சென்றது. துன்பப்படுகின்ற அதைக் கண்டவுடன் அவர் அதன்பின் ஓடி அதன் காலுக்கு மூலிகைகள் வைத்துக் கட்டி ஒரு மாதத்திற்கு மேல், அதாவது அதன் கால் சரியாகும் வரையில், அதற்குத் தீனி போட்டுப் பரிகாரம் செய்தார். அவ்விழிந்த உயிரின் துன்பத்தைப் போக்க அவரைத் தவிர வேறு யார் கருத்தைச் செலுத்தியிருப்பார்கள்!

அடுத்த நிகழ்ச்சி தொழு நோய் முற்றிப்போய் வருந்திக் கொண்டிருந்த ஒருத்தியைப் பற்றியது. கெட்ட நாற்றம் வீசவே அந்தப் பெண்ணிடம் ஒருவரும் அண்டுவது கூட கிடையாது. அவள் குடியிருந்த ஊரைச் சேர்ந்த வர்கள் அவளை விலக்கி விட்டிருந்தார்கள். பாழடைந்த மண்டபத்தின் மூலையொன்றில் அவள் உட்கார்ந்து கொண் டிருந்தாள். பிச்சையெடுக்கச் செல்லுவதற்குக் கூட அவளால் இயலவில்லை. இந்த நிலையில் மஹாத்மா

அவனைப் பார்த்தார். அவனுடைய புண்களைத் துடைத்துக் கடையில் பிச்சையெடுத்துக்கொண்டு வந்த நல்லெண்ணெ யுடன் மற்ற மூலிகைகளையும் சேர்த்துப் போட்டுத் தாம் பிச்சையெடுத்து வந்த உணவில் களியைத் தமக்கு வைத்துக் கொண்டு, சோற்றை அவனுக்குப் போட்டு வந்தார். பொறுக்க முடியாத வலியால் வருந்தி மக்களால் ஒதுக்கப் பட்ட ஓர் உயிருக்கு அவர் இவ்வாறு உதவி செய்தார். இதைவிட மிகுதியாக மனித அன்பு இருக்க முடியுமா?

சுவாமி முதல் முறை சென்னைக்கு வந்தது 1893-ஆம் ஆண்டு மார்ச்சு மாதத்தில். அவர் N. R. பிள்ளை அவர் களுடைய மகள் திருமணத்திற்கு வந்திருந்தார். சிந்தாதிரிப் பேட்டை சுவாமி நாய்க்கன் தெருவிலுள்ள டோக் வெங்கடபதி நாயுடு வீட்டிற்குச் சென்றார். அந்த வீட்டை விட்டுத் தெருவில் வந்து கொண்டிருக்கும்போது என் நண்பர்கள் சிலர் என் வீட்டிற்குச் சுவாமியைப்போய் அழைத்துவரச் சொன்னார்கள். சுவாமியை வணங்கி என் னிடம் அவர் அன்பு கொண்டிருந்தால் கட்டாயம் என் சிற்றில்லத்திற்கு எழுந்தருளுவார் என்று மனத்தில் நினைத் துக்கொண்டு ஒன்றும் பேசாமலிருந்தேன். யாரும் அழைக் காமலும் ஒன்றும் சொல்லாமலே அவர் என் வீட்டிற்குள் நுழைந்து நேரே மாடிக்குச் சென்று படுக்கை அறையில் தம் கட்டிலைப் போடுவதற்கு ஓர் இடத்தைக் காட்டினார். என் வீட்டில் ஒரு நாளிருந்தார். அவர் என்னைக் கேட்ட முதல் கேள்வி, "அடே பையா நான் இங்கே வந்து இருந் தேனே தெரியாதா?" என்பது. அதற்கு நான் "நீங்கள் சென்னைக்கு வருவது இதுவே முதல் முறை; என் வீட்டிற்கு வருவதும் முதல் முறை. இங்கே முன்பே ஒரு முறை வந்த தாகச் சொல்வது எனக்கு விளங்க வில்லை. என்றால் அதை நம்பமுடியவில்லை," என்றேன்.

அன்று பகல் பொழுதில் வேருெருவரும் இல்லாத சமயத்தில் அதே கேள்வியை மறுபடியும் இரண்டு முறை கேட்டார். நான் முன்கூறியது போலவே பதிலளித்தேன்.

ஏறக்குறைய நடு இரவில் சுருட்டு பிடித்துக் கொண்டே அதே கேள்வியைக் கேட்டார். அதே பதிலளித்தேன். உடனே அவர் என்னை உற்றுப்பார்த்து "இல்லையடா பையா நான் இங்கே வந்திருந்தேனே. கிடா மாட்டுப் பையன் கண்ட மாட்டை ஓட்டிக்கொண்டு போராண்டா, கெட்ட மாடு நல்ல மாடு என்றில்லை. அகப்பட்டதை ஓட்டிக்கொண்டு போரான். என்ன செய்யலாம். ஐயோ நல்லமாடு. பாவம்!" என்ருர்.

விவரமாகச் சொல்லாவிட்டால் இது விளங்காது. இது என்னை மட்டும் பொறுத்த செய்தி. துன்பப் படுகின்ற தம் குழந்தைகளுக்கு உதவி செய்வதற்குச் சுவாமி எவ்வளவு அக்கரைக் காட்டினுர் என்பதை விளக்குவதற்காக இதை விவரமாகச் சொல்லுகிறேன்.

சுவாமிக்குக் கட்டில் போட்டிருந்த அதே இடத்தில் தான் என் தகப்பனுர் 1893–ஆம் ஆண்டு ஜனவரி 31–ஆம் தேதி உயிர் நீத்தார். அவர் இறக்குந் தருவாயில் அவர் வாயில் துளசியைப் போட்டு தீர்த்தம் விட்டு என் குருவாகிய இந்த மஹாத்மாவை முழு மனதோடு நினைத்து அஷ்டாக்ஷரமந்திரத்தை என் தகப்பனுர் காதில் சொன்னேன். சுவாமி என் கண்ணிற்குத் தோன்றினுர். தகப்பனுர் இறந்ததால் ஏற்பட்ட பெரிய அதிர்ச்சியை நான் தாங்க முடிந்தது.

இந்த நினைவுகளெல்லாம் எனக்கு வரவே நான் சிரித்துக்கொண்டே "என்னமோ அந்தச் சமயத்தில் உங்களைப்

பார்த்தாற்போல் தோணிற்று. அது ஒரு கணக்கில் சேர்ந்ததா?" என்றேன். அவர் "இல்லை பையா, உனக்கு உதவிசெய்ய நான் இங்கே இருந்தேன்" என்றார்.

அவர் என்னிடம் கொண்டிருந்த பேரன்பே இந்தத் துன்பமான நிலையில் அவர் என்னுடனிருந்து எனக்கு ஏற்பட்ட பொறுக்க முடியாத துயரத்தைப் பொறுக்க வேண்டிய உறுதி தந்தது என்று சொல்லவும் வேண்டுமா? மிக்க துணிவுடன் நான் நடந்துகொண்டு எனக்கு ஏற்பட்ட துயரத்தைப் பொறுத்துக் கொண்டேன்.

மக்களிடத்தும் விலங்குகளிடத்தும் அவர் கொண்டிருந்த பேரன்பு பல சமயங்களில் அவர் அவற்றின் துன்பத்தை நீக்கியதிலிருந்து தெரியவருகிறது. தம்மிடம் வந்தவர்களுக்கு அவர்மருந்து கொடுத்தார். நோய்கள் வியக்கத்தக்க முறையில் நீங்கின. அவர் பயன் படுத்திய மருந்துகள் மிக எளியவை. நல்லெண்ணெய், புளி, குங்குமப்பூ. பருத்தி விதைகள், வேப்பிலை, உப்பு, சில அரிய சமயங்களில் அருகில் கிடைத்த மூலிகைகள், சில வேளைகளில் வெறும் தெருமண் அல்லது ஆற்று நீர். நோய்கள் வியக்கத்தக்க முறையில் தீர்க்கப் பெற்றன. மேனாட்டு மருத்துவர்கள் பரிகாரம் செய்தும் என் உடன் பிறந்தாருக்குத் தீர்க்க முடியாதிருந்த நோய்க்குச் சுவாமி ஏதோ ஒரு மூலிகையை உடம்பில் தேய்க்கச் சொன்னார். ஏறக்குறைய ஒரு மாதகாலமாய் கைகால்களை முடக்கியிருந்த நோய் இந்த மூலிகையைப் பூசிய உடனே அறவே நீங்கியது வியப்பாயிருந்தது. இப்போது என் உடன் பிறந்தார் உடல் நலத்தோடும் உடல் உரத்தோடுமிருக்கிறார். அவர் மேனாட்டு மருத்துவப் படிப்பில் பட்டங்களும் பெற்றுள்ளார் என்பதை மகிழ்ச்சியுடன் அன்பர்களுக்குத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

அவர் செய்த அன்புச் செயல்கள் பல; தந்த அறிவுரைகள் பல. இருவகையிலும் சிலவற்றையே இங்கே கூறியுள்ளேன்—உயிர்களிடத்தில் கொண்டிருந்த பேரன்பு, எதிர்காலத்தை முன்னதாகவே தெரிந்து கொள்ளும் வியக்கத்தக்க ஆற்றல், சீடர்களுக்கு அறிவுரை, தொலைவில் நடக்கும் நிகழ்ச்சிகளைத் தெளிவாகக் காணுதல், அணுக்கமானவர்களிடத்தில் அன்பான அக்கரை, கருத்து, முதலியவை அவைகளுள் முக்கியமானவை.

திடீரென்றும் அகாலமாகவும் இந்த மஹான் உடல் நீத்தது பற்றிய என் வருத்தத்தைத் தெரியப் படுத்தாமல் இக்கட்டுரையை முடிக்க இயலவில்லை. அவர் பிரிவு ஆற்றொணாததாயிருக்கிறது. எங்கள் செயல்களைப் பிழையினின்றும் பாதுகாத்த குரு, தவறி நடந்தபோது இடித்துரைத்தவர், உதவி வேண்டியபோது அறிவுரை கூறியவர், தவறுகளைச் சுட்டிக்காட்டி இதம் செய்தவர்,—இப்போது எங்களால் அணுக முடியாதபடி இருக்கிறார். ஆனால் அவர் அறிவுரையும் வாழ்த்தும் உண்மை நெறியிலிருந்து விலகாதிருக்க உதவும் குன்றின் மேலிட்ட விளக்கெனத் திகழ்கின்றன.

இப்பெரியாருக்கு என் தாழ்மையான வணக்கங்கள்! அவர் அன்பையும் பராமரிப்பையும் பெற்றவர்களை அவர் திரை மறைவிலிருந்து காப்பாராக!

(கையொப்பம்) B. V. ராமானுஜலு நாயுடு.

உ

# ஆதிகேசவலு நாயுடு

## அவர்களுடைய அனுபவம்

சுவாமிகளைப்பற்றி சுமார் 20-வருஷங்களுக்கு முன் எங்கள் வீட்டிற்கு வரப்போகவிருந்த ஓர் நாராயணவரத்து நெய்யற்காரரை விசாரித்ததில், அவர் தமக்கு 70-வயதாகியும், தம் தகப்பனுர் சிறுவயதிலிருந்து அறிந்திருக்கிருரென்றும், தம் தகப்பனுருக்கு வயது 80-ஆகையால், ஷை சுவாமிகளுக்கு சுமார், 200 வரையிலிருக்கலாமென்றும், சொல்லத் தெரியவந்தது.

14 வருஷங்களுக்கு முன் சென்னை திம்மப்ப நாயுடு வீட்டிற்குச் சுவாமிகள் வந்திறங்கியிருந்தபோது ஒரு தினம் நானும், சிவராஜயோகி இராஜம்மாளும் இரவு 8½ மணிக்கு மேல் தரிசனத்திற்குப் போயிருந்தோம். அப்போது சுமார் 11½ மணிக்கு மேல் அங்குள்ளவர்கள் எங்களைப் போகச் சொல்லி கதவு சாத்தவேண்டி தெரிவித்ததை சுவாமிகள் குறிப்பாயறிந்து எங்கள் பக்கம் திரும்பி 3-குறிகளைக் காட்டினுர். அவை யாவன: கண்ணை மூடியவண்ணம், மூன்று விரல் கூட்டியும், கைப்பிடியாகவும் அபயாஸ்தமாகவும் காட்டினுர். இதை யறிந்துக்கொண்டு வெளியே வந்துவிட்டோம். ஷை சுவாமிகள் காட்டிய குறிப்புகள் இராஜம்மாளால் விவரிக்கப்பட்டவை எங்ஙனமெனில்: (1) மூன்று விரல் குறியால், திரிபுடிரகிதமாகி, (2) கைப்பிடியால், ஷை ஸ்தானத்தில் உறுதியாகி (3) அபயாஸ்தத்தால், சாந்தி பெறுவாமென உணர்த்தினுர்கள்.

சுமார் 9 வருடங்களுக்கு முன், நாராயணவரத்துக்கு, சிட்டி பாபு நாயுடு (பண்டல்-வெங்கடபதி நாயுடு, B. A.)

கிருஷ்ணப்ப நாயுடு இவர்களுடன் நான் போனபோது, தும்புரு கோணையில் சுவாமிக்கு பிக்ஷை கொடுத்திருந்த காலத்தில் நாங்கள் எல்லோரும் தனித்தனி நமஸ்காரஞ் செய்து அடிபணிந்தபோது, நான் நமஸ்கரித்த காலத்தில் என்னை நோக்கி அம்மாளை குழியில் வைத்துவிட்டு இவ்விடம் வந்தாயல்லவா என்று கேட்டார். இவ்விஷயம் இவருக்கு நான் தெரிவிக்காதிருக்கவும் தம்முடைய சித்வி லாசத்தால் இராஜம்மாள் அடைந்த விஷயத்தை அறிந்து கேட்டவராகின்றனர்.

சுவாமிகளுக்கெதிரில் நெடி கொளுத்தும் விஷயத்தின் அர்த்தம், (1) மொக்கையை பிளத்தலாவது, மனதிலுள்ள அஞ்ஞானத்தை விவேக கோடாலியால் வெட்டி யெறிய வேண்டியது. (2) ஷெி கட்டையை நெருப்பில் கொளுத்துவதாவது விஷயங்களாகிய விர்த்திகளை ஞானக்கினியில் தகித்தலென்பதாம்.

(கையொப்பம்) **ஆதிகேசவலு நாயுடு.**

வடஆர்க்காடு ஜில்லா சுப்பா ரெட்டி கண்டிகை மிராசுதார்

## கங்கா ரெட்டியார்

### அவர்களுடைய அனுபவங்கள்.

ஸ்ரீ சுரைக்காய் சுவாமியோடு பழகினவர்கள் ஒவ்வொருவரும் தங்கள் அநுபவத்திலிருந்து அவர் பெருமையை உணர்ந்திருப்பார்கள் என்ற உண்மை உங்களுக்குத் தெரியுமல்லவா? என்றாலும் எளியவனாகிய நான், பிழைகளைப் பொறுத்துக் கொள்ளும் உங்கள் இயல்பை நினைவுகொண்டு என் அநுபவங்களைக் கூறத் துணிகிறேன். சுவாமியின் பெருமையை உணர்ந்து அதை விவரிப்பது என் ஆற்றலுக்கு மேற்பட்டது. என் பழவினையின் காரணமாக விடாத வயிற்றுவலியால் நான் மிகவும் தொல்லைப்பட்டேன். என் வசதிக்கேற்றபடி நாட்டு வைத்தியம், மேனாட்டு வைத்தியம். கோயில் வழிபாடு, ஏழைகளுக்கு உணவளித்தல் போன்றவையெல்லாம் செய்தும் பயனில்லை, நான்கு ஆண்டுகளாகப் பால் தவிர வேறொன்றும் உட்கொள்ள முடியவில்லை. கடவுள் அருளாலும் பெரியவர்கள் கூட்டுறவாலும் சுவாமியின் பெருமையைப் பற்றிக் கேள்விப்பட நேர்ந்தது. உடனே பிறப்புண்டேல் இறப்பும் உண்டு என்ற நம்பிக்கையோடு துணிவு கொண்டு சுவாமி சந்நிதிக்குச் சென்றேன். தத்தாத்ரேய ஆஸ்ரமத்திற்கு நிகரென்று சொல்லக்கூடிய நாராயணசுவாமி நாயுடு அவர்களின் வீட்டுத் திண்ணையில் சுவாமி படுத்திருந்தார். நான் அவரடி விழுந்து வணங்கினேன். ஏறத்தாழ இரண்டு மணி நேரம் நான் அப்படியே என் உடலையும் ஆவியையும் சுவாமிக்கு அர்ப்பணம் செய்து விழுந்து கிடந்தும் அவர் அருள் நோக்கு என்மீது விழவில்லை. சுவாமியின் அடியார்களில் ஒருவரான கிருஷ்ண பிள்ளை

என்னிடம் சற்றுக் கடுமையாகப் பேசினூர். அதன் மேல் சுவாமி மகிழ்ச்சியோடு, "என்னடா அவன் சொல்கிறது?" என்று கிருஷ்ணப் பிள்ளையைக் கேட்டார். அதற்கு அவர் நான் வயிற்றுவலியால் அல்லல் படுவதாகச் சொன்னூர். சுவாமி, கிருஷ்ணப் பிள்ளையிடம், "ஆற்றுக்குப் போய்ப் பச்சைத் தண்ணீர் குடிச்சிப் போகச் சொல்லு" என்று விடை கொடுத்தார். என் உடலையும் ஆவியையும் சுவாமிக்கு அர்ப்பணஞ்செய்து ஆற்றுக்குச் சென்று ஸ்நானம் செய்து பச்சைத் தண்ணீர் குடித்துக் கொண்டிருந்தேன். அவ்வா றிருக்க, என் வயிற்று வலி மிகுதியாயிற்று. மஹாத்மாக்கள் அருளை அடைவதற்கு வேண்டிய பத்தியத்தைத் தெரிந்து கொள்ள முடியாமல் இருப்பது சில புராணங்கள், இதிகாசங்களால் நாம் தெரிந்திருப்பதல்லவா என்று பலர் பலவகையாக என்னிடம் சொல்லிக்கொண்டிருந்தனர். ஆனூல் சுவாமி அருளால் என் மனம் மாருமல் அவரிடத் திலேயே குறியை வைத்துக் காத்திருந்தேன். ஒரு நாள் சுவாமி, "பஞ்சி இலை பிசைஞ்சிகுடி" என்று அருள் செய் தார். அப்படிச் செய்ததும் என்பழவினையான வயிற்றுவலி மெதுவாக மறைந்தது. இப்படி இருக்கும்போது மற்ருெரு நாள் சுவாமி, "முருங்கை இலையை வேவிச்சி இறுத்துக்குடி" என்று மூன்ரும் முறை அருள் செய்ததும், பத்தியம் ஒன்று மில்லாமல் அவர் அருள் என்னும் உணவைச் சாப்பிட்டுக் கொண்டு அவர் முன்னிலையையே இருப்பிடமாகக் கொண்டு ஒரு ஆண்டு காத்திருந்தேன். சுவாமியுடனேயே ஓராண்டு வரை இவ்வாறு இருந்து கூடுமானவரையில் பத்தியமான உணவையும் பெரும்பாலும் அவர் கொடுத்த பிரசாதத்தை யும் சாப்பிட்டு வந்தேன். என் பழவினையினூல், என் அறி யாமையினூல் "சுவ்ாமி நான் ஊருக்குப்போய் வருகிறேன்" என்று சுவாமியிடம் ஒரு நாள் விண்ணப்பம் செய்து கொண்டேன். போகக்கூடாது என்று பொருள்படும்படி

கைச்சைகை செய்தார். இதை உணர்ந்து கொள்ளும் அறிவில்லாததால் அவர் சொன்னதைப் புறக்கணித்துக் கர்ம காண்டம் என்ற வீட்டுக்குப் போனேன். உணவிற்குப் பின் நள்ளிரவில் என் பழைய நோய் மறுபடியும் தலை காட்டியது. உடனே சுவாமியிடம் சென்று அவரடி பணிந்து வணங்கினேன். சுவாமி புன் சிரிப்போடு கூடிய மகிழ்ச்சியுடன் " அப்பா நல்ல மழை பேஞ்சுதா?" என்று அருள் செய்தார். அறியாதவனாகிய நான் ஒன்றும் பேசாமல் சும்மா இருந்தேன். பன்னிரண்டு நாள் இத்தகையக் கர்மத் தோடு இருக்கும் போது ஒரு நாள் சுவாமி, " பிரண்டை அரைத்துத் தின்னவேணும்" என்றும் " ரசம் சாப்பிட வேணும்" என்றும் அருள் செய்தார். அதற்குப் பிறகு இன்று வரையில். பழவினையான வயிற்றுவலி தலை காட்டவேயில்லை பதினாறு ஆண்டுகளாக எந்த மருந்தும் சாப்பிடாமலும் எண்ணெய் முழுக்கு போன்றவையில்லாமலும் வைத்தியம் செய்து கொள்ளாமலும் எந்தக் கோரிக்கைகளும் இல்லாமலும் மன உறுதியோடு எல்லாப் பொருள்களிலும் ஆன்மாவே நிறைந்திருக்கிறது என்று நினைத்து நான் நடந்து கொண்டிருக்கிறேன். அவர் வாழ்ந்த போதும் பின்பு அவர் பிரிவுக்குப் பின்பும் அவர் செய்திருக்கும் சூட்சும அனுபவங்களில் ஒரு சிறு பகுதியைப்பற்றிக்கூட விவரிக்க முடியாதவனாக இருக்கிறேன்.

(கையொப்பம்) **கங்கா ரெட்டி.**

சென்னை வியாபாரியும் கமிஷன் ஏஜண்டுமான

## முத்தியாலு நாயுடு

## அவர்களுடைய அநுபவங்கள்.

நாராயணவரத்தில் வீற்றிருக்கும் ஸ்ரீ சுரைக்காய் ராமசுவாமி அவர்களை அடியேன் நாடினதற்குக் காரணம், உலக விருப்பங்கள் நிறைவேறுவதோ தகுதியான உறுதிப் பொருள்களைப் பெறுவதோ அன்றி வீடு பெறுவதோ ஆகிய மூவகையான விருப்பங்களுக்காக அல்ல. பிறகு நான் அவ்வளவு பேரன்பு சுவாமியிடம் கொள்வது ஏனென்றால் சுமார் பதினைந்து ஆண்டுகளுக்கு முன்பு சென்னையில் திம்மப்ப நாயுடு அவர்களுடைய வீட்டிற்குச் சுவாமி வந்திருந்தபோது ஒரு நாள் இரவு சுமார் இரண்டு மணி வரையில் மேற்கு நோக்கி உட்கார்ந்து சுவாமியுடைய காலைப் பிடித்துக்கொண்டு பின்வருமாறு சிந்தித்துக்கொண்டிருந்தேன். "கடவுள் உலகத்திற்கெல்லாம் ஒருவரேயாயிருக்கும் போது எதற்காகப் பல சமயங்களும் பொறாமையும் வெறுப்பும் கொண்டு ஆன்மீய வாழ்வுக்கு வழி தெரிந்து கொள்ளாமல் அல்லாடுகிறார்கள்? ஆனதால் இவற்றில் முக்கியமான முதல் பொருள் எதுவோ அதை அடியேனுக்குத் தேவரீர் அருள் செய்ய வேண்டும்." என்று என் மனதில் நினைத்து மேற்கு முகமாக உட்கார்ந்து கொண்டு சுவாமியின் கால்களைப் பிடித்துக் கொண்டிருக்க ஸ்ரீ சுவாமி, திடீரென்று எழுந்து கிழக்கு நோக்கி உட்கார்ந்து கொண்டு பின்வருமாறு சொன்னார்:

1. "விடாகண்டனுக்குக் கொடாகண்டன் தோற்றுத் தான் போவான்" என்று சொன்னார், பிறகு,

2. "என்னைப் பாடையில் வையுங்கோ" என்றார்.

3. "தெரிந்தவனுக்குத் திறந்து காட்ட வேணுமா?" என்றார்.

4. "நகரிலே புளிய மரத்துக்குள்ளே சோறு தண்ணீ இல்லாமல் புகுந்துகினாரே அவர் சொன்ன பாட்டெல்லாம் படிக்கவில்லையா" என்றார்.

சுவாமி அப்புறம் மூன்று பெயர்களைச் சொல்லி அவற்றில் ஒன்றைக் காட்டி, "எம் அடிகள்," "எம் அடிகள்" என்று மூன்று முறை தம் மார்பைத் தட்டிக் காண்பித்தார். "அதுதாண்டா முடிவு" என்று சொல்லிப் படுக்கையில் படுத்துக்கொண்டார். மறுபடியும் அவர் கால் பிடிக்கத் தொடங்கினேன். சுவாமி "வேணும், போடா" என்றார். அந்தச் சமயத்தில் அவர் அருள் நோக்கால் அடியேனுக்கு என்ன தெளிவாயிற்று என்றால் மஹாத்மா சொன்னதைச் சிந்தித்து அவர் சொன்னது ஸ்ரீமான் பரமஹம்ஸ பராங்குசரும் பரகாலரும் சொன்னவற்றின் தொகைப் பொருள் என்பது. "ஒருருவம் பொன்னுருவம், ஒன்று செந்தீ, ஒன்று மாகடலுருவம், ஒத்து நின்ற மூவுருவம் கண்டபோதொன்றும் சோதி முகிலுருவம் எம் அடிகள் உருவந்தானே" என்ற பாசுரத்தின் பொருள் இது என்று உணர்ந்து கொண்டவனானேன். ஆகையால், இக்காரணத்தால் சுவாமி ராமசாமி அவர்கள் நமக்குக் காரண குரு என்று நினைத்து அவருடைய திருவடிகளுக்குப் பக்திசெய்து வருகிறேன்.

இப்படிக்கு,
அடியார்க்கடியன்
முலிக்கிநாடி : **லோகசெட்டி, முத்தியால் நாயுடு.**

கடப்பை ஜில்லா போலீஸ் இன்ஸ்பெக்டர் காலஞ்சென்ற
சுப்பராயலு நாயுடுவின் மனைவி

## செண்டிகா - அலமேலு மங்கவல்லித்தாயாரம்மா அவர்களுடைய அனுபவங்கள்.

ஓம் நமோ நாராயணு :

ஸ்ரீமான் சுரைக்காய் ராம குருபரப் பிரம்மணே நம : குருர் தேவோ குருர்பிரம்ம குருர்விஷ்ணு மஹேஸ்வர குருர் சாக்ஷாத் பரப்பிரம்மம் தஸ்மை ஸ்ரீகுரவே நம :

ஆத்ம ஞானனந்த பரப்பிரம்ம மூர்த்தியாக அவதரித்த ராம குருநாதருடைய சிஷ்யர்களே! என் உடன் பிறந்தோரே! என்னைப் பெற்றோர்களை விட மிகுதியாக அருள் ரசம் என்னும் கடைக்கண் பார்வையையுடைய நம் தந்தையின் பெருமையைப் புகழ என்னுல் இயலாது. எங்கும் நிறைந்து உல்கத்தின் ஒவ்வொரு பகுதியிலும் உலகம் முழுவதிலும் உள்ளவர் என்றும் நிலத்திலும் நீரிலும் உள்ளவரென்றும் உள்ளும் புறமும் இருப்பவரென்றும் எல்லாம் விஷ்ணுவே என்றும் சொல்வதைப் போல அவர் எங்கேயும் உள்ளவராக இருக்கும் பொருளின் தோற்றமே என்பதில் எனக்குச் சிறிதும் ஐயமில்லை. அவர் பெருமையும் ஆற்றலும் சொல்லுந் தரத்தனவல்ல. இருபத்து மூன்று ஆண்டுகளுக்கு முன்பு இவர் பெருமையைப் பற்றிக் கேள்விப்பட்டு அவரைப் பார்க்க வேண்டுமென்று அவாக் கொண்டிருந்தேன். என் பழவினையினுல் உண்டாகும் அறியாமையில் சிக்கி அவர் தரிசனம் கிடைக்கவில்லை.

1890-ஆம் ஆண்டில் என் உறவினர் சிலரும் நானும் நாராயணவரத்தில் வேப்ப மரத்தடியில் ஒரு திண்ணையின் மேல் படுத்திருந்த அருள் ரசம் என்னும் கடைக்கண்

பார்வையுடைய நம் தந்தையைப் பார்த்தோம். சிறிது தொலைவில் நின்று பிறகு அவரடி விழுந்து வணங்கினேன். சுவாமி, "என்னைக் குழியில் வைச்சாங்க. என்னைப் பாடையில் வைச்சாங்க," என்றார். இந்தச் சமயத்தில், அறிவின்மையால் சுவாமி கோபமாயிருந்தாரென்று நினைத்து என் இருப்பிடம் திரும்பிவந்து படுத்துக்கொண்டேன். அடுத்த நாள் பகல் அவரிடம் சென்று அவரடி விழுந்து வணங்க, அவர் மிகவும் வருத்தப்பட்டு, "நான் உனக்கு என்ன செய்யப்போறேன். அவன் வெட்டி வெட்டிப் போட்டானே. என்னை நீ கும்பிடவேணும்" என்று விடை கொடுத்து என் தலையைத் தொட்டு தள்ளி விட்டார். இதுவரையில், மூன்று ஆண்டுகளுக்குள் என் கணவன், மாமனார், மாமியார், என் ஒரே மகள் ஆகியவர்களை இழந்து மிக்க துயரத்தில் ஆழ்ந்திருந்த என்னைச் சுவாமி தம்மிடம் அழைத்து முன் குறிப்பிட்டபடி சொன்னார். அது முதல் அவர் என் மனத்தை உறுதிப் படுத்தித் தம்மிடம் அழுத்தமான நம்பிக்கை ஏற்படுத்தினார். வேறொரு நாள் நான் அவரிடம் சென்றிருந்த போது, தம்மிடமிருந்த கிழப்பெட்டை நாயை எனக்குக் காட்டி, "ஐயோ பாவம்! எங்கம்மா காணுத்தவன்(?) பெண்டாட்டி ஆச்சே, நான் வீட்டுக்குப் போனா சாதம் ரொம்ப ரொம்ப போடுவாளே, எங்கம்மாளுக்கு இப்படி வந்ததே" என்று சொல்லி மிகவும் வருந்தினார். இது எனக்கு ஒரு பாடம் கற்பித்தது. அதாவது எப்படிப்பட்டவர்களுக்காகிலும் பழவினை அனுபவிக்காமல் தீராது என்று எனக்கு அப்போது தோன்றிற்று.

பதின்மூன்று ஆண்டுகளுக்கு முன் ஹைதராபாத்திலிருந்து சென்னை வரும்போது நாங்கள் நாலு பெண்கள் இடையில் உள்ள குருநாதன் அவர்களைத் தரிசனம் செய்ய வேண்டுமென்ற எண்ணம் ஏற்பட்டு ரெயில் ஏறினோம்.

நாங்கள் வந்த வண்டி சரியாக இரவு பன்னிரண்டு மணிக்கு ரேணிகுண்டா வந்து சேர்ந்தது. நாங்கள் நால்வரும் பெண்களாக இருக்கவே ஒருவர் துணையுமின்றி அங்கே இரவு எப்படி இருப்பது என்று கவலைப்பட்டு அஞ்சினோம். இதற்குள் சென்னை செல்லும் வண்டி ஒன்று வந்தது. சுவாமி அருளால் திடீரென்று ஒரு கிழவியோடு காவி உடுத்துக் கொண்டு புல்லாங்குழல் வாசித்துக் கொண்டிருந்த ஒரு பெண் துறவி எங்கள் வண்டியில் ஏறினாள். வண்டியிலிருந்தவர்களில் சிலர் அவர்களைப்பார்த்து "நீங்கள் எந்த ஊருக்குப் போகிறீர்கள்?" என்று கேட்டார்கள். அதற்கு அவர்கள், "நாங்கள் நாராயணவரத்திலுள்ள சுரைக்காய் சுவாமியைக் கண்டு வணங்குவதற்காக வந்துள்ளோம்" என்றார்கள். இதைக் கேட்டவுடன் சுவாமி எங்களுக்கு இவ்வுதவி தந்தார் என்று மகிழ்ச்சியடைந்தோம். சற்று நேரத்தில் அவர்களும் நாங்களும் புத்தூரில் இறங்கினோம். நாங்களனைவரும் கலந்து பேசிக்கொண்டே அன்றிரவு ஸ்டேஷனிலேயே படுத்துக்கொண்டு, அடுத்த நாள் காலை, நாராயணவரம் சென்று சுவாமியை வணங்கி அவரிடம் விடை பெற்றுக்கொண்டு, சென்னை திரும்பினோம். இன்னல்கள் ஏற்படும்போது சுவாமி உறுதுணையாக இருக்கிறார் என்று பலர் சொல்லிய செய்தி உண்மை என்று குருநாதர் எங்களுக்குக் காட்டினார்.

பதினொரு ஆண்டுகளுக்குமுன் என் குடும்பத்தினர் அனைவரும் பிரார்த்தனை செலுத்துவதற்காகத் திருப்பதி செல்லவேண்டியிருந்தது. அங்குச் செல்வதற்குமுன் நாராயணவரம் சென்று சுவாமி உத்தரவு பெற விரும்பினோம். அவ்வாறு செய்ய வாய்ப்பு இல்லாமல் போயிற்று. திருப்பதி சென்று திரும்பும்போது நாராயணவரம் சென்று சுவாமியை வணங்கினோம். சுவாமி என்னைப்பார்த்து, "அவன் பெரியவனா? நான் சின்னவனா? மொட்டை அடிச்சி

கினு மொட்டைப் பாப்பாத்தியாட்டம் வந்துட்டயா?" என்றார். இதுவுமன்றி, சுவாமி அருளால் பிறந்த என் தங்கையின் மகள் மிகக் கடுமையான காய்ச்சலால் அல்லல் பட்டுக் கொண்டிருந்தது. அது பிழைக்காதெனை நினைத் தோம். அந்தக் குழந்தையைப் பார்த்து, " பாட்டி தொண்டி பணியாரம் சுடுவா. மஞ்சாவும் எண்ணெயும் தடவுங்க." என்று சுவாமி சொன்னார். உடனே காய்ச்சல் நின்று விட்டது. இதைப்போலவே தம்மிடம் நம்பிக்கைகொண்ட என் குடும்பத்தைச் சேர்ந்த எல்லோருக்கும் சுவாமி இத் தகைய அருள் உதவி பல செய்திருக்கிறார்.

எட்டு ஆண்டுகளுக்கு முன்புகூட சுவாமியின் பெரு மைக்கு ஒரு சான்று கிடைத்தது. என் உறவினர் சிலரும் நானும் திருவாரூரில் சில பெரியார்கள் இருந்தார்களென்று அறிந்து அவ்வப்போது அங்கே சென்று வணங்கி வந்தோம். ஒரு நாள் அங்கிருந்த சுவாமியார்களில் இளைய சுவாமி என்று சொல்லப்பட்ட பெரியார், ஸ்ரீமத் சிவப்பிரகாச சுவாமிகள் என்னைப்பார்த்து, "தகுந்தவர்களிடமிருந்து சமயம், தத்துவம் பற்றிய உண்மைகளைக் கேட்டுத் தெரிந்து கொள்ளுங்கள்" என்று எனக்கு விடைதந்தார். யாரும் தகுந்தவர்களில்லையென்று நான் வருத்தப்பட்டுக் கொண் டிருந்தேன். ஓரிரவு கனவில் மிகப்பெரிய ஒரு கோயிலைப் பார்த்தேன். அதில் இரண்டு பிரகாரங்கள் இருந்தன. அவற்றுள் ஒன்றில் ஒரு கற்சிலை இருந்தது. அது லக்ஷ்மி நாராயண உருவமோ அல்லது பார்வதி பரமேஸ்வர உருவமோ என்பதைப்போல் இருந்தது. என் மனதில் ஐயங் கொண்டு வேறொரு பிரகாரத்துக்கு வந்து பார்த்தேன். பள்ளிகொண்ட ரங்கநாதர் உருவத்தை அங்கே கண்டேன். அந்த உருவத்தை நின்று பார்த்துக் கொண்டே இருக்கும் போது அவ்வுருவத்தின் வாயிலிருந்து நாராயணவரம் சுவாமி யுடைய குரல் போன்ற குரலில், "நான் அங்கே வந்து

சொல்கிறேன்'' என்று உறுதி கூறினர். சுவாமி திருவாரூரில் எனக்கு அறிவுறுத்து வாரென்று நினைத்தேன். இவ்வாறிருக்க, இரண்டு ஆண்டுகளாக எங்கள் வீட்டுக்கு வந்து வைத்தியம் செய்திருந்த அமைதியான தன்மையுடைய சிவஞான முதலியார் என்பவர் குருநாதர் அருளால், கனுக் கண்ட மூன்றும் நாள், ஒரு புத்தகத்தைக் கையில் எடுத்துக் கொண்டுவந்து என் தங்கை ஆதிலக்ஷ்மி அம்மாவுக்கும் எனக்கும் காட்டி, " அம்மா, நீங்கள் திருவாரூருக்குப்போய் வருகிறீர்கள் அல்லவா ? இந்தப் புத்தகத்தைக் கொஞ்சம் கேளுங்கள் " என்று படித்துக்காட்டினர். முப்பது ஆண்டுகளுக்குமுன் சைதாப்பேட்டை ஆற்றங்கரையில் சமாதியில் வைக்கப்பட்ட சுபேதார் மேஜர் பெருமாள் நாயுடுவின் மாணவரான இவர் மிகவும் சாது. ஒரு நாள் இவர் தம் குருவிடம் பாடம் கேட்டுக் கொண்டிருக்கும்போது கனத்த மழை பெய்தது. உடல் நனைந்ததுகூடத் தெரியாமல் இருந்தார். ஆன்மீய இன்பத்தில் திளைத்து முழுநேரமும் கண்ணீர் வடித்துக் கொண்டிருந்தார். என் பழவினையினுல் இவரும் கொஞ்ச நாள் இராமல் சமாதியடைந்தார்.

சுவாமியின் பெருமையை எவ்வாறு தக்கபடி எடுத்துரைப்பேன் ? என் உள்ளத்தில் நம்பிக்கை உண்டாக்கி ஆன்மீய அறிவுரை தந்தார். தம் குழந்தைகளாகிய நம்மிடத்து நம் அருள் தந்தையாகிய இவர் எப்பொழுதும் தொடர்ந்தும் ஒரு படித்தாகவும் அளவற்ற அருள்கொண்டு நமக்காக இரங்கி ஆவன செய்து கொண்டே இருக்கிருர். உடன் பிறந்தோரே ! நான் என்ன என்று எழுதுவேன் ? சொல்வதற்கு முடியாத பொருளாதலால் முடித்துக் கொள்ளுகிறேன். எழுதியதில் பிழைகளிருந்தால் பொறுத்துக் கொள்ளவும்.

ஓம் நம : நாராயண

ஸ்ரீராம குரு பரப்பிரம்மணர்ப் பணமஸ்து

(கையொப்பம்) **செண்டிகா அலமேலுமங்கவல்லித் தாயாரம்மா,**

## சென்னை சூளை ஹிந்து யூனியன் கமர்ஷியல் பள்ளிக்கூடத் தலைமை ஆசிரியர்

# V. M. குமாரசாமி முதலியார்

## அவர்களுடைய சொந்த அனுபவங்கள்.

1887-ஆம் ஆண்டில் S. P. G. நிலையத்தின் செயலாளர் ஒரு தவறான எண்ணங்கொண்டார். அதாவது S. P. G. பள்ளிக்கூடத்தின் ஆசிரியர்களில் பெரும்பாலோர் ஹிந்துக்களாயிருந்ததால் ஒரு ஹிந்து மாணவனும் கிறித்துவ சமயத்திற்கு மாறவில்லை என்ற தவறான எண்ணம். இதனால், பள்ளிக்கூடம் தொடங்கி இருபத்து நான்கு ஆண்டுகளாகியும் அவர் ஹிந்து ஆசிரியர்களின் சம்பளத்தை வெகுவாகக் குறைத்தார். இவ்வாசிரியர்களில் நானும் ஒருவன். குறைந்த சம்பளத்தை ஒப்புக்கொள்ள முடியாதவர்கள் வேலையையே விட்டுவிடலாம் என்றும் சொன்னார். வேறு வேலைகள் கிடைக்காததால் குறைந்த சம்பளத்திற்கே வேலை செய்து வந்தோம். இம்முறையும் அவர் கருதிய பயன் தராது போகவே 1890-ஆம் ஆண்டு டிசம்பர் மாதத்தில் அந்த மாதக் கடைசியிலிருந்து பள்ளி மூடப்படுமாதலால் பள்ளியின் தலைவர் முதல் தோட்டிவரையில் வேலையிலிருந்து விலக வேண்டும் என்று அறிக்கை செய்தார். வேண்டுமென்றால் மாணவர்களையும் அழைத்துச் செல்லலாமென்றும் தெரிவித்தார். S. P. G. பள்ளியின் அருகில் ஹிந்து ஆசிரியர்கள் ஹிந்து யூனியன் நடுநிலைப்பள்ளியைத் தொடங்கினார்கள். S.P.G. மிஷனும் ஒரு நடுநிலைப்பள்ளியைத் தொடங்கியது. ஹிந்து மாணவர்களை ஹிந்து யூனியன் பள்ளியைச் சேர்ந்தவர்கள் வேண்டுமென்றே அழைத்துக் கொண்டனர் என்று கல்வித்துறையின் தலைவரிடம் S. P. G. செயலாளர் குறை கூறினார்.

இதனால் மனவேறுபாடு கொண்ட கல்வித் துறைத் தலைவர் ஹிந்துயூனியன் பள்ளிக்கூடத்திற்கு அங்கீகாரம் தரமறுத்தார். அங்கீகாரம் பெறச் செய்த முயற்சிகள் வீணாயின. இதனால் மிகவும் உளம் வருந்திய நான் சுவாமியிடம் சென்று அவரை வணங்கி அவர் ஆறுதல் மொழிக்காகக் காத்திருந்தேன். அவர் அண்ணாந்து வானத்தைப் பார்த்துக்கொண்டு, " அடியம்மா ! அவனவன் மந்தையை அவனவன் ஓட்டினால் அதற்கென்ன வந்தது?" என்று சொன்னார். இதன் பொருள் ஒருவாரம் சென்றபின் அரசினர் அங்கீகாரம் தந்த உத்தரவு கிடைத்த பிறகே விளங்கிற்று.

ஒரு நாள் இரவு பதினொருமணி இருக்கும். நான் சுவாமியோடு உட்கார்ந்து கொண்டிருக்கும்போது தேள் கொட்டியதால் அழுதுகொண்டே ஒரு பெண் வந்தாள். எதிரே படர்ந்திருந்த கொடியின் இலைகளை எடுத்து அவற்றைப் பிழிந்து கொட்டிய இடத்தில் பூசச் சொன்னார். சிறிது நேரத்திற்குள் வலி நீங்கி அப்பெண் மகிழ்ச்சியோடு சென்று விட்டாள்.

(கையொப்பம்) V. M. **குமாரசாமி முதலியார்.**



வேலூர் சலேவன்பேட்டை,
(Retired Sub. Asst. Inspector of Schools.)

## V. நாதமுனி முதலியார்

### அவர்களுடைய சொந்த அனுபவங்கள்

Executive Engineer ஆக இருந்து ஓய்வு பெற்றவரும் ஸ்ரீமான் சுரைக்காய் சுவாமி சமாஜத் தலைவருமான N. ரத்தினசபாபதி பிள்ளை B. A., B. C. E. அவர்கள் சுவாமி யின் வரலாற்றை, அவருடைய அடியார்களுடைய அனுப வங்களோடும் சுவாமி சமாதியடைந்த பிறகு அவரைப் பற்றி செய்தித் தாள்களில் வந்த செய்திகளோடும் சேர்த்து ஒரு புத்தகமாக வெளியிடக் கருதி சுவாமியின் அடியார் களுக்கும் அன்பர்களுக்கும் ஒரு சுற்றறிக்கை அனுப்பினூர். சுவாமியின் அடியார்களில் ஒருவனுன நான் பிள்ளையவர் களின் விருப்பத்திற்கிணங்க என் அனுபவங்களை இயன்ற வரை அவை நிகழ்ந்த கால முறைப்படி இங்கே குறிப்பிடு கிறேன். பிள்ளையவர்களே சுவாமி வரலாற்றைப்பற்றி எழுதுவதாகத் தெரிவதால் விவரமாக அதைப்பற்றி எழுத வேண்டுவதில்லை; எனினும் மிகச் சுருக்கமாக அதைக் குறிப்பிடுகிறேன்.

செங்கற்பட்டு ஜில்லா திருவள்ளூர் தாலுக்காவைச் சேர்ந்த ஒரு சிற்றூரில் சுவாமி பிறந்திருக்கக் கூடும் என்று தோன்றுகிறது; இடையர் குலத்தைச் சேர்ந்தவர். நான் இதை எழுதத் தொடங்கிய பின் கிடைத்த செய்தி அவர் இந்த ஜில்லாவில் வண்டலூரில் பிறந்தவரென்றும் அவர் உறவினர் சிலர் இன்னும் அங்கிருப்பதாகவும் கூறுகிறது. அவர் தொழில், மாடு மேய்ப்பது—சிறப்பாக, ஆடு மேய்ப் பது. அவர் பெயர் ராமசாமி. ஆனல் எப்பொழுது.

எப்படி, அவர் தம் இல்லற வாழ்க்கையை விட்டு ஊர் ஊராகச் சுற்றும் சந்நியாசி ஆனார் என்பது தெரியவில்லை. தொண்ணூறு வயது உடையவர் போல அவர் காணப் பட்டாலும் அவர் வயது என்ன என்று திட்டமாகக் கூறு வதற்கில்லை. சென்னை சட்டசபை அங்கத்தினரான காலஞ் சென்ற ஸ்ரீமான் சீனிவாசபிள்ளை அவர்கள் அரக்கோணத் திற்கும் ரேணிகுண்டாவிற்கும் இடையிலுள்ள புத்தூரில் நூற்று நாற்பது ஆண்டுகளுக்குமுன் கட்டிய சத்திரத்தைப் பற்றிய செலவு கணக்கில் எழுதியுள்ள பதிவு ஒன்று சுமாமியின் வயதை உணர்ந்துகொள்ள சற்று உதவுகிறது. இந்தப் பகுதி கணக்கில் முதலாக உள்ளது. அதன்படி சத்திரம் கட்டுவதற்குச் சுரைக்காய் சுவாமியைக் கேட்ட தாக இருக்கிறது. அவர் நாராயணவரத்தைத் தம் தலைமை இருப்பிடமாக வைத்துக்கொண்டு கார்வேட் நகரம் ஜமீனில் இங்கும் அங்குமாகச் சென்று கொண்டிருந்தார். அந்தப் பக்கத்தில் ஐம்பது அறுபது வயதானவர்களும் தங்கள் இளமையிலும் சுவாமியை அப்பொழுது பார்த்த நிலையிலேயே பார்த்ததாகச் சொன்னார்கள். சுரைக் குடுக்கை கள் சிலவற்றை அவர் தம்முடன் வைத்துக் கொண்டிருந்த தால் அவருக்குச் சுரைக்காய் சுவாமி என்ற பெயர் ஏற் பட்டது. ஒரு குடுக்கையில் தாம் உண்பதற்குத் தரப்பட்ட பழங்களின் விதைகள், ஒன்றில் கிழிந்த துணிகள் இவ்வா றிருக்கும். உண்மையில் ஒரு மஹானாகவும் ஜீவன் முக்த ராகவும் இருந்த அவர் தாம் வைத்திருந்த பொருள்களாலும் அணிந்திருந்த உடையாலும் ஒரு பிச்சைக்காரனைப் போலவே காட்சியளித்தார். தம் வீட்டைத் துறந்த பிறகு தம் முன்வினைப்படி அவர் பிழைப்புக்காகப் பிச்சை யெடுத் தார். இதைப் பின்வரும் பாட்டு விளக்குகிறது.

பேதகர் மத்தால் வந்த பிராரத்வம் நர்ஞ்வர்கும்
ஆதலால் விவகாரங்கள் அவரவர்க் கானவாகும்
மாதவம் செயினுஞ் செய்வர், வாணிபஞ் செயினும்
[செய்வர்
பூதலம் புரப்பர் ஐயம்புகுந்துண்பர் ஜீவன்முத்தர்.

ஆகஸ்டு 30, 1880 முதல் அவர் சமாதியடைந்த ஆகஸ்டு 9, 1902 வரை அவருடன் நெருங்கிப் பழகியதில் ஒரு முறையாவது அவர் தமக்கு இந்த உணவு வேண்டும் அல்லது இந்த உணவு வேண்டாம் என்று சொன்னதில்லை. எது கொடுத்தாலும் அவர் சாப்பிடுவார். பின்வரும் பாட்டுக்கு இலக்கியமாக அவர் துறவி வாழ்க்கை வாழ்ந்தார்.

"அறுசுவையின் குணங்குற்றம் அசுத்தஞ் சுத்தம்
[அபத்தியம்
பத்திய மென வூணுய்ந்திடாமல்
பொறுமையுடன் கிட்டினதைக் காட்டுத் தீ போற்
போகங்கள் புசிப்பவன் மா போகியாகும்
சிறிது பெரிது கடின தந்நியங்கள் நன்மை
தீமைகள் சேரினும் படிகச் செயல் போற் சித்தம்
வெறிதிருக் குமவனே மாத்தியாகியாவன்
விரதமிம் மூன்றுடையவரே வீடுளோரே."

"இல்லந்துறந்து பசிவந்த போதங்கிரந்து தின்று
பல்லுங்கறையற்று வெள்வாயுமா யொன்றிற்
[பற்றுமின்றி."

"கறையற்ற பல்லுங்கரித் துணியாடையுங்கள்ள
[மின்றிப்
பொறையுற்ற நெஞ்சமும் பொல்லா தவூணும்
[புறந்திண்ணையும்
தறையிற் கிடப்பும் இரந்துண்ணும் ஓடும் சகமறியக்
குறைவற்ற செல்வமென்றே கோலமா மறை
[கூப்பிடுமே."

"பேய் போல் திரிந்து பிணம் போல் கிடந்து இட்ட
[பிச்சையெல்லாம்
நாய் போல் அருந்தி நரிபோலுழன்று நன்
[மங்கையரைத்
தாய் போல் கருதித்தமர் போல் அனைவர்க்குந்
[தாழ்மை சொல்லிச்
சேய் போல் இருப்பர் கண்டீர் உண்மை ஞானந்
[தெளிந்தவரே."

சமய நூல்களில் விவரிக்கப்பட்ட மூவகை ஜீவன் முக்தருள் சுவாமி குழந்தை வகையைச் சேர்ந்தவர் என்பது பின்வரும் அடிகளால் விளங்கும்.

"படி முழுதும் விண் முழுதும் தந்தாலும் களியாப்
பாலருடன் உன்மத்தர் பசாசர் குணம் வருமே."

இனி, என் அனுபவங்களைக் கூறுகிறேன். 1880 ஜூலை மாதத்தில் நான் சித்தூர் உயர்நிலைப் பள்ளியில் உதவி ஆசிரியராக இருந்த போது சுவாமி நாராயணவரத்தி லிருக்கும் செய்தி, முதல் முதலாகத் திரு. N. ரத்னசபாபதி பிள்ளை, திரு. நாராயணசாமி நாயுடு இவர்கள் மூலமாகக் கிடைத்தது. இந்த அனுபவங்கள் உயர்ந்த கொள்கைகளைப்பற்றியவை யாயினும் அவற்றைப்பற்றி இங்கே விவாதிக்காமல் இவற்றைப்பற்றிப் படிப்பவர்கள் தாமே முடிவு செய்யும்படி விட்டு விடுகிறேன். நான் சென்ற சமயங்களில் நிகழ்ந்தவற்றைப் பற்றி மட்டும் இங்கே குறிப்பிடுகிறேன்.

ஆகஸ்ட், 30, 1880 மூன்று நண்பர்களும் நானும் சுவாமியைப் பார்ப்பதற்காகச் சில இனிப்புத் தின்பண்டங்களெடுத்துக் கொண்டு 29-ஆம் தேதி இரவு புறப்பட்டு 30-ந் தேதி மாலை பாலம்பாக்கம் போய்ச் சேர்ந்தோம். ஒருவர் உறங்குவதற்கே சிறிதாயிருந்த திண்ணைமீது சுவாமி படுத்திருந்தார். பிராமணர் வீடு ஒன்றும் அவ்வூரில்

இல்லாததால் எங்களுக்கு அன்றைய இரவு உணவு கிடைக்கவில்லை. பானகம் குடித்து ஒருவாறு பசியை ஆற்றிக்கொண்டு திண்ணைக்கு எதிரே கீழே படுத்துக் கொண்டோம். நள்ளிரவில் சற்று கனத்த மழை பெய்தது. மழைக்கு ஒதுங்குவதற்காக வீட்டின் உள் தாழ்வாரத்திற்குப் போனோம். புதிதாக நான் வாங்கிய செருப்புக்கள் மழையில் நனைகின்றனவே என்று எண்ணிக் கொண்டிருந்தேன். உடனே சுவாமி, "நீங்கள் எல்லோரும் ஏன் இவ்வளவு கஷ்டப்பட்டுக்கொண்டு வந்தீர்கள்?" என்றார்.

விடிந்தவுடன் அடுத்த தெருவில் இரவு படுத்திருந்த திண்ணையைவிட அகலமான திண்ணையிருந்த ஒரு வீட்டிற்குச் சுவாமி சென்றார். நாங்களும் அவருடன் சென்றோம். எங்களை அவர், "ஒருவன் முப்பதுகாரன், ஒருவன் அறுபதுதாரன், ஒருவன் மாடு மேய்க்கிறவன், ஒருவன் கணக்கு எழுதுகிறவன்" என்று அடையாளம் சொன்னார். அங்கிருந்த நால்வருள் இருவர் முதலியார்கள், ஒருவர் இடையர், மற்றொருவர் கர்ணம். முப்பதுகாரன் என்று சொன்னது முப்பது ரூபாய் சம்பளத்தைக் குறிப்பதற்காக. எனக்கு அப்பொழுது சம்பளம் ஐம்பது ரூபாய் தான் என்றாலும் 1880 செப்டம்பர் 16 முதல் அறுபது ரூபாய் சம்பளம் என்று ஒன்றரை மாதத்தில் உத்தரவு கிடைத்தது.

அப்போது நான் இரண்டு செய்திகளைப்பற்றி நினைத்தேன். அவற்றுள் ஒன்று என் ஆன்மீய முன்னேற்றம் பற்றியது. சுவாமி என்னைப் பார்த்துக் கொண்டு தம் சுட்டு விரல் நடுவிரல் இவற்றை எனக்கு எதிராகக் கட்டி அவற்றைச் சில முறைச் சுற்றினார். இதன் பொருள் எனக்கு விளங்கவில்லை. சிறிது நேரம் பொறுத்து அவரிடம் விடை பெற்றுக்கொண்டு சித்தூருக்குத் திரும்பினேன்.

டிசம்பர், 1880. இம்முறை முன்பு சொன்ன நால்வருள் ஒருவரான A. கோபாலகிருஷ்ண பிள்ளையும் நானும் சுவாமியைப் பார்க்கப் புத்தூருக்குப் பதின்மூன்று மைல் தொலைவிலுள்ள நின்ரு என்ற ஊருக்குப் போயிருந்தோம். 27-ஆந் தேதி மாலை அங்கே போய்ச் சேர்ந்தோம். எங்களுடன் எடுத்துச் சென்ற ரொட்டியை அன்று இரவு சாப்பிட்டோம். அடுத்த நாள் காலை, அந்த ஊரிலிருந்த பிராமணர் எங்களுக்கு உணவு தர மறுக்கவே அவல், வெல்லம், தயிர் இவற்றைச் சாப்பிட்டோம். அன்று பகல் என் நண்பர், சுவாமி படியாதவரானதால் தம் கேள்விகளுக்குப் பதில் சொல்ல முடியுமோ என்ற ஐயத்துடன் பின்வரும் கேள்விகளைக் கேட்டார்.

கோபாலகிருஷ்ண பிள்ளை : வாசி விஷயமாய் எட்டுடனே நாலைக் கட்ட வேண்டுமென்று சொல்லுகிருர்களே அதென்ன ?

சுவாமி : தச்சன் செதுக்கிற வாசியா ?

கோ : அல்ல வாயு.

சு : அபான வாயு பறிகிறதே அதுவா ?

கோ ; அல்ல சுவாமி, சுவாசம்.

சு : நானென்ன படித்திருக்கிறேனு, இதற்கெல்லாம் பதில் சொல்ல ?

இவ்வாருக அவர்கள் பேச்சு முடிந்தது. நண்பர் கொண்ட ஐயத்தால் சுவாமி அவரிடம் இவ்வாறு வேடிக்கையாகப் பேசினுர் என்று எனக்குப் பட்டது.

நான் சில கேள்விகள் கேட்க விரும்பியதால் என் நண்பரைச் சற்றுநேரம் விலகியிருக்கும்படிக் கேட்டுக் கொண்டேன். முன்பு பார்த்தபோது அவர் தம் விரல்களால் காட்டியதன் பொருள் விளங்கவில்லை என்று

சொன்னேன். அவர், "அப்படியா, பாவம் தெரியவில்லையா? தெரிய வேண்டுமா ?" என்று பதிலளித்தார். சித்தூர் உதவி ஆசிரியர். H. H. Winfred என்பவரின் உடன் பிறந்தார் Winfred (இவர் D. P. W.-யில் ஓவர்சீயராக இருந்து பிறகு துறவியாய் விட்டார்). என்பவர் எனக்குத் தெரிவித்த முறைப்படி நான் இந்தச் சமயத்தில் தியானத்தில் இருந்தேன் என்பதை இங்கே குறிப்பிட வேண்டும். எனக்கு இவ்வழியை உணர்த்தும்போது இது ராமநாத புரத்திலிருந்த தம் குரு தமக்கு உணர்த்திய வழி என்று இந்த நண்பர் சொல்லியிருநதார்.

சுவாமி தரையில் சில கோடுகள் கிழித்து அவற்றை விளக்கும்போது திரு. (Winfred) சொன்ன முறையைச் சிறிது மாற்றி, "அப்பா, அந்தத் தீவட்டி வெளிச்சமும் மத்தாப்பு வெளிச்சமும் கண்கொண்டு பார்க்க முடியாது. மாரியம்மன் கோயில் திருநாள் ஆயிரங்கோடி சூரியர்கள் பிரகாசித்தது போலிருக்கும்" என்ருர். இதற்குப் பிறகு தாம் வரைந்த படத்தில் உச்சிக் கோட்டின்மீது விரலை வைத்துப் பிறகு வலது கையால் தம் வாயை மூடிக் கொண்டார். இதனுல் அது பேசாநிலை (மௌனநிலை) என்பதை உணர்த்திஞர் போலும்.

இவ்வாறிருக்கையில் அங்கே அருகில் இருந்த குளத்திலிருந்த தண்ணீர் எடுப்பதற்குச் சென்ற பெண்கள் எட்டிப் பார்த்தார்கள். அவர்களுள் ஒருத்தி என்னைப் பார்த்து எனக்காக இரக்கப்பட்டு போலும், "ஐயையோ, இது யார் பெற்ற பிள்ளையோ! இந்தக்கிழவனண்டை வந்து அகப்பட்டுக் கொண்டாற் போலிருக்கிறதே!" என்ருள். இதைக் கேட்டவுடன் சுவாமி எழுந்து போய்விட்டார்.

இரவு நேரம் வந்தது, சாப்பிடுவதற்கு ஒன்றும் இல்லாததால் ஊருக்குள் சென்று பால் கொண்டு வரப் போனேும். ஆனுல் பால்காரி பாலைப் பூனை குடித்துவிட்டது

என்றார். எனவே நாங்கள் திரும்பிவிட்டோம். இதற்குள் தம்முடனிருந்த கிழவனாரோடு வீடு வீடாகப் பிச்சையெடுத்த உணவுடன் சுவாமி திரும்பி விட்டிருந்தார். ஒரு மாடத்தில் விளக்கு எரிந்து கொண்டிருந்தது. சுவாமி தாம் கொண்டுவந்த உணவைச் சாப்பிடச் சொன்னார். நாங்கள் பசியில்லையென்றதற்குச் சுவாமி வயிற்றில் அடித்துக் கொண்டு "என் மக்கள் பட்டினியாயிருக்கிறார்களே, நான் என்ன செய்வேன்" என்றார். ஆகவே நான் சுவாமி கொடுத்த உணவைச் சாப்பிடுவதற்காக விளக்கை அணைத்துவிடும்படி என் நண்பருக்குச் சொன்னேன். இப்படி நான் சொன்னதற்குக் காரணம் சற்றுத் தொலைவில் உட்கார்ந்திருந்த ஊரார் நாங்கள் சாப்பிடுவதைப் பார்க்காமலிருக்க வேண்டும் என்பதுதான். என் நண்பர் நான் சொன்னபடி விளக்கை அணைத்துவிட்டார். ஆனால் சுவாமி நாங்கள் இப்படிச் செய்வதை விரும்பவில்லை. உடனே விளக்கை மறுபடியும் ஏற்றும்படிக் கிழவனாரிடம் சொன்னார். விளக்கேற்றியவுடன் எங்களுக்கு உணவு தர வந்தார். எங்களுக்குப் பசியில்லையென்று சொன்னோம். சுவாமியும் கிழவனாரும் சாப்பிட்டார்கள். நாங்கள் ஊருக்குள் மறுபடியும் சென்று பால் வாங்கி வந்தோம். விடிவதற்கு முன், சுமார் நாலு மணிக்குப் புறப்பட உத்தரவு கேட்டோம். ஆனால் விடிந்த பிறகுதான் "இரண்டு பேர் குளத்தண்டை இருக்கிறார்கள். அவர்களைக் கும்பிட்டுக்கொண்டு போங்கள்" என்று சொல்லி உத்தரவு கொடுத்தார். அவர் இவ்வாறு சொல்லி முடித்ததும் டோக் நாராயணசாமி நாயுடு வந்தார். அவருடன் வந்த மற்றொருவர் யாரென நாங்கள் அவரைக் கேட்டோம். அதற்கு அவர் திரு. ரத்னசபாபதி பிள்ளை குளத்தருகில் இருப்பதாகச் சொன்னார். மேலும் ஒருநாள் அங்கேயே தங்கி பிறகு அவரவரிருப்பிடம் திரும்பினோம்.

இந்நிகழ்ச்சிகளெல்லாம் என் மனத்தில் அழுத்தமாகப் பதிந்து பெரியவர்களிடத்தில் நான் கொண்டிருந்த நம்பிக்கையை உறுதிப்படுத்தின. மார்ச், 1881 (ஈஸ்டர் விடுமுறை) நாராயணவரம் ஆற்றுக்கு அப்புறம் உள்ள கீழகரத்தில் சுவாமியை நாங்களெல்லோரும் (அதாவது சித்தூரிலிருந்து போன திரு. A கோபாலகிருஷ்ண பிள்ளையும் நானும்; ஆரணியில (Asst. Engineer) ஆக இருந்த திரு. ரத்னசபாபதி பிள்ளையும், திரு நாராயணசாமி நாயுடுவும்) பார்த்தோம். சுவாமி கட்டியிருந்த துணிகள் அழுக்காயிருக்கவே துவைப்பதற்காகத் தரப்பட்டன. வண்ணான் அவைகளைக் கொண்டுவந்த போது அவை சில இடங்களில் கிழிந்திருந்தன. கோபமாயிருப்பது போல் பேசிவிட்டு, சுவாமி, "இங்கேதான் வண்ணான் சண்டையானால் அங்கேயும் வண்ணான் சண்டையா?" என்று கேட்டார். இதன் உண்மை என்னவென்றால் இதற்குச் சில நாட்களுக்கு முன் என் வண்ணானை நிறுத்தி விட்டேன்.

சுவாமியோடு தங்கியிருந்தபோது ஒரு கைக்கோளன் சுவாமிக்குச் சில அடைகள் கொண்டு வந்தான். அவைகளை எல்லோருக்கும் கொடுத்து வரும்போது சுவாமி ஒரு துண்டை என் வாயில் போட்டார்.

சுவாமியை வணங்குவதற்காக ஊரிலிருந்து பலர் வந்திருந்தனர். தம் சுரைக்குடுக்கையிலிருந்து சுவாமி எங்களில் சிலருக்குச் சில விதைகள் கொடுத்தார். விதைகளைப் பெறாதவர்கள் பெறவேண்டுமென்ற ஆர்வத்துடன் சுவாமியைப் பார்த்தார்கள். ஆனால் சுவாமி "அப்பா நான் விதை கொடுக்கவில்லை யென்று கோபங்கொள்ள வேண்டாம். களர்ப்பு நிலத்தில் போட்டால் முளையாது. நல்ல மண்ணில் போட்டால் முளைத்து மரமாகிக் காய்த்துப் பழம், பழமாய் அறுக்கலாம்" என்றார். சுவாமி இவ்வாறு உவமைக் கதைகளைப்பயன் படுத்துவது வழக்கம்,

மே, 1881. இம்முறை நான் தனியாகச் சென்று மறு நாள் சுவாமியை ஒரு சிற்றூரில் பார்த்தேன். நான் அதற்கு முன் இரவு சாப்பிடவில்லையென்று நினைத்து அவருடன் இருந்த கிழவனார் நாங்களனைவரும் பிராமணர் குடியிருக்கும் ஊருக்குப் போகலாம் என்றார். எனவே நாங்கள் சௌரம்பாக்கம் சென்றோம். அங்கே இருக்கும்போது சுவாமி ஒரு நாள், "காக்கை மரம் ஏறுகிறதோ?" என்று என்னைக் கேட்டார். சுவாமி காக்கையை மரம் ஏறச் செய்யக்கூடும் என்ற நோக்கத்துடனேயே நான் அவரை நாடிச் சென்றதாகக் கூறினேன். ஒரு மஹான் அல்லது மஹாத்மா தம் சீடனுக்காக எவ்வளவும் (சிறப்பாக ஆன்மீய முன்னேற்றத்திற்காக) செய்ய முடியும் என்று நம்பியிருந்தேன். எமர்சன் என்பவர் சொல்வது இங்கே குறிப்பிடத் தகுந்தது. "தனக்கு ஞானத்தை விற்கக்கூடிய ஆசிரியர் உண்டு என்று சிறுவன் நம்புகிறான்." ஆனால் அடுத்த முறை அவரிடம் சென்றபோது, இந்தத் தவறான எண்ணத்தைவிட்டு விடுவதற்கான விளக்கம் கிடைத்தது. சுவாமி, "அப்பா மரம் ஏறுகிறவனை எவ்வளவு தூரம் தாங்கலாம்? ஒவ்வொருவனும் தானே கஷ்டப்படவேணடும். கஷ்டத்திற்குத் தகுந்த பலனுண்டு" என்று சொன்னார்.

பிச்சையெடுப்பதற்காக ஒரு நாள் சுவாமி அடுத்த ஊருக்குச் சென்றார். அவருடன் நானும் சென்றேன். ஆனால் அந்த நிலையில் என்னை வைத்துக் கொள்ள என் மனம் இடம் தராததால் நான் ஊரின் எல்லையிலேயே நின்று விட்டேன். எனக்கு உணவு அளித்த பிராமண விதவை சுவாமி எதிரில் வரவே அவர், "என்னோடு வந்த என்மகன் எங்கே?" என்று அந்த அம்மாவைக் கேட்டார். அவர்கள் தமக்குத் தெரியாது என்று சொன்னார்கள். சற்று நடந்தபின் ஊர் எல்லையில் என்னைக் கண்டதும் ஏன் சுவாமி என்னைத் தம் மகன் என்று சொன்னார் என்று கேட்டார்கள். அதற்கு

நான், "ஆம், அவர் என்பாட்டனுர். அவர் வீட்டை விட்டு வெளியேறி நீண்டகாலமானதால் அவரைப்பார்க்க வந்திருக்கிறேன்" என்று சொன்னேன். இந்த பதில் அவர்களுக்குத் திருப்தி அளித்தது. பிறகு அந்த அம்மையார் தம் ஊருக்குச் சென்று விட்டார்கள்.

அன்று பகல் சுவாமி ஒரு மருந்தைப்பற்றிச் சொல்லி அது காய்ச்சலுக்கு உயர்ந்த ஔஷதம் என்று குறிப்பிட்டார். எனக்குக் காய்ச்சல் வந்தால் உட்கொள்ளுவதற்காக அவர் சொன்னதாக நினைத்தேன். அன்று மாலை அவர், "என்னிடம் கொஞ்சம் பணம் இருக்கிறது, மக்கள் அதை எடுத்துச் செல்கிறுர்கள். நான் உனக்குக் கொஞ்சம் தருகிறேன். நீ எடுத்துக்கொள்" என்றுர். அவரைப் பார்க்க வருபவர்கள் அவருக்குத் தரும் பணத்தையும் பிச்சையெடுப்பதில் கிடைக்கும் அரிசி முதலியவற்றை விற்பதால் வரும் பணத்தையும் அவர் தம்மிடம் வரும் பிச்சைக்காரர்களுக்குத் தாராளமாகக் கொடுத்துவிடுவார் என்பதை இங்கே குறிப்பிடவேண்டும். அவர் எனக்கும் பணம் தருவதாகச் சொன்னதற்கு, நான் "சரி" யென்றேன். என்றுலும் அவரிடம் நான் சென்றது பணத்திற்காக அல்ல என்று நினைத்தேன்.

நான் ஊருக்குப் புறப்பட்ட அன்று விடியற்காலை பிராமணர் வீட்டில் பழையது சாப்பிட்டு விட்டு, ஊருக்குப் போக சுவாமியை உத்தரவு கேட்டேன். அவர் என்னுடன் வேலூர் வருவதாகச் சொன்னுர். 'சுவாமியுடனிருந்த கிழவர் உள்பட நாங்கள் மூவரும் புறப்பட்டோம். வழியில் சுவாமி தம் குடுவையிலிருந்த கூழை எடுத்து எனக்குத் தர வந்தார். எனக்குப் பசிக்கவில்லையென்றேன். இன்னும் சிறிது நடந்த பிறகு சுவாமி ஒரு நீர் ஊற்றின் அருகில் கூழ் உண்பதற்காக உட்கார்ந்தார். இம்முறையும் எனக்குக் கூழ் தேவையில்லை யென்று நான் சொல்லவே, சுவாமி சலிப்

படைந்து, "என்ன உனக்காக இவ்வளவு தூரம் நான் வரும்போது, நான் சொல்வதைக் கேட்க மாட்டேனென்கிருயே" என்ருர். நான் மிகுந்த கவலையுடன் "பொறுத்தருளவேண்டும். உங்கள் சொற்படி நடக்கக் காத்திருக்கிறேன்" என்று பதிலளித்தேன். அன்புடன் என்கையில் அவர் ஊற்றிய கூழை உண்டேன். வழியில் பொதுவாக அறிவுரை கூறி, சிறப்பாக, எங்கே நானிருந்தாலும் நல்லதையே நான் செய்யவேண்டும் என்பதன் கட்டாயத்தை என் மனத்தில் பதிய வைத்தார். நகரி ரெயில்வே ஸ்டேஷனை அடைந்தோம். மூன்று பிரயாணச் சீட்டுகள் வாங்கினேன். பிளாட்பாரத்திற்குச் சென்ருேம். எங்களுடன் வந்த கிழவனூர் வண்டியில் ஏறினூர். சுவாமியுடைய சாமான்கள் சிலவற்றை வண்டியில் வைத்தோம். சுவாமி சில நாள் வேலூரில் தங்கிய பிறகு ஆரணிக்கும் அங்கிருந்து நாராயணவரத்திற்கும் ரத்னசபாபதி பிள்ளை அவர்கள் செலவிலேயே அழைத்துச் செல்வதற்காக அப்போது ஆரணியிலிருந்த பிள்ளையவர்கட்குக் கடிதமெழுத வேண்டுமென்று இதற்குச் சற்று முன் நினைத்தேன். சுவாமியை நாராயணவரம் அழைத்துப் போகும் செலவைக் குறைக்க வேண்டும் என்ற நோக்கமே இந்த நினைப்புக்குக் காரணம். அப்படி ஒரு கார்டும் எழுதினேன் என்று நினைக்கிறேன். ஆனூல் அதைத் தபாலில் போடவில்லை. அன்று கிருத்திகையும் அமாவாசையும் சேர்ந்து வந்தன. ஆகையால் திருத்தணிக்கும் திருவள்ளூருக்கும் செல்லும் பிரயாணிகளின் எண்ணிக்கை மிகுதியால் வண்டி அளவுக்குமேல் நிரம்பியிருந்தது. இதனூலோ அல்லது நான் செலவைப் பற்றி நினைத்ததாலோ—எதனூல் என்று சொல்ல முடியவில்லை—சுவாமி வண்டியில் ஏறமறுத்து வேலூருக்கு நடந்து வருவதாகச் சொன்னூர். எனவே நாங்கள் வண்டியில் செல்லாமல் நின்று விட்டோம். அன்று மாலை எனக்குத்

தருவதாகச் சுவாமி சொன்ன காசைத் தரும்படி கேட்டேன் அவர் அது எனக்குத் தீமை செய்யும் என்று சொன்னார். நான் ஊருக்குத் திரும்பினேன்.

அடுத்த அக்டோபர் மாதம், அதாவது நான் சுவாமியிடம் சென்றதற்கு ஐந்து மாதத்திற்குப் பிறகு என்னுடைய ஒரே மகனுக்குக் காய்ச்சல் கண்டது. கலெக்டர் பார்வையிலிருந்த மருத்துவசாலையின் மருத்துவர் என் மகனுக்கு மருந்து கொடுத்து வந்தார். எனினும், என் மகன் இருபத்தொன்றும் நாள் இறந்து போனான். சுவாமி சொன்ன மருந்தை அடியோடு மறந்துவிட்டேன். மகன் இறந்து பிறகு தான் அதைப்பற்றி எனக்கு நினைவு வந்தது. என் உறவினர் சுவாமி கொடுத்த விபூதியைக் கொடுத்து வந்தார்கள். ஆனால் பயன் ஒன்றும் ஏற்படவில்லை.

டிசம்பர், 1881. இம் முறை நானும் என் நண்பர் A. கோபாலகிருஷ்ண பிள்ளையும் சென்றோம். புத்தூரிலிருந்து நடுப்பகல் புறப்பட்டு நடக்கத் தொடங்கினோம். இரவு ஒரு சிற்றூரில் தங்கினோம். அடுத்த நாள் காலை ஒரு வெட்டியானை வழி காட்டியாகக்கொண்டு தொடர்ந்து நடந்தோம். நடுப்பகல் சமயத்தில் மேதகண்டிகை அடைந்தோம். சுவாமி அதற்கருகிலிருந்த ஓர் ஊரில் இருப்பதாகக் கேள்விப்பட்டோம். சுவாமியைக் காணச் செல்லும்போது பொதுவாக நேரிட்ட இடர்ப்பாடுகளையும் தொல்லைகளையும் பற்றி இங்கே குறிக்க வேண்டியதில்லை. களைத்திருக்கவே நாங்கள் அவ்வூரிலேயே தங்கினோம். எங்களுடன் வழி காட்ட வந்தவனை அடுத்த ஊருக்கு முன்னதாக அனுப்பி எங்கள் வருகையைச் சுவாமியுடன் இருந்த கிழவனுக்குத் தெரிவிக்கச் சொன்னோம். மளிகைச் சாமான்கள் வாங்கி, சமைக்க வேண்டிய பாத்திரங்களையும் இரவலாகப் பெற்று ஒரு தோட்டத்தில் உணவு சமைத்தோம். சமையல் எவ்வளவு மோசமாயிருந்தாலும் பசித்திருந்த அந்த வேளைக்கு

மிக நன்ருயிருந்தது. நீல மண்டியொன்றின் அருகில் நாங்கள் மாலை வெயிலில் குளிர்காய்ந்து கொண்டிருக்கும் போது சற்று தொலைவில் சில பெரிய மனிதர்கள் வரக் கண்டோம். நாங்கள் நினைத்தபடி அவர்கள் எங்கள் நண்பர்கள் தாம். இதற்குள் சுவாமியும் வந்து விட்டார். அடுத்த நாளும் அங்கேயே தங்கினோம். அதற்கடுத்த நாள் சுவாமி உள்பட நாங்களனைவரும் ராமகிரிக்குச் சென்ருேம். இவ்வூர் செங்கற்பட்டு ஜில்லா, திருவள்ளூர் தாலுக்காவைச் சேர்ந்தது. அதற்கு அரை மைல் தொலைவில் ஒரு குன்றின் அடிவாரத்தில் சிவன் கோயில் ஒன்றுண்டு. அடிவாரத்தி லுள்ள நந்தியின் வாயிலிருந்து குன்றின் மீதுள்ள நீர் குளத்தில் வந்து விழுகிறது. இந்த நீர் கோயிலுக்கு மானிய மாக விடப்பட்ட ஆறுகாணி நன்செய் நிலத்தில் பாய்கிறது. இந்தக் கோயிலில் தான் நாங்கள் தங்கினோம். சுவாமி ஒரு மண்டபத்தில் உட்கார்ந்திருந்தார். அவரைச் சுற்றி அரை வட்டமாக நாங்கள் உட்கார்ந்திருந்தோம். சுவாமி என்னைப் பார்த்து, அக்டோபர் 21-ம் தேதி காலமான என்மகனைப் பற்றி (இவன் காய்ச்சலுக்காகத்தான் சுவாமியை நான் மே மாதத்தில் பார்த்தபோது அவர் ஒரு மருந்தைக் குறிப் பிட்டது). "என்னடா, குழந்தையைக் கொண்டு வா, கொண்டு வா என்று சொல்லுகிருர்கள். நான் என்ன செய்யட்டும்? பிராப்தம் அவ்வளவுதான்" என்ருர். இவ்வாறு சொல்லிக்கொண்டே, கண்ணீர் விட்டு எழுந்து சென்ருர். அப்போது என்னுடன் A. கோபாலகிருஷ்ண பிள்ளை, ரத்னசபாபதி பிள்ளை, T. நாராயணசாமி நாயுடு, செங்கல்வராய முதலியார் ஆகியோரும் அங்கிருந்தனர். சுவாமி, தமக்குப் பூப்போட்டு கர்ப்பூர ஆரத்தி செய்வதற்கு முன் கோயிலில் உள்ள சுவாமிக்கு முதலில் கர்ப்பூர ஆரத்தி செய்யச் சொன்னுர். அங்கே இரண்டொரு நாள் தங்கி கொப்பேடு என்ற ஊருக்குப் போனோம். அங்கிருந்து அவரவர் இருப்பிடம் திரும்பினோம்.

மே. 1882. சித்தூரிலிருந்து வாலாஜா பேட்டைக்கு மாற்றப்பட்டிருந்தேன். நான் என் நண்பர் (இப்பொழுது திவான் பஹதூர்–Retd. Dy. Director of Revenue Survey என் தாயார், என் தாயாருடன் பிறந்தார், ஆகியவரும் சென்றோம். புத்தூரில் ஒரு வண்டி அமர்த்திக்கொண்டு நாராயணவரத்தில் சுவாமியைக் காணாததால் நேராகக் கொப்பேடு சென்றோம். சில நாட்களுக்கு முன்பே அங் கிருந்து சுவாமி போய்விட்டதாகக் கேள்விப்பட்டோம். அங்கே செங்கல்வராய நாயுடு என்பவர் வீட்டில் நாங்கள் தங்குவது வழக்கம். பின் நிகழவிருந்த ஒன்றைச் சுவாமி முன்னதாகவே உணர்ந்து புறக்கடையில் உள்ள கிணற் றைப் பல முறை சுற்றிவந்து வாயிலடித்துக் கொண்டதாக வும் இதற்குச் சில நாள் பிறகு தம்முடைய வயது வந்த மகள் கிணற்றில் விழுந்து இறந்து விட்டதாகவும் நாயுடு அவர்கள் சொன்னார்கள். பிறகு நாங்கள் ராமகிரிக்குச் சென்றோம். அங்கே சுவாமி இல்லாததால் நாராயணவரம் வந்தோம். அதற்கு முன்னாள் சுவாமியைக் காளஹஸ்தியில் பார்த்ததாக அங்கே சிலர் சொன்னார்கள். எனவே காளஹஸ்திக்குப் போனோம். காளஹஸ்தியில் மிகுந்த ஊக்கத்தோடு தேடியும் அவரைக் காணவில்லை. அதற்கு முன்னாள் அங்கிருந்து போய் விட்டதாகச் சொன்னார்கள். அவரைப் பார்க்கமுடியாமல் நாங்கள் திரும்பினோம். இந்த ஒரு முறைதான் நான் சுவாமியைப் பார்க்க முடியாமல் போனது.

இங்கே இதற்கு முன் நடந்த ஒரு நிகழ்ச்சியைக் குறிப் பிட விரும்புகிறேன். எப்ரல் மாதத்தில் டோக் நாராயண சாமி நாயுடு என்னைப்பார்க்கவந்தார். நாங்களிருவரும் திருவலம் சென்றோம். அங்கே ப்ளாவட்ஸ்கி அம்மையார் (Madam Blavatsky) கர்னல் ஆல்காட் (Cornel Olcott) திவான்பஹதூர் R. ரகுநாதராவ், ஜட்ஜ் சீனிவாசராவ்,

சுவாமி T. சுப்பராவ் G. சுப்பைய செட்டியார் — மற்றும் சிலரும் சென்னையிலிருந்து வந்தார்கள். சுவாமி சுப்பராவ், சுப்பை செட்டியார் இருவரும் எங்களை அறிமுகப்படுத்த பிரம்மஞான சங்கத்தின் அங்கத்தினர்களாக நுழைவுச் சடங்கு செய்து எங்களைச்சேர்த்துக் கொண்டனர்.

டிசம்பர், 1882. நான் தனியாகச் சென்று சௌரம் பாக்கத்தில் சுவாமியைக் கண்டேன். இம்முறை நானே உணவு சமைத்துக்கொள்ள முடிந்தது. சுவாமியோடு ஒரு தோப்பில் இரண்டு மூன்று நாள் தங்கினேன். ஒரு நாள் அவர் "அடே சிறிய பைகளில் மிளகாய், பருப்பு முதலியவைகளைக் கட்டிக்கொண்டு ஊர் ஊராய்த்திரி" என்றார். பிறகு என் இருப்பிடம் திரும்பினேன். சிலகாலம் பொறுத்து செங்கற்பட்டு வட்டாரத்தைச் சேர்ந்த சைதாப் பேட்டைக்கு (Acting Deputy Inspector) ஆகச் செல் லும்படி எனக்கு உத்தரவு கிடைத்தது. இந்த வேலையில் நான் 1883 ஜனவரி 30-ந் தேதி சேர்ந்தேன்.

மார்ச், 1883. திருவள்ளூர் தாலுக்காவில் இந்த மாதம் எனக்கு மேற்பார்வை வேலை இருந்தது. கடைசியாக நான் பார்வையிட்ட பள்ளிக்கூடம் காளஹஸ்திக்குச் சுமார் 15 மைல் தொலைவிலுள்ள தாமநல்லூர். ஈஸ்டர் விடுமுறை அதற்கு மறுநாள் தொடங்கிற்று. இதைப் பயன் படுத்திக் கொண்டு நான் காளஹஸ்தி சென்று பிறகு திருப்பதிமலை மேலுள்ள கோயிலுக்குச் சென்றேன். திரும்புகையில் நான் நாராயணவரத்தைக் கடக்கவேண்டியிருந்தது. சுவாமி யைக் கொப்பேடு செங்கல்வராய நாயுடு வீட்டில் பார்த் தேன். அவர், "அப்பா, என் தலையிலிருக்கிற சடையைச் சிலர் திருடிக்கொண்டு போகிறார்கள். உனக்கு எவ்வளவு வேண்டுமானாலும் கத்தரித்து எடுத்துக்கொள். ஆனால் அதைத் தண்ணீரில் போடாதே" என்றார். ஐரோப்பாவில் **செய்த சுற்றுப்பிரயாணம் காரணமாகப் பொதுவாக**

லண்டன் துரைசாமி நாயுடு என்று அழைக்கப்பட்ட காலஞ்சென்ற லால் பேட்டை துரைசாமி நாயுடு F. T. S. தாம் சுவாமி உத்தரவு இல்லாமலும் அவருக்குத் தெரியாதென நினைத்தும் அவர் சடையில் சிறிது கொண்டுவந்ததாகக் கூறினர். எனக்குச் சுவாமி கொடுத்த சடைமுடியை ஒரு பட்டுப் பையில் காப்பாற்றி வைத்திருக்கிறேன்.

ஜூலை, 1883. மேற்பார்வை வேலையில் செல்லும்போது, சுவாமியை ராமகிரியில் பார்த்தேன். திருவள்ளூரிலிருந்து என் நண்பர் என்னுடன் வந்திருந்தார். அன்று அமாவாசை. அமாவாசையில் நான் தருப்பணம் செய்வது வழக்கம். ஆனல் அன்று புரோகிதர் ஒருவரும் கிடைக்கவில்லை. கோயிலில் உள்ள குருக்களைக் கொண்டு தர்ப்பணம் செய்யலாமென்று நினைத்தேன். ஆனல் அவர் அன்று வரவில்லை. எனவே அன்று தர்ப்பணம் செய்ய முடியாது போயிற்று, சாப்பிட உட்கார்ந்தோம். எனக்குத் தாகமாயிருந்தது. சுவாமி முன் வைக்கப்பட்ட லோட்டாவில் தயிருடன் கலந்த நீராகாரம் இருந்தது. நீராகாரம் அதிலிருந்ததற்குக் காரணம் சொல்லுகிறேன். சுவாமி நாள் தோறும் விடியற்காலையில் சிறிது உணவு சாப்பிடுவது வழக்கமாதலால் அவருக்கென பழையது வைக்கப்பட்டிருந்தது. நான் எடுத்துச் சென்றது அந்த ஒரே பாத்திரமாதலாலும் அதில் நீராகாரம் இருந்தபடியாலும் அதை அருந்தத் தயங்கினேன். நான் அவ்வாறு தயங்கும் போதே சுவாமி தம்மிடமிருந்த எஞ்சிய உணவைச் சிறிது எடுத்து என் இலையில் போட்டார். ஒன்றும் சொல்லாமல் நான் அதைச் சாப்பிட்டு விட்டேன்.

இந்த முறைதான் நான் வழிபாட்டிற்காகக் கோயிலுக்குப் போக வேண்டுமா என்று சுவாமியைக் கேட்டேன்.

அவர் இளவயதுடைய என் வேலைக்காரனைக் காட்டி, "என்ன அந்தச் சிறு பையனைப் போல நீ இந்தக் கேள்வி கேட்கிறாய்" என்று பதிலளித்தார்.

அக்டோபர், 1883. இம்முறையும் நான் ராமகிரியில் அதே கோயிலில்தான் சுவாமியைப் பார்த்தேன். நான் அங்கே தங்கியிருந்தபோது சுவாமி, "நீ எங்கிருந்தாலும் நான் உன்னோடு எப்போதும் இருப்பேன்" என்றார். அப்பொழுது அவர் சொன்னதன் பொருள் விளங்கவில்லையென்றாலும் இப்பொழுது எனக்கு அது தெளிவாயிருக்கிறது.

இம்முறைதான் என்று நினைக்கிறேன். மூன்று அல்லது நான்கணா விலைக்கு மேற்படாத இரண்டு சுமை விறகும் காய்கறி முதலியவும் ஒரு பள்ளி ஆசிரியரிடமிருந்து பெற்றேன். இதைப் பார்த்திருந்த சுவாமி சாப்பிடும்போது "நீயும் வாங்கிப் போட்டாய்; நானும் சாப்பிட்டு விட்டேன்" என்றார். கருத்து ஆழம் கொண்ட இவ்வுரை ஒரு பொருளின் விலை எவ்வளவு குறைவாக இருந்தாலும் அதை வெகுமதியாகப் பெறக்கூடாது என்பதை உணர்த்துகிறது. வேலையில் இருந்த பொழுது, இப்படிப்பட்ட நிலைமைகளில் எப்படி நடந்து கொண்டேன் என்பதைப் பற்றி எழுதினால் அது தற்புகழ்ச்சியாகுமாதலால் இதோடு விட்டுவிடுகிறேன்.

டிசம்பர் 1883. திருவள்ளூர் தாலுக்காவில் நான் சுற்றுப்பயணம் செய்துகொண்டிருந்தேன். இந்தத் தாலுக்காவும் கார்வேட்டு நகரம் ஜமீந்தாரியைச் சேர்ந்த நாராயணவரம் தாலுக்காவும் ஒன்றற்கொன்று அருகானவை. ராமகிரியை அடைந்தவுடன் என் வண்டியையும் வேலைக்காரனையும் அங்கேயே விட்டுவிட்டு என் சேவகனுடன் சுவாமியைப் பார்ப்பதற்காகப் புறப்பட்டேன். என் அதிகார எல்லைக்

குள் அவரைக் காணுமையால் அவ்வெல்லையைக் கடந்து செல்ல வேண்டியதாயிற்று. என் எல்லையைக் கடந்து செல்வது சரியல்லவாதலால் என் உள்ளத்தில் அமைதி சற்று குலைந்தது. இந்நிலையில் சிறிது தூரமே நடந்தேன். எனக்கு மிகவும் வியப்பு உண்டாகத் தக்கபடி சுவாமி ஒரு சிறிய வேப்ப மரத்தடியில் உட்கார்ந்திருந்தார். இது நடந்தது ஒரு சனிக்கிழமை மாலை, மூன்று மணி அளவில். பாதைக்கருகில் இருந்த ஓர் ஊருக்குச் சென்றோம். என் சேவகனை ராமகிரிக்கு அனுப்பி என் சாமான்களை எடுத்துக் கொண்டு என் வேலைக்காரனையும் அழைத்துக்கொண்டு வரச் சொன்னேன். அடுத்தநாள் சுவாமியுடன் சில மணி நேரம் தங்கியிருந்து பிறகு நான் தங்கியிருந்த இடத்திற்குத் திரும்பினேன். நான் புறப்படும் சமயத்தில் சுவாமி தம் முடன் இருந்த கிழவனுக்கு ஒரு துணி தரச்சொன்னார். என்னிடம் புதிய துணி இல்லாததால் நான் உடுத்துக் கொண்டிருந்த ஒன்றைக் கொடுத்தேன். உடனே சுவாமி, "நீ பிழைத்த பிழைப்பு இவ்வளவுதானா? துணி கொடுக்கும்படிச் சொன்னால், ஆகட்டும். இன்னொரு பிரயாணம் வரும்போது கொண்டு வந்து கொடுக்கிறேன் என்று சொல்லாமல் உடனே கொடுத்துவிட்டாய். அவனும் கட்டிக் கொண்டான்" என்று சொன்னார்.

1884-க்கும் 1887-க்கும் இடையில் பலமுறை அவரைப் பார்த்தேன். ஆனால் குறிப்பிடத்தக்க முதன்மை வாய்ந்த நிகழ்ச்சி ஒன்றுமில்லை.

டிசம்பர் 1887. இந்தச் சமயத்தில் நான் சேலத்தில் இருந்தேன். என் நண்பரொருவரும் நானும் சுவாமியை நாகலாபுரத்தில் பார்த்தோம். ராமகிரி கோயிலுக்கு அவரை அழைத்துச் சென்று குளிக்கும்படிச் செய்தோம். அவர் துணிகள் அழுக்காயிருந்தமையால் அவருக்குப் புதிய துணிகள் கொடுத்து அவர் துணிகளை நானே குளத்தில்

துவைத்தேன். துவைத்துக் கொண்டிருக்கும் போது அவரைப் போல் எப்போது நானும் ஆவேன் என்று நினைத்துக் கொண்டிருந்தேன். குளக்கரையில் நின்று கொண்டிருந்த அவர் "அடே, ஆத்திரப்படாதே. பொங்கினவர் காடாண்டார், பொறுத்தவர் பூமியாண்டார்" என்றார். இது மஹாபாரதத்தில் வருகிற செய்தி.

செப்டம்பர், 1888. நாராயணவரம் தாலுக்கா உள்ளிட்ட வாலாஜாபேட்டை வட்டாரத்துக்கு மாற்றப்பட்டிருந்தேன். என் பயணத்தைத் தொடங்கிய பின் புத்தூருக்குப் பதின்மூன்று மைல் தொலைவிலுள்ள நின்று என்ற இடத்தில் சுவாமியைப் பார்த்தேன். பள்ளிக்கூடங்களின் உதவி மேற்பார்வையாளராக இருந்த (Deputy Inspector of Schools) H. M. Winfred என்பவர் (1880 அக்டோபர் மாதத்தில் எனக்கு யோகப் பயிற்சி முறை சொல்லித்தந்த சன்யாசி இவருடைய உடன் பிறந்தாராவர்) நோய்வாய்ப்பட்டு குளித்தலை மருத்துவ நிலையத்தில் மருத்துவராக இருந்த தம் மருமகனிடம் சிகிச்சை பெறுவதற்காக (Privilege Leave) விடுமுறை பெற்றிருந்தார். வைப்பு சூனியம் போன்றவைகளுக்கு ஆளாகியிருக்கலாம் என்ற ஐயங்கொண்ட இவர், தம் நோய்க்குக் காரணம் என்னவென்று சுவாமியிடம் கேட்கச் சொல்லி எனக்குக் கடிதம் எழுதியிருந்தார். சுவாமி முன்னிலையில் இதைப்பற்றி நான் நினைத்துக் கொண்டிருக்கும் போது சுவாமி கண்ணீர் விட்டார். இதனால் நான் என் நண்பருக்கு நோய் நீங்காது என்று முடிவு செய்தேன். ஆனால் இதை அவருக்குத் தெரியப்படுத்தவில்லை. அக்டோபர் முதல் தேதி நான் திருத்தணிகை சென்றபோது நண்பர் காலமாய் விட்டார் என்று அவர் மருமகன் எனக்கு எழுதிய கார்டு கிடைத்தது.

மார்ச், 1889. சுவாமியைக் கொப்பேடு என்ற ஊரில் பார்த்து அவரோடு ஒரு நாள் தங்கியிருந்தேன். அவர் என்னிடம், "அடே எலும்பில்லாத சீச்சீ" என்ருர். மாமிசம் அவருக்குத் தேவையா என்று அவரைக் கேட்டேன். தமக்காக அல்ல என்று பதில் சொன்ஞர். அவரோடிருந்த கறுத்த, வலிவும் பருமனுமுள்ள ஒருவர் சுவாமிக்கு அவ்வுணவில் விருப்பம் உண்டென்ருர். அவரிடம் இரண்டு ரூபாய் கொடுத்து அவ்வுணவு செய்து சுவாமிக்குத் தரும்படிச் சொல்லிவிட்டுப் போனேன், வாலாஜா சேர்ந்த சில நாட்களுக்குள் ஒரு நோயும் இல்லாதிருந்தும் ஒருவகையான இளைப்பு ஏற்பட்டது. அப்போதும் சரி, இப்போதும் சரி, நான் மரக்கறி உணவுதான் சாப்பிடுவது வழக்கம். ஆனுல் என் தாயாரும் நண்பரொருவரும் வற்புறுத்தவே, சுவாமி குறிப்பாக உணர்த்திய மாமிச உணவை மேற்கொள்ள வேண்டியதாயிற்று.

ஆகஸ்ட், 1889. சுவாமியை நாராயணவரத்தில் பார்த்தேன். இம்முறை சில மணி நேரமே அவரோடு இருக்க முடிந்தது. எனக்கு உடம்பு சரியாக இல்லை. நாங்கள் சாப்பிட உட்காருமுன், சுவாமி, "யாரடா உன்னை மார்மேல் உதைத்தது?" என்று கேட்டார். "எனக்கென்ன தெரியும்? உங்களுக்கல்லவா தெரிந்திருக்கும்!" என்று பதில் சொன்னேன். தம் இலையில் ஒரு பகுதி உணவை விட்டுவிட்டுப் பிறகு சாப்பிடுவதாகச் சொன்ஞர். அதை ஒரு முறத்தால் மூடும்படி என்னிடம் சொன்ஞர். உணவை முறங்கொண்டு மூடுவது நன்ருக இருக்காது என்றும் நானே அங்கிருந்ததாலும் அதை முறங்கொண்டு மூடவில்லை. நான் புறப்பட இருக்கும்போது உணவு எங்கே என்று கேட்டார். துரதிருஷ்ட வசமாக அதை ஒரு நாய் தின்றுவிட்டுப் போய்விட்டது. புறப்படுவதற்காக நானும் விரைந்து கொண்டிருந்தேன். அடுத்த நாள் நான் ஒரு

பள்ளிக்கூடத்தைப் பார்வையிடவில்லை யென்றால் அதற் காகக் குறிப்பிட்ட நாள் கடந்துவிடும். ஆகையால் நான் திடுதிப்பென்று புறப்பட்டு இரவு எட்டு மணிக்கெல்லாம் போய்ச் சேரக்கூடிய பள்ளிப்பட்டு என்ற ஊருக்கு நள்ளிரவு போய்ச் சேர்ந்தேன். கனத்த மழையில் வழி யெல்லாம் நனைந்து மிகவும் கஷ்டப்பட்டேன். அன்றிரவு பட்டினி கிடந்தேன். அடுத்த நாள் விடியற்காலை ஐந்து மணிக்குப் புறப்பட்டேன். முழுவெள்ளம் புரண்டு கொண்டிருந்த ஆற்றைக் கடந்து அக்கரை சேர்ந்தேன். நல்ல காலமாக வெள்ளத்தில் அடித்துக்கொண்டு போகாமல் தப்பினேன். செப்டம்பர் ஆறாந் தேதி என் அலுவலகத் தலைமை இருப்பிடத்திற்கு (Head Quarters) வந்து சேர்ந்தேன். என் நோய்க்காகச் சுவாமி ஒரு மூலிகை கொடுத்திருந்தார். அதை நான் முறையாகச் சாப்பிடுவ தில்லை. ஒழுங்கான வாழ்க்கையில் அக்கரையில்லாதவர் களுள் நானும் ஒருவன் என்பதை இங்கே குறிப்பிட வேண்டும். உடல்நிலை கெடவே தலைமை இருப்பிடத் திலேயே அந்த மாதம் இருக்க இசைவு பெற்றேன் அக்டோபர் மாதத் துவக்கத்தில் பள்ளிக்கூட மேற் பார்வைக்கான பயணந் தொடங்கி புத்தூர் சென்றேன். எனக்கு உடம்பு சரியாக இல்லாததால் என் தாயாரும் என்னோடு வந்திருந்தார்கள். சுவாமியை அழைத்துவரச் சொல்லி என் சேவகனை நாராயணவரத்திற்கு அனுப் பினேன். சுவாமி புத்தூருக்கு வந்தார். என் மேலதிகாரிக் கும் எனக்கும் உறவு சரியாக இல்லாததால் 'வைப்பு' போன்ற கெடுதி எனக்கு யாரோ செய்திருப்பார்கள் என்று என் தாயார் ஐயப்பட்டார்கள்.. எனவே தம் ஐயத்தின் படி தான் எனக்கு நோய் ஏற்பட்டதா என்று சுவாமியைக் கேட்டார்கள். அவர் அதற்கு, "அவன் பெண்டாட்டி தாலி அறுந்தது போ" என்று பதில் சொன்னார். சுவாமி

என்னோடு இரண்டு மூன்று நாட்கள் தங்கிவிட்டுப் பிறகு போய்விட்டார். சில நாட்கள் பொறுத்து என் மேலதிகாரியையும் அவர் தலைமைக் குமஸ்தாவையும் (Head Clerk) பற்றி நான் குற்றம் சாட்டிச் செய்திருந்த புகார்பற்றி தீர்ப்பு செய்யும் கல்வித்துறைத் தலைவரைப் (D. P. I.) பார்க்கச் சென்னை வரச் சொன்னார்கள். சென்னைக்குச் செல்வதற்குமுன் நாராயணவரத்தில் ஒரு பள்ளிக்கூடத்திற்கு அரசினர் பண உதவி (Grant) தருவதற்காகப் பார்வையிட அங்கே சென்றேன். என் சேவகனை அனுப்பிச் சுவாமியை அழைத்துவரச் சொன்னேன். மேற்பார்வை செய்து முடித்த சமயத்தில் சுவாமி வந்து பள்ளிக்கூடமிருந்த வீட்டின் திண்ணையில் அமர்ந்திருந்தார். யார் தம்மை வரச் சொன்னது என்று கேட்டார். நான் அவர் முன் சென்று நடைபெற விருந்த விசாரணையைப் பற்றி நினைத்துக் கொண்டிருந்தேன். அவர், "அப்பா, உன்னை மறுபடியும் பார்க்கிறது எப்பவோ? ஐந்து மாதம் செல்லுமோ ஆறு மாதம் செல்லுமோ" என்றார். இது என்னை மிகவும் உணர்ச்சிக்குள்ளாக்கியது. என்னை வேறு இடத்திற்கு மாற்றிவிடுவார்கள் என்று அவர் குறிப்பிட்டதாக நினைத்தேன். அவ்வாறு இல்லையென்றால் நாராயணவரத்தருகில் எனக்கு நிறைய வேலையிருந்ததால் சென்னையிலிருந்து வந்த சில நாட்களில் சுவாமியைப் பார்க்க முடியும். சுவாமி எழுந்திருந்து நடக்கத் தொடங்கினார். நான் அவருடன் சென்றேன். வழியில் அவர், "ஒருவனுக்கு அழுகை, ஒருவனுக்குச் சிரிப்பு" என்றார். "யாருக்கு அழுகை, யாருக்குச் சிரிப்பு?" என்று நான் கேட்டதற்குப் பதிலில்லை. இதைப்பற்றி நான் கூர்ந்து நினைக்க, அவர் "உனக்கு ஒரு குறைவுமில்லை. சுகமாய்ப் போய்வா" என்றார். சென்னைக்குச் செல்லும் வழியிலும் கல்வித்துறைத் தலைவர்

நடத்திய விசாரணையிலும் நடந்தவை பற்றிய விவரங்களைப் பற்றி இங்கே குறிப்பிட விரும்பவில்லை. நான் புத்தூருக்குத் திரும்பினேன்.

கனத்த மழையால் நாராயணவரம் ஆற்றில் தண்ணீர் நிறையப் போய்க் கொண்டிருந்ததால் ஆற்றைக் கடந்து அதற்கு அப்பாலுள்ள ஊர்களுக்கு மேற்பார்வையிடச் செல்ல முடியவில்லை. இவ்வாறாக அடுத்த மார்ச் வரையில் சுவாமியைப் பார்க்க முடியாது போயிற்று.

புத்தூரிலிருந்து நான் வேறு வழியாகச் செல்ல இருந்தேன். நான் திருத்தணிகையில் வழக்கமாகச் சந்தித்து வந்த வேறொரு சுவாமி—ஒரு மஸ்தான்—ரெயிலில் வந்து என்னைச் சத்திரத்தில் பார்த்தார். அவருக்குக் குடாக்கு தேவையாயிருந்ததால் பயணத்தை நிறுத்த அங்கேயே தங்கி குடாக்கு தயார் செய்து கொடுத்தேன். அன்று (1889 அக்டோபர் 18-ஆம் தேதி சமயத்தில்) அடுத்த மாத முடிவுக்குள் (அதாவது நவம்பர் மாதத்திற்குள்) என் மேலதிகாரியும், (Asst. Inspector) அவர் தலைமைக் குமஸ்தாவும் என்னுடன் தொடர்பற்றுப் போவார்கள் என்று அவர் அன்பு கூர்ந்து சொன்னார். அவ்வாறே முன்னவரை ஆசிரியராக நவம்பர் 26-ந் தேதி சமயத்தில் மாற்றினார்கள். பின்னவரை நீண்ட ஓய்வு பெறச்செய்து இறுதியில் இலாகாவுக்குத் திரும்பாமற் செய்தார்கள்.

என் நோயின் காரணத்தைப்பற்றி எழுந்த ஐயம் என்ன என்று இங்கே குறிப்பிடவேண்டும். என் மேலதிகாரி (Asst. Inspector of Schools) சித்தூர் உயர்நிலைப் பள்ளியின் முதல் உதவி ஆசிரியராயிருந்த (First Assistant) ஒரு கிறிஸ்தவரிடம் (திரு. H. M. வின்பிரட் அல்ல) தம் மனைவி நான் செய்த சூனியத்தால் இறந்து விட்டதாகக் கூறினார். ஜில்லா போர்டு கூட்டத்திற்காக நான் சித்தூர்

சென்ற போது அவர் நண்பரிடமிருந்து நேராக நான் இதைக் கேள்விப்பட்டதால், என் மீது அவர் செய்த சூனியம் பலிக்காமல் போகவே, அச்சூனியம் அவர் மனைவி மீது திரும்பியது என்ற முடிவுக்கு வந்தேன். பொதுவாக இப்படிப் பேச்சு. (அதாவது தம் எதிரிகள் மீது செய்த சூனியம் தம் உற்றார் மீது திரும்புவதும் உண்டு) அதில் எனக்கு நம்பிக்கை உண்டு. இங்கே குறிப்பிடத்தக்கது அவர் தம்மைப் பெரிய மந்திரவாதி என்றும் தாம் மலபாரில் இருந்தபோது இந்த வித்தையைக்கற்றுக் கொண்டதாகவும் பெருமையுடன் சொல்லிவந்தார் என்பதாகும். 1889. ஆகஸ்டு மாதத்தில் நான் சுவாமியைப் பார்த்தபோது அவர், "யாரடா உன்னை மார்மேல் உதைத்தது?" என்று கேட்டதும் என் தாயார் ஐயங்கொண்டு கேட்டதற்கு அவர் சொன்னபதிலும் எனக்கு ஐயத்தை உண்டாக்கின. இந்த ஐயம் தீர்ந்து தெளிவானது மேலே கூறியபடி சித்தூர் நண்பர் என்னிடம் தெரிவித்த போதுதான்.

1890, மார்ச். கொப்பேட்டுக்கு அருகில் உள்ள ஓர் ஊரில் சுவாமியைச் சந்தித்தேன். வேலூரில் என் பாட்டனார் நோயாக இருந்தார். இதைப்பற்றி நான் நினைக்கக்கூட இல்லை. சுவாமி, "அடே, அங்கே கல்யாணம் ஆய்விட்டது" என்றார். யாராவது இறந்து போனார்கள் என்பதைக் குறிப்பிடச் சுவாமி இவ்வாறு சில வேளைகளில் சொல்வதுண்டு. நாராயணவரம் சென்ற போது என் பாட்டனார் இறந்து விட்டதாகக் கடிதம் கிடைத்தது.

1890. சுவாமியைப் பார்க்க இன்னொரு முறை நாராயணவரம் சென்ற போது அங்கே பல நண்பர்கள் வந்திருந்தார்கள். நான் அங்கிருந்தபோது அவர்களெல்லோரும் என்னுடன் சாப்பிட்டார்கள். இப்போது பெரிய வேலையிலிருக்கும் ஒருவர் விருந்தினர்களில் ஒருவராயிருந்தார். இலைகள்போட்டு உணவு பரிமாறும் போது

அவரோடு உண்பது வகுப்புக் கட்டுப்பாட்டுக்கு மாறுனது என்ற எண்ணம் எனக்கு ஏற்பட்டது. சுவாமி உடனே அவரை இலையை எடுத்துக்கொண்டு போய் வேறொரு இடத்தில் உட்காரச் சொன்னார். இந்த எண்ணத்திற்கு இடம் கொடுத்தது தவறு என்று தெரிகிறது. ஆனால் அதைத்தடுக்க முடியவில்லை. இதற்காக நான் குறை பட்டுக்கொண்டு வருந்தினேன்.

*1890.* அல்லது *1891.* நானும் என் மேலதிகாரியும் (**Asst. Inspector of Schools**) சுவாமியை நாராயணவரத்தில் போய்ப்பார்த்தோம். என்னுடன் வந்தவரின் நோக்கம் நோயாக இருந்த தம் நண்பர் பெயரால் சுவாமிக்குச் சாப்பாடு செய்வித்தால் நோயாளி விரைவில் நலனடைவார் என்பதே. சுவாமியை அவர் இருப்பிடத்திலிருந்து நாங்கள் தங்கியிருந்த இடத்திற்கு அழைத்துச் சென்றோம். சுவாமி உட்கார்ந்தவுடன் "இந்த இழவுச் சோறு எனக்கேண்டா?" என்று சொல்லிவிட்டுப் போய்விட்டார். காலைக்கடன் முடிக்க நாங்கள் ஆற்றுப் பக்கம் போனோம். வேலூரில் நோயாயிருந்தவர் இறந்துவிட்டார் என்று வந்த தந்தியைப் பள்ளிக்கூடத் தலைமை ஆசிரியர் எடுத்துக் கொண்டு வந்து கொடுத்தார். அப்போதுதான் என் மேலதிகாரி தாம் முதலில் கொண்டிருந்த நோக்கத்தைப் பற்றி எனக்குத் தெரிவித்தார். அடுத்த நாள் காலையில் சுவாமிக்கு உணவு அளிப்பதற்காக அவரை அழைத்துச் சென்றோம். உட்கார்ந்து கொண்டே, என் மேலதிகாரியைப் பார்த்து சுவாமி, "உன் நண்பன் உடலை ஆற்றங்கரையில் எரித்தாய்விட்டது" என்றார்.

*1891.* சுவாமியோடு நாராயணவரத்திலிருந்த போது கார்வேட் நகர சாத்துக் கொடிப் பழங்கள் கொண்டு வரச் சொல்லியிருந்தேன். அவற்றுள் சில பெரியவை, சில சிறியவை. பெரிய பழங்களைப் பள்ளிக்கூட மேற்

பார்வையாளருக்கும் சிறியவனவற்றைச் சுவாமிக்கும் தரலாமென்று நினைத்தேன். அந்த நொடியிலேயே சுவாமி ஏதோ சொல்லிவிட்டுத் தயாராக இருந்த உணவைக்கூடச் சாப்பிடாமல் போய்விட்டார். அவர் போவதை நான் தடுக்கவில்லை. உணவுக்குப் பின் ஆற்றுக்கு அப்புறமுள்ள ஒரு பளளிக்கூடத்தைப் பார்வையிடச் சென்றேன். என் வேலையாளிடமும் சேவகனிடமும் இரவு திரும்ப மாட்டே னென்றும் எனக்காக அவர்கள் காத்திருக்க வேண்டா மென்றும் சொன்னேன். என் வேலையை முடித்துக்கொண்டு சுவாமியைத் தேடிச் சென்றேன். கெம்பர பாளையத்தில் ஒரு நாவிதன் வீட்டில் அன்றிரவு சுவாமியைப் பார்த்தேன். நான் அவ்வீட்டிற்குள் நுழைந்தவுடன் சுவாமி ஏதோ சொன்னார். நான் அதைப் பொறுத்துக் கொண்டேன். அவ ருக்கு என்மீதிருந்த அன்பால் சிறிது நேரத்திற்குள் நான் படுத்துக் கொள்வதற்காகத் தம் கம்பளியை விரித்துப் போட்டார். அன்றிரவு அக்கம்பளி மீது படுத்து உறங் கினேன். "இப்போது ஏன் வந்தாய்? நாளைக் காலையில் வந்து என்னை உன்னுடன் வரச் சொல்லியிருந்தால் நான் வந்திருப்பேன்" என்று அவர் சொன்னார்.

1891. என் தாயாரும் சிறிய தாயாரும் என்னை மறு மணம் செய்து கொள்ளும்படி வற்புறுத்தினார்கள். எனக்கு அவ்வளவாக விருப்பமில்லை யென்றாலும் மறுமணம் செய்து கொள்ள உடன் பட்டேன். மணப்பந்தல் அமைத்துத் தாலியும் செய்து விட்டார்கள். அன்றைய மூன்றாம் நாள் திருமணத்தை நடத்த இருந்தார்கள். இதற்குச் சில நாட் களுக்கு முன் சுவாமியிடம் போயிருந்தேன். அவர் திருமணத்திற்கு ஒப்பாதவர் போல், "யார் உன்னை மணஞ் செய்துகொள்ள வேண்டாமென்று சொன்னது? மணஞ் செய்து கொண்டு ஆண்டுக்கொரு குழந்தை பெற்றுக் கொள்," என்றார். திருமணத்திற்குப் புறப்படும் போது

இது எனக்கு மிகத்தெளிவாக நினைவுவரவே, திருமணத்தை நிறுத்திவிட்டேன் — ஆம், என் குருவின் அருளினுல்தான்!

1891. வேலூரில் ஒரு பெரிய தவறு செய்துவிட்டேன். சில மாதங்களுக்குப் பிறகு சுவாமியைப் போய்ப் பார்த்தேன். அவர் நான் செய்ததைச் சுட்டிக்காட்டி அவ்வாறு செய்திருக்கக் கூடாதென்று கூறினுர்.

1891. சுவாமியிடம் ஒருமுறை சென்றிருந்தபோது என் பெரிய மகளை என் அம்மான் மகனுக்கு மணஞ் செய்விக்கலாமா என்று கேட்டேன். அவர் பதில் சொல்லவில்லை. நான் மீண்டும் மீண்டும் கேட்கவே, அவர், "உடன் பிறந்தாள் மகனுயிருந்தால் செய்யலாம்" என்ருர். உடன் பிறந்தாள் மகனுயிராவிட்டாலும் நெருக்கடியான நிலைமை ஏற்படவே, அம்மான் மகனுக்குக் தர உடன்பட வேண்டியதாயிற்று. இதனுல் எனக்கு ஏற்பட்டுள்ள துன்பம் எனக்கு மட்டுமே தெரியும்.

மார்ச், 1892. நாகலாபுரத்தில் தங்கியிருந்தேன். பதினெட்டு மைல் கடினமான பயணஞ்செய்து மதர்பாக்கு தாலுக்காவைச் சேர்ந்த பள்ளிக்கூடம் ஒன்றைப் பார்வையிட்டுவிட்டுத் திரும்பினேன். நான் தங்கியிருந்த வீட்டின் சொந்தக்காரர் (அவர் ஒரு கர்ணம்) சுவாமி மூன்று மைல் தொலைவிலுள்ள ஓர் ஊரில் இருப்பதாகச் சொன்னுர். உணவுக்குப் பிறகு, ஜட்காவில் அவ்வூருக்குச் சென்ருேம். எனக்கு ஒரு கவலையிருந்தது. அது நீங்க வேண்டுமென்று என் உள்ளத்தில் வேண்டிக்கொண்டேன். இதற்குப் பதில் உள்ளத்தால் தான் நான் அதைப் போக்கிக் கொள்ள முடியும் என்று கிடைத்தது. அப்போது புதியதாக நான் கற்றுக்கொண்ட பிராணுயாம முறையைப் பயிற்சி செய்யலாமா என்பதைப் பற்றியும் எண்ணிக் கொண்

டிருந்தேன். இதற்குச் சுவாமி, "பயிரிட்டாலும் நெல் பயிரிட வேண்டுமே யல்லாமல் கேழ்வரகு கம்பு பயிரிடுவதில் பிரயோஜனமில்லை" என்றார்.

அன்று நான் மிகவும் களைத்துப் போயிருந்ததால் அயர்ந்து தூங்கினேன். சுவாமி தம் வலது உள்ளங்கையால் என் தலைமீது பலமுறை தடவியதாகத் தெரிகிறது. அடுத்த நாள் காலை என்னுடன் வந்த கர்ணம் சுவாமி ஏன் அவ்வாறு செய்தார் என்று கேட்டபோது தான் இதைப் பற்றி எனக்குத் தெரியவந்தது.

நவம்பர், 1892 நவம்பர் 6-ஆந் தேதி மாலை, சுவாமியை நாராயணவரத்தில் பார்த்தேன். அன்று சந்திரகிரஹணம் என்று நினைக்கிறேன், வழக்கம் போல, சுவாமி பக்கத்தில் படுத்துறங்க விரும்பினேன். அவர் இதற்கு இசையாமல் என்னை எதிர் வீட்டுத் திண்ணையில் இறங்கச் சொன்னார்— "எதிர் வீடு மாமியார் வீடு அந்தத் திண்ணையில் படுத்துக் கொள் என்றார். இதன் பொருள் விளங்காததால் நான் தயங்கினேன். உரத்த குரலில் ஒரு முறைக்கு மேல், "அடே நான் சொன்னால் எப்போதும் தடுக்காதே. போ என்றால் போ, வா என்றால் வா, உட்கார் என்றால் உட்கார்" என்று நான் அவருக்கு உடனே கீழ்ப்படிய வேண்டுமென்ற நோக்கத்தோடு சொன்னார். தம் தாடியையும் மீசையையும் காட்டி, "எனக்கு எல்லாம் வெளுத்துப் போயிருக்கிறது. உனக்கு எல்லாம் கறுத்திருக்கிறது" என்றார்.

பிப்ரவரி, 1893. புத்தூரில் ஆரம்பப் பரிட்சை (Primary Examination) நடத்திக் கொண்டிருந்தேன், பிப்ரவரி 11 அல்லது 12 ஞாயிற்றுக்கிழமை ஆனதால் இதைப் பயன்படுத்திக்கொண்டு சென்னையில் பள்ளிக் கூடங்களின் மேற்பார்வையாளரைப் (Inspector of Schools) பார்க்கச் சென்றேன். அவருடன் பேசிக்

கொண்டிருக்கும் போது அவர் பெல்லாரி ஜில்லாவைச் சேர்ந்த சிலரை (Sub. Assistant Inspectors) மாற்றும் படி சிபார்சு செய்திருப்பதாகச் சொல்லி மாற்றல் இருந்தால் எனக்கு எந்த இடம் விருப்பம் என்று கேட்டார். மாற்றல் தேவையில்லை என்று குறிப்பிட்டேன், ஆனாலும் ஏதாவது ஒரு வட்டாரத்தைச் சொல்ல வேண்டியிருந்தது. நான் முதலாவதாகச் சென்னையையும் பிறகு வேலூரையும் குறிப்பிட்டேன். இந்தச் சமயத்தில் சுவாமி 1892 நவம்பர் 6-ஆந் தேதி சொன்னது, "எதிர் வீடு மாமியார் வீடு அந்தத் திண்ணையில் படுத்துக்கொள்" என்றது திடீரென எனக்கு நினைவு வந்தது. 1893 மே 27-ஆந் தேதி டைரக்டரிடமிருந்து மாற்றல் உத்தரவு வந்தது. ஐம்பதுக்கு மேற்பட்ட (Sub. Assistant Inspector) மாற்றல்களில் என்னை வேலூருக்கு மாற்றி இருந்தார்கள். அப்போது எனக்கிருந்த தலைமை அலுவலகம் வாலாஜாபேட்டை. வேலூர்—தொலைவாக இராமல் எதிர் வீடு என்றே சொல்ல வேண்டும். மேலும் வேலூரில் தான் என் மாமியார் வீடு இருந்தது என்பது குறிப்பிடத் தக்கது.

1893. நான் புத்தூரில் தங்கியிருந்தபோது, விடுமுறை பெற்று வந்திருந்தவர் ஒரு (Sub. Asst. Inspector—அவர் ஒரு ஐயங்கார். அவர் என்னைப் பார்க்க வந்தார், ஏழு மைல் தொலைவிலுள்ள கைலாச நாதர் கோனே என்ற நீர்வீழ்ச்சிக்குப் போனோம். திரும்புகையில் சுவாமியை நாராயணவரத்தில் சென்று பார்த்தோம், "ஆகவில்லை. ஆகவில்லையென்றால் எப்படியாகும்?" என்று என்னிடம் சொல்லிக்கொண்டு என் நண்பரும் உடன்வர என்னைத் தம்முடன் உணவு கொள்வதற்காக ஒரு கோமுட்டி அம்மையார் வீட்டுக்கு அழைத்துச் சென்றார். அந்த அம்மையார் நான் அவர்கள் வீட்டில் சாப்பிடமாட்டேன்

என்று சொன்னார். சுவாமி சாப்பிட்டு வெளியில் வந்து நான் இவ்வளவு வேற்றுமை பாராட்டினால் (யோகப் பயிற்சியில்) எவ்வாறு வெற்றி எதிர்பார்க்க முடியுமென்று கேட்டார்.

'யோகப்பயிற்சியில்' என்ற சொற்களைச் சந்தர்ப் பத்தை விளக்குவதற்காகச் சுவாமி சொன்ன சொற்க ளோடு நான் சேர்த்திருக்கிறேன்.

நவம்பர், 1894. அக்டோபர் 1894–ல் வேலூர் வட்டா ரம் போளூர் தாலுக்காவைச் சேர்ந்த கடலாடி என்ற ஊரில் தங்கியிருந்தேன். சுவாமி தம் உடலை நீத்ததாகக் கனுக் கண்டேன். ஆன்மீக முன்னேற்றம் மிகுதியாகாத நிலையில் சுவாமி என்னை விட்டுவிட்டுப் போய்விட்டார் என்று கனவில் மிகவும் அழுதேன். அடுத்த நாள் சுவாமியைப் பற்றி என் நண்பரொருவரைக் கேட்டெழுதினேன். சுவாமி நன்றாக இருப்பதாக அவர் பதிலெழுதினார். இரண்டு மூன்று நாட்கள் பொறுத்து அந்த நண்பர், சுவாமி சித்தி அடைந்து விட்டதாக ஒரு வதந்தி பரவியதாகவும் சுவாமியைப் பார்க்கப் பலர் சென்றதாகவும் அவர் நலமாயிருக்கப் பார்த்த தாகவும் மறுபடியும் எழுதினார். உடனே 1894 நவம்பர் ஒன்பதாந்தேதியிலிருந்து உரிமை ஓய்வு (Privilege Leave) பெற்றுக் கொண்டேன். சுவாமியைப் பார்க்க வாலாஜா பேட்டையிலிருந்து ஒரு நண்பர் என்னுடன் வரவிரும்பினார். அவருக்காக நான் இரண்டு முறை போவதை நிறுத்தினேன். மூன்றும் முறையும் அவர் வராது போகவே நான்மட்டும் நேராகச் சென்று சுவாமியுடன் சில நாட்கள் தங்கியிருந் தேன். என் உறவினர் சிலர் அங்கே வந்து சேர்ந்தார்கள். முதல் இரண்டு குழந்தைகளை இழந்திருந்த என் மூத்த மகள் கருவுற்றிருந்தாள். சுவாமி அவள் பின்பற்றுவதற்காகச் சில வழிகளைத் தெரிவித்தார். இந்த முறை பிறந்த குழந்தை

நன்றாக இருக்கிறது. நான் சுவாமியுடன் தங்கியிருந்த போது ஒரு நாள் அவர், "அவன் முகத்தில் விழிக்கக்கூட பிராப்தமில்லாமல் போய் விட்டதே. அவன் பிழைத்த பிழைப்பெல்லாம் வீணாய்ப் போய்விட்டதே" என்று சொல்லிக் கண்ணீர் விட்டார். அவர் சொன்னது எனக்கு அப்போது விளங்கவில்லை. அவரிடம் விடைபெற்றுச் சென்னை சென்றேன். நாராயணவரத்திலிருந்தும் சென்னையிலிருந்தும் அவரை வேலூருக்குத் திரும்பும் பொழுது பார்த்து விட்டுப் போகிறேன் என்று என் வாலாஜா பேட்டை நண்பருக்குக் கடிதம் எழுதினாலும் நான் அவரைப் பார்க்க முடியவில்லை. சென்னையிலிருந்து வேலூருக்கும் அங்கிருந்து கார்த்திகை தீபத்திற்காகத் திருவண்ணாமலைக்கும் சென்றேன். வேலூர் திரும்பியதும் என் வாலாஜாபேட்டை நண்பர் இறந்து விட்டதாகக் கடிதம் கிடைத்தது. அவர் எல்லோருக்கும் தெரிந்தவர். கார்வேட் நகர் ஜமீன்தாருக்குத் திவானாகவும் போலீஸ் இன்ஸ்பெக்டராகவும் கடைசியாக நீண்டகாலம் வாலாஜா முனிசிபாலிடிக்குத் துணைத் தலைவராகவும் இருந்தவர்.

சுவாமியை ஏதோ ஓர் ஊரில் பார்த்தேன். நன்செய் பயிர் செய்ய வேண்டிய தண்ணீருக்காக என் தோட்டத்தில் ஒரு குளம் தோண்டலாமா என்று நினைத்துக் கொண்டிருந்தேன். சுவாமி, "அடே, சுற்றுப் பக்கத்திலிருக்கிற நாகதாளியை நிவர்த்தி செய்துகொண்டு கட்டிக்கொள்ளலாம்" என்றார். குளம் எடுப்பதற்குக் குறித்த இடத்தைச் சுற்றி நாகதாளி இல்லாததால் சுவாமி சொன்னதன் பொருள் எனக்குத் தெளிவாகத் தெரியவில்லை. ஆழ்ந்து நினைத்துப் பார்த்ததில் திட்டமிட்டிருந்த வழியில் இருக்கக் கூடிய இடையூறுகளை நாகதாளி என்று சுவாமி சொல்லியிருக்கலாம் என்று தோன்றியது. உரிய காலத்தில் என்னுடன் அந்த நிலத்திற்கு உடையவராயிருந்தவர் ஜில்லா

கலெக்டெருக்கு மனுபோட்டார். முதலில் தடையிலிருந்தது. பிறகு அது நீக்கப்பட்டு, கோரியிருந்த உத்தரவு கிடைத்தது. குளம் தோண்டினேம், அது முனிசிபல் எல்லைக்குள் இருக்கிறது.

சில ஆண்டுகளுக்குப் பிறகு தண்ணீர்ப் பஞ்சம் ஏற்பட்டது. முனிசிபல் கவுன்சிலர் ஒருவர், நான் குளம் வெட்டியதால் சூர்யகுண்டா என்று சொல்லப்பட்ட நீர்த் தேக்கத்திற்குப்போகும் நீர் தடைப்பட்டது என்று கலெக்டரிடம் மனுசெய்து கொண்டார். ஊருக்குத் தண்ணீர் வசதிக்கான திட்டம் சில ஆண்டுகளுக்கு முன்புதான் ஏற்பட்டது. அதுவரையில் ஊருக்கு வேண்டிய தண்ணீர் சூர்யகுண்டாவிலிருந்துதான் எடுக்கப் பட்டது. இந்த மனுவைப்பற்றி எனக்குத் தெரியாது. அப்போது நான் சென்னையிலிருந்தேன். நான் ஊருக்குத் திரும்பிய ஒரு வாரத்திற்குப்பின் முனிசிபல் தலைவர் என் வீட்டிற்கு வந்து கலெக்டர் குளத்தைப் பற்றித் தம்மிடம் கூறி கவனிக்கும்படிச் சொன்னதாகக் கூறி என்னை குளத்தண்டை அழைத்துச் சென்ருர். குளத்திற்குத் தண்ணீர் கொண்டு வரும் கால்வாய் சூர்யகுண்டாவிற்கு நீர் பாய்ச்சும் பலகால்வாய்களில் ஒன்றென்பதையும் அக்கால்வாய் குளமிருந்த நிலத்தில் பெரும்பகுதி அல்லது முழுவதுமே சேர்ந்தது என்பதையும் நான் சுட்டிக்காட்டினேன். கலெக்டர் கொடுத்த உத்தரவையும் காட்டினேன். அவர் போய் விட்டார்.

கொஞ்ச காலத்திற்குப் பிறகு கலெக்டர் வந்தார். குளத்தைப்பற்றிய நிலைமையை விளக்குவதற்காக அவரிடம் சென்றேன். தமக்கும் அதற்கும் தொடர்பில்லை யென்றும் முனிசிபாலிடியார்தாம் இதில் அக்கரை கொள்ள வேண்டியவர்களென்றும் கலக்டர் கூறிஞர். ஆனல் யாரும் இதைப் பற்றி என்னிடம் ஒன்றும் கேட்கவில்லை. ஏறத்தாழ ஓர் ஆண்டிற்குப் பின் நான் கலெக்டரிடம் ஒரு முறை சென்றிருந்த போது குளம்பற்றிய விஷயம் என்ன ஆயிற்று

என்று கேட்டார். அதைப்பற்றிய பேச்சே எழவில்லை, என்று நான் சொன்னேன். இவ்வாருக இது முடிந்தது. என்னுடன் நிலத்துக்குச் சொந்தக் காரராயிருந்தவர் நான் முன்பு குறிப்பிட்டபடி உத்தரவு வாங்காதிருந்தால் என் நிலைமை ஆபத்தாயிருந்திருக்கும். ஏனெனில் நானே முனிசிபல் கவுன்சிலராகவும் ஆறுமாதங்கள் முனிசிபல் கவுன்சில் தலைவராகவும் இதற்குமுன் இருந்திருக்கிறேன்.

1895. சுவாமியோடு நான் தங்கியிருந்தபோது அவர், வலது கையால் தம் வயிற்றின் இடப்பக்கத்தையும் வலப் பக்கத்தையும் குத்திக்கொண்டு இரக்கம் உண்டாகும் வகையில் ஏதோ சொல்லிக்கொண்டார். இது எனக்கு விளங்க வில்லை. ஆனல் வேலூர் திரும்பியதும் என் மகளுக்கு எளிதாகப் பிள்ளை பேறு இருந்ததாகவும் குழந்தை இறந்தே பிறந்ததாகவும் அறிந்தேன்.

ஜனவரி, 1895. பள்ளிக்கூட உதவி மேற்பார்வையாளர் (Asst. Inspector of Schools) பி. ஏ. பட்டம் பெற்ற பிராமணர். புத்தூரில் ஆரம்ப வகுப்புத் தேர்வு நடத்துவதற்காக என்னை உதவிக் கழைத்தார். சுவாமியைப் பார்ப்பதற்கு இது ஒரு வாய்ப்பு எனக் கருதினேன். அங்கே சென்றபோது அவர் எட்டு மைலுக்கு அப்பாலிருப்பதாகக் கேள்விப் பட்டேன். ஞாயிறு மாலை நாலு மணிக்குத் தேர்வு முடிந்தது. அடுத்த நாள் காலை வேலூருக்குத் திரும்ப வேண்டியிருந்ததால் சுவாமியைப் பார்க்க வேண்டுமென்ற எண்ணத்தை விட்டுவிட்டேன். இந்நிலையில் (Assistant Inspector) அவர்களே ஜட்கா வண்டியில் சென்று சுவாமியைப் பார்த்துவிட்டு இரவு திரும்பிவிடலாமென்ருர். அவ்வாறே நாங்கள் புறப்பட்டு ஆறரை மணிக்குப் போய்ச் சேர்ந்தோம். பாதை அருகில் ஜட்கா வண்டியை நிறுத்திவிட்டு ஆற்றைக் கடந்து ஊருக்குச் சென்ருேம். அவர் திண்ணையில் படுத்திருப்பதைப்

பார்த்தோம். அவர் சிஷ்யர்கள் எங்களுக்கு உணவு ஏற்பாடு செய்வதாகச் சொன்னூர்கள். நாங்கள் உடனே திரும்ப வேண்டியிருந்ததால் வேண்டாமென்று சொல்லிவிட்டோம். சற்று நேரம் கழித்து சுவாமி எழுந்து உட்கார்ந்து கொண்டு என்னைப்பார்த்து, "அப்பா, பொறுத்தவர்களில் உன்னைப்போல பொறுத்தவர்கள் நான் கண்டதில்லை. உனக்குத் தேசத்தாரெல்லாமிருந்து ஓத்தாசை செய்ய, நாட்டாரெல்லாமிருந்து ஒத்தாசை செய்ய" என்று சொன்னூர் தேசத்தார், நாட்டார் என்பதன் பொருள் இன்னும் எனக்கு விளங்கவில்லை. (Asst. Inspector) உதவி மேற்பார்வையாளரைப் பார்த்து அவர் பேசியபேச்சு அவர் (Inspector?) கடுமையான மனிதன் என்பதைக் காட்டிற்று. சுவாமி அவ்வப்போது புன் சிரிப்போடு பேசாம விருந்தால் தம் நிலை மிகவும் மோசமாயிருந்திருக்கும் என்ருர். சுவாமியைப் பார்க்கப் புறப்படும்போது நான் கம்பளிச் சட்டை, கம்பளிக் கோட்டு சால்வை இவற்றைப் போட்டுக் கொள்வதைப் பார்த்து இரவு அங்கேயே தங்கி விட எண்ணமா என்று கேட்டார். நான் சுவாமியோடு தங்கவேண்டாமென்ரே வேண்டுமென்ரே எவ்வகையிலும் கருதவில்லை யென்றேன். அவர் பருத்தி உடையோடிருந் தார். இரவு நேரமாகி விடவே நாங்கள் திரும்புவதற்குச் சுவாமி உத்தரவு தரவில்லை. எனவே உணவின்றி அங்கேயே உறங்கினோம். ஜனவரி சமயத்தில் அந்தப் பக்கங்களில் குளிர் மிகுதியாதலால் சால்வை என் நண்பருக்கு உதவியா யிருந்தது.

1895 ஜனவரி 6. இந்நாள் பற்றி அடியிற்கண்ட குறிப்பு என் நாட் குறிப்புப் புத்தகத்தில் இருக்கிறது.

W. P. சாமிதாஸ் முதலியார் அனுப்பிய ஜட்காவில் இன்று காலை ஒன்பது மணிக்கு ஹிந்து யூனியன் பள்ளிக் கூடத்திற்குப் போனேன். அங்கே கூடியிருந்தவர்கள் A. ராஜு முதலியார், தாசில்தார் V. மாசிலாமணி

முதலியார், சப்ரிஜிஸ்ட்ரார் P. சாமிதாஸ் முதலியார் முதலி யோர். கண்டிராக்டர் ப. மாசிலாமணி முதலியார் தலைமை தாங்கினார். வேலூரில் பிரம்மஞான சங்கத்தின் (Theosophical Society) கிளைச் சங்கத்தை சிவயோகி (Pleader) அவர்களைத் தலைவராகவும், தேவாஜிராவ் (Pleader) அவர்களைச் செயலாளராகவும் கொண்டு மறுபடியும் துவக்குவது என முழுமனதாக முடிவு செய்யப் பட்டது. கூட்டத்திற்குப் பிறகு இரண்டு மாசிலாமணி முதலியார் களும் நானும் ராஜு முதலியாருடன் அவர் வீட்டுக்குப் போனோம். எல்லோருமாகப் பேசிக்கொண்டிருக்கும்போது, ராஜு முதலியார் தாம் பின் வருமாறு வெள்ளிக்கிழமை (ஜனவரி 4) கனவு கண்டதாகக் கூறினார். நிறைய மக்கள் கூடியிருந்தனர். அவர்களுள் நான் ஒருவன். மற்ற வர்கள் பெயர் அவருக்குத் தெரியவில்லை. ராஜு முதலியார் வந்து அங்கிருந்தவர்கள் முன் ஓர் இளைஞர் நிற்பதைக் கண்டார். இளைஞர் இடுப்பைச் சுற்றித் துணி அணிந்து தலைக்கு முக்காடு போட்டிருந்ததாகத் தோன்றியது. முகத் தில் திருநீறு பூசப்பட்டிருந்தது. இராஜு முதலியார் அவரைச் சரியாகப் பார்க்கவில்லை. அக்கரையற்றுகூட இருந்தார். அவர் உட்கார்ந்தவுடன் அவர் பக்கமிருந்த யாரோ ஒருவர் தங்கள் முன்னிருந்த இளைஞர்தாம் மலை யுச்சியில் இருந்த சுவாமி என்றார். உடனே முதலியார் எழுந்து அவரடி விழுந்து வணங்கினார். சுவாமி என்னையும் பெயர் தெரியாத மற்றவரையும் அணைத்துக் கொண்டார். சுவாமி பிறகு எனக்குப் பிரசாதம் கொடுத்தார். இராஜு முதலியாரிடம் கர்ப்பூரமோ, சாம்பிராணியோ கொடுத்து அவரைப் பார்த்து, "மஹாத்மாக்கள் பிரம்மஞான சங்கத் தில் கலந்து கொள்ளுகிறார்கள் என்பதைப்பற்றி யாதொரு ஐயமும் கொள்ளக்கூடாது. சங்கத்திற்குப் பல இடை யூறுகள் ஏற்படும். என்றாலும் அது நிலைத்திருக்கும். பெஸண்ட் அம்மையார் உறுதியாயிருப்பார்..." என்றார்.

**1899** செப்டம்பர். **1899** ஜுலை 28 முதல் இரண்டு ஆண்டுகள் நீண்ட உரிமை ஓய்வு (**Furlough**) பெற்றேன். செப்டம்பர் மாதத்தில் சுவாமியைப் பார்க்க ஒரு நண்பருடன் சென்றிருந்தேன். அவரை நாராயணவரத்தில் பார்த்தோம். தமக்கு முடியெல்லாம் வெளுத்திருக்க இன்னும் சில கறுப்பு முடி எனக்கிருக்கிறது என்று என்னிடம் சொன்னார். நீக்க வேண்டிய சில தூய்மையற்ற எண்ணங்கள் இன்னும் என்னிடமிருந்தன என்று அவர் சொன்னதாக உணர்ந்தேன்.

நீண்ட விடுமுறை பெற்று இறுதியில் வேலையிலிருந்து ஓய்வுபெற நான் நினைத்ததன் நோக்கம் சுவாமியை என்னுடன் வைத்திருக்க வேண்டுமென்பதே. இதற்காக அவருக்கென தனியாக ஒரு வீடு என் தோட்டத்தில் கட்டினேன். அவரை அழைத்துச் செல்வதற்குமுன் சில ஏற்பாடுகள் செய்வதற்காக அவரை அழைத்துச் செல்வதைக் கடத்தி வந்தேன். A. இராஜு முதலியார் உண்மையும் நேர்மையும் வாய்ந்தவர். அரசாங்கத்திற்கு உண்மையாக வேலை செய்து வந்தவர். இத்தகைய நல்ல பண்புகள் வாய்ந்தவராயிருந்ததால் அவரிடம் எனக்கு மிகுந்த மதிப்பு இருந்தது. ஊழல்களை ஒழிக்க வேண்டுமென்பது அவரது பெருவிருப்பங்களுள் ஒன்று. கார்வேட் நகர ஜமீன்தாரியின் மானேஜராக இருந்தபோது அங்கும், சிறப்பாகத் திருத்தணிகை கோவில் பற்றியும் அவர் செய்த முயற்சிகள் பாராட்டத்தக்கன. ஆனால் நல்ல கொள்கையைப் பின்பற்றுவதில் சற்று வரம்பு கடந்து செல்வார். இது அவர் குறையென்று கருதினேன். பொதுவாக எப்படி ஊழல்களை ஒழிக்கலாம் என்பதைப் பற்றியே அவர் நினைத்துக் கொண்டிருப்பார். இந்த நினைப்போடு அவர் சுவாமி முன்நிற்க, சுவாமி "இவன்தான் பாவ நாசனனுமடா" என்று சொன்

ஞர். "பாவ நாசன்" என்பது சிவனுடைய பெயர். திரு வாசகத்தில் "பாவ நாச உன் பாதமே யல்லால் பற்று நான் மற்றிலேன் கண்டாய்" என்று வருவது காண்க.

வேலூர் தாசில்தார் காலஞ்சென்ற A. இராஜு நாயுடு சுவாமியைப் பார்க்க வேண்டுமென்ருர். நாங்களிருவரும் சென்று அவரை நாராயணவரத்தில் பார்த்தோம். பெரவ ளூரிலிருந்து வந்த கண்ட்ராக்டர் ஒருவர் சுவாமி சாப்பிடு வதற்காக மிகச் சிறப்பாக உணவு செய்து அவரை அழைக்க முயன்றும் சுவாமி என் வேண்டுகோளுக்கிரங்கி எங்கள் இருக்கைக்கு வந்தார். என்னேடு வரும்போது புறப்பட்ட இடத்திற்கும் நாங்கள் தங்கியிருந்த இடத் திற்கும் இடையிலிருந்த ஒவ்வொரு வீட்டையும் காட்டி அங்குத் தாம் சாப்பிட வேண்டுமா என்று என்னைக் கேட் டார். கடைசியில் எங்கள் இருக்கைக்கு வந்தவுடன் சாப்பிட்டுவிட்டு என்னிடம் "ஏனடா என்னை இங்கேயே இருக்கச் சொல்லுகிருய். நான் சாப்பிடுகிறது சாப்பா டல்லவா? ஒரு நாளைக்கு ஒரு வீட்டில், இன்னெரு நாளைக்கு இன்னெரு வீட்டில்" என்று சொன்ஞர். முன்பு கூறியபடி, என் நோக்கம் அவரை வேலூருக்கு அழைத்துச் செல்லு முன் சில ஏற்பாடுகள் செய்ய வேண்டும் என்பது. சந்தா வசூல் செய்வது எனக்கு விருப்பமில்லையாதலால், அவரைப் பார்க்க வருபவர்கள் அனைவருக்கும் நானே உணவளிக்க முடியுமா என்பதைப்பற்றிப் பெரிதும் நினைக்க வேண்டி யிருந்தது.

இப்படி முடிவு செய்ய இயலாத நிலையிலிருக்கும்போது சுவாமி என் கனவில் வந்து, என் வீட்டருகில் வந்தும் உள்ளே நுழையாது திரும்பி வேறு வழியாகச் சென்று ஒரு கோயிலருகே இருந்த மண்டபத்தில் படுத்துக் கொண்டார். இந்தக் கோயில் நாராயணவரம் அவனுசி அம்மன் கோயிலைப் போன்றிருந்தது. இந்தக் கனவு, முடிவு எப்படி இருக்கும்

என்பதைப் பெரும்பாலும் உறுதி செய்தது என்றாலும் இந்தக் கனவை—வெறும் கனவு—பொருளற்றது என்று நினைத்தேன். இதற்குக் காரணம் சுவாமியிடம் எனக்கு உண்மையான தன்னலமற்ற அன்பிருந்ததும் அவரை வேலூருக்கு அழைத்துச் செல்ல வேண்டும் என்ற அளவு கடந்த விருப்பமுமேயாம்.

**1902.** வேலூரில் சுவாமி என் கனவில் தோன்றித் தம்மை வேலூர் அழைத்துச் செல்ல வேண்டுமென்ற என் எண்ணத்தை விட்டுவிட வேண்டுமென்று சொல்லி என் இரண்டு கைகளையும் சேர்த்து வைக்கச் சொன்னார். நான் அவ்வாறு செய்தவுடன் தம் இரு கைகளால் என் கைகளில் முதலில் மண்ணையும் பிறகு சிறு கற்களையும் போட்டார். இந்தச் சமயத்தில் நான் வேலையிலிருந்து ஓய்வு பெற்றிருந்தேன். இந்தக் கனவு சுவாமி நாராயணவரத்தில் சமாதி அடைவாரென்று குறிப்பிட்டதாக முடிவு செய்தேன். எனினும் அவரை வேலூர் அழைத்துச் செல்லலாம் என்ற நம்பிக்கை என் மனத்தைவிட்டு அகலவில்லை.

ஜுலை **1902.** சென்னையில் குறிப்பிட்ட ஒரு வேலையும் இல்லையெனினும் அங்கே கட்டாயம் போக வேண்டுமென்று ஜுலை 22-ஆந் தேதி சமயத்தில் மிகவும் விரும்பினேன். சுவாமி அங்கே இருப்பதாகவும் எப்படியோ செய்தி கிடைத்தது. என் உறவினர் என்னுடன் வர விரும்பினார்கள். சுவாமி சென்னையிலிருந்தால் அவர்களுக்குக் கடிதமெழுதுவதாகச் சொன்னேன். சென்னையில், காலஞ்சென்ற பார்த்தசாரதி நாயுடுவின் தோட்டத்தில் சுவாமியைப் பார்த்தேன். என் உறவினருக்குக் கடிதமெழுதினேன். அவர்களை, சிறப்பாக என் தாயாரை, சுவாமி மிக அன்பாக வரவேற்றார். அங்கே இரண்டு மூன்று நாட்கள் தங்கி, வேலூருக்குத் திரும்பினேன்.

ஆகஸ்ட் பத்தாந்தேதி மாலை என்று நினைக்கிறேன் அதற்கு முன் நாள் சுவாமி உடல் நீத்தார் என்று புத்தூரி லிருந்த என் நண்பர் ஒருவர் எழுதிய கார்டு கிடைத்தது. அதற்குமுன் இருமுறை சுவாமி நிர்வாணம் அடைந்த தாகக் கனாக்கண்டு அழுதேனெனினும் இந்தக் கார்டு கிடைத்தபோது சுவாமி நம்மை விட்டு மறைந்ததாக ஒரு சிறிதும் தோன்றவில்லை. நாராயணவரம் போவதற்குள் எல்லாம் முடிந்துவிடும் என்று நான் அங்கே போகவில்லை. தந்தி கிடைத்திருந்தால் கட்டாயம் சென்றிருப்பேன். சுவாமி யோடு எனக்கிருந்த அனுபவங்களைப்பற்றிய இவ்வுரையை முடிக்கு முன் அவரைப்பற்றி நான் கண்ட நான்கு கனாக் களைப்பற்றியும் கல்வி இலாகாத்தலைவருக்கு (D. P. I.) உதவி — (P. A.) ஆக இருந்து பின்னர் காலமான ஒருவர் சொன்னதையும் இங்கே குறிப்பிட வேண்டுகிறேன்.

*1881.* சித்தூரில் நான் பள்ளிக்கூட ஆசிரியராக இருந்தபோது சுவாமி என் கனவில் தோன்றி, "உன்னை நீ தரிசிக்க வேண்டுமா?" என்று கேட்டார். நான் "ஆம்" என்றேன். "கொஞ்சம் பால் கொண்டு வா" என்றார். என் வீட்டிற்குச் சென்று பால் கேட்டேன். நான் வீட்டை விட்டுப் போய்விட்டதால், பால் தர முடியாதென்று என் உறவினர் சொன்னார்கள். வேறு எங்கேயோ பால் பெற்று சுவாமியிடம் எடுத்துச் சென்றேன். மாடி வீட்டில் மாடிக்கு அழைத்துச் சென்று என்னை உட்காரச் சொன்னார். அவ்வாறே செய்தேன். என் தலைமீது பால் ஊற்றி என் னைப் பார்க்கச் சொன்னார். நான் பார்க்க முடியவில்லை என்ற தற்கு மறுபடியும் அங்கே போகும்போது பார்க்கமுடியு மென்றார்.

வேறொரு கனவில் தோன்றி, "தீபம் வைத்த பிறகு மலை ஏறினால் நானிருக்கிற நிலையை நீ அறியலாம்" என்றார்.

1886-ல் நான் அவஞ்சியில் முகாமிருந்தபோது நன்ருக க்ஷவரம் செய்து கொண்ட முகத்தோடு மற்ெருரு கனவில் தோன்றினர். இந்தக் கனவு ஏதோ கெடுதியைக் குறிப்ப தாக எண்ணினேன். பிறகு, அவருடனிருந்த கிழவனர் இறந்து விட்டதாகக் கேள்விப்பட்டேன். இந்தக் கனவுக் குப்பின் சுவாமியைப் பார்த்தபோது அவர் மெய்யாகவே முகக்ஷவரம் செய்து கொண்டிருந்தார்.

1911 ஜனவரி, 3. 1910 டிசம்பர் 25-ந் தேதி வேலூரி லிருந்து புறப்பட்டு அன்றிரவு சென்னையில் தங்கி, பிரம்ம ஞான சங்கத்தின் கூட்டத்திற்காக 26-ஆம் தேதி பகல் இரண்டு மணிக்கு அடையாறு போய்ச் சேர்ந்தேன். சென்னைக்கு ஜனவரி 2-ஆம் தேதி திரும்பி அங்கே இரண்டு நாட்கள் தங்கினேன். மூன்ருந் தேதி இரவு ஒரு கனக் கண்டேன். கனவில் வேலூருக்கருகில் பௌர்ணமி பூஜை நடக்கிற இடத்தில் நானும் பெஸன்ட் அம்மையார், (Retired Asst Inspector of Schools). சிங்காரவேலு முதலியார், F.T.S. வேறு இரண்டொருவரும் இருந்தோம். அடை யாற்றிலிருந்து கொண்டு பௌணர்மி பூஜை செய்ய பெஸண்ட் அம்மையாரை உத்தரவு கேட்டேன். அம்மை யார் உத்தரவு தர மறுத்தார். சற்றுப் பொறுத்து கண் களில் நீர் பெருக, நான் இதுபற்றி உண்மையாக ஊக்கம் கொண்டிருந்தேனு என்று கேட்டார். நான் "இதுபற்றி எனக்கு அக்கறை இல்லை" என்று பதில் சொன்னேன். பிறகு அவர், "புத்தகம் எவ்வளவு தூரம் முடிந்திருக் கிறது?" என்று கேட்டார். எந்தப் புத்தகம் என்று தெரி யாததால் நான் ஒன்றும் பதில் சொல்லவில்லை. பிறகு நான் விழித்துக் கொண்டேன். அப்போது காலை மணி மூன்று. நாலாந்தேதி இது பற்றி நினைக்கத் தொடங்கினேன். புத்தகம் என்றது அச்சாகிக் கொண்டிருந்த சுவாமியின்

வரலாறு என்று தோன்றிற்று. காலையில் சென்று புரசை வாக்கம் சென்று திரு. பக்தவத்சலம் பிள்ளையிடம் இதைச் சொன்னேன். அவரும் நான் நினைத்தேவாறே நினைத்தார். மேலும், ஸ்ரீமான் சுரைக்காய் சுவாமி சமாஜத்தார் ஒவ்வொரு மாதமும் பௌர்ணமி யன்று பௌர்ணமி பூஜை செய்து வந்ததாகவும் எல்லோரும் கூடுவதற்கு ஒரு பொது இடம் இல்லாததால் அது நிறுத்தி வைக்கப்பட்டதாகவும் சொன்னார்.

*1881:* முன்பு குறிப்பிட்ட கல்வி இலாகாத் தலைவரின் உதவி P. A. தம்மைச் சுவாமியிடம் அழைத்துப் போகச் சொன்னார். நான் அழைத்துச் செல்வதாக உறுதி தந்தேன். சுவாமியே சென்னைக்கு வரவே, பெரிய கூட்டத்தோடு சுவாமி சிந்தாதிரிப்பேட்டையில் தங்கியிருந்த வீட்டிற்கு இந்த நண்பர் வந்தார். உண்பதற்கு முன் கை கால்கள் அலம்புவதற்காகச் சுவாமி வாசலுக்குச் சென்ற போது இந்த நண்பரைச் சுட்டிக்காட்டித் தம்மிடம் வரும்படிச் சொன்னார். நண்பர் அவ்வாறே வந்தார். அவருக்கு அங்கிருந்த துளசிச் செடியைக் காட்டி அது என்னவென்று தெரியுமா என்று சுவாமி கேட்டார். தெரியும் என்று நண்பர் சொல்லவே, அவ்வகையைச் சேர்ந்த பல செடிகள் அவர் வீட்டில் இல்லையா என்று கேட்டார். வரிசையாகத் துளசிச் செடிகள் இருந்த அவர் வீட்டு வாசலைப்பற்றிய விவரங்களைச் சுவாமி சொன்னார். நண்பர், விவரங்கள் மிகப் பொருத்தமாக இருக்கக் கண்டு திடுக்கிட்டார். சுவாமி சொன்ன விவரங்கள் சரியென்றார். அவர் மனைவி பல ஆண்டுகளாகத் தம்மைப் பாம்பு கடிப்பதாக அச்சம் உண்டாக்கும் கனவுகள் அடிக்கடி காண்பதால் உடல் நலங்குன்றி யிருந்தார். இதைப்பற்றித் தான் அவர் சுவாமியைக் காண விரும்பியது. சுவாமி "இதன் இலைகள்

சிலவற்றைச் சர்க்கரையோடு சேர்த்துக் கொடுத்தால, பாம்புகள் கடிக்கமாட்டா” என்றார். வந்த நண்பருக்கு மிக்க மகிழ்ச்சி ஏற்பட்டது. சுவாமி தம் எண்ணங்களை யும் தம்மைப்பற்றிய விவரங்களையும் சொன்னதிலிருந்து அவர் சொன்ன மருந்தே ஏற்றது என்ற நம்பிக்கை உண்டாகவே சுவாமி சொன்னபடியே செய்தார். அன்று முதல் இத்தகைய கனவுகள் நின்றுவிட அந்த அம்மையார் உடல் நலமடைந்தார்.

(கையொப்பம்) V. நாதமுனி முதலியார்.



(Small Cause Court Bench Clerk)

# V. எதிராஜுலு நாயுடு

## அவர்கள் அனுபவங்கள்.

சுரைக்காய் சுவாமியிடம் எனக்கு ஏற்பட்ட சில அனுபவங்களைச் சுவாமி கைங்கர்யச் சபைத்தலைவர் உத்தரவுபடி இங்கே தருகிறேன். இவைகளின் பொருள் தானாகவே விளங்கும்.

1871-ஆம் ஆண்டில் என் அம்மான் வீராசாமி நாயுடு கார்வேட் நகரத்தின் தாசில்தாராக இருந்த போது திருப்பதிக்கு வடக்கேயுள்ள கடப்பை ஜில்லாவைச் சேர்ந்த சித்த கோனையிலிருந்து எப்போதாவது சுவாமி ஜமீந்தாரி எல்லைக்குள் வருவதாகக் கேள்விப்பட்டிருக்கிறேன். சிவராத்திரி விழாக் காலங்களில் மட்டும் சித்த கோனைக்கு மக்கள் செல்வது வழக்கம். உயர்ந்த பாறைகளிடையே ஆழமான பள்ளத்தாக்குகளில் நீண்டு வளர்ந்த மரங்கள் விளங்கும் அழகான தோற்றமுள்ள இந்தக் கோனையுள்ள இடத்தில் ஒன்பது சித்தர்களுடைய கோயிலுள்ளது.

மஹாத்மாக்கள் இருக்கிற இடங்களுக்கு என் தகப்பனார் செல்வது வழக்கம். தாம் போகும்போது அவர் என்னையும் தம்முடன் அழைத்துச் செல்வார்.

மஹாத்மாக்களின் பெருமையைச் சிந்தித்துக் கொண்டிருப்பது விரைவில் எனக்கு வழக்கமாகிவிட்டது. சிறப்பாக என் அம்மான் புகழ்ந்துவந்த சுரைக்காய் சுவாமியைப் பற்றிச் சிந்திப்பேன்.

1889-ஆம் ஆண்டு ஒரு நாள் இரவு சுமார் 12 மணிக்கு என் தோட்டக்காரனை அழைப்பதற்காகத் தோட்டத்

திற்குச் சென்றேன். என் வீட்டு வாசற்படியருகில் ஒரு நல்ல பாம்பு என்னை, வலக்காலில் கடித்துவிட்டது. என் வழக்கத்தின்படி சுவாமியைப்பற்றி நினைப்பது, அவரை வணங்குவதைத் தவிர வேறொன்றும் நான் எண்ணவில்லை. அப்பொழுது யாரோ ஒரு மஹாத்மா என் கண்முன் தோன்றினார். அவர் என்னைத் தோளில் தட்டிக்கொடுத்து வாழ்த்தினார். இவ்வாறு அன்றிரவு இருமுறை நடந்தது. சூரியனைக் கண்ட பனிபோல எனக்கு வந்த பேரிடர் விலகி விட்டது. நேராகப் பார்ப்பதற்கு முன்பே சுவாமியிடத்தில் எனக்கு அன்பும் பணிவும் ஏற்பட்டன.

என் இரண்டாவது சகோதரி M. கனகம்மா யாரோ ஒரு மஹாத்மா என்னை வந்து வாழ்த்துவதாகக் கனக் கண்டார். சுவாமி என் வீட்டுக்கு வந்த அன்று என் சகோதரி அவரைப் பார்த்து அவர் கனவில் பார்த்தபடியே இருக்கக் கண்டு வியப்படைந்தார்.

1896-ஆம் ஆண்டு நான் குளித்துக் கொண்டிருக்கும் போது யாரோ என்னைப் பெயர் சொல்லிக் கூப்பிட்டார். கூப்பிட்டவர் என் நண்பர் M. இராமைய நாயுடு. புத்தூர் சுவாமி, K. பார்த்தசாரதி நாயுடு வீட்டில் வந்திருப்பதாகவும் என்னை அழைத்துவரச் சொன்னதாகவும் சொன்னார். சுவாமிக்கு என்னை அறிமுகப்படுத்தும்படி சென்னையில் P.W.D. யில் இருந்த என் நண்பர் D. ஆராவமுது நாயுடுவை அடிக்கடி கேட்டிருந்தேன். அவர் இந்தச் சமயத்தில் சுவாமி அருகே இருக்கவே என்னைப்பற்றியும் நான் சுவாமியைப் பார்க்கக் கொண்டிருந்த ஆவலைப்பற்றியும் நினைத்தார். உடனே சுவாமி, "போய் வேண்டுமானால் அவரை அழைத்து வா" என்றார். முதலில் இராமைய நாயுடு வேடிக்கையாக இவ்வாறு சொன்னதாக நினைத்தேன். சுமார் பதினைந்து நிமிஷங்கள் நாங்கள் வாதாடினோம். அவர் சத்தியம் செய்து, "நான் பொய் சொல்லவில்லை

உண்மையாகவே சொல்லுகிறேன். D. ஆராவமுது நாயுடு உங்களை அழைத்துவரச் சொன்னார்" என்றார். என் நண்பரோடு சுவாமியிருந்த இடத்திற்குப் போனேன். நேராக முதன் முறை பார்க்கவே அவரை வலம் வந்து அவர் எதிரில் நின்று தியானம் செய்யத் தொடங்கினேன். நான் இவ்வாறு தொடங்கியவுடன் சுவாமி கண்களை மூடிக் கொண்டு உறங்குவது போலிருந்தார். திடீரென்று கண்களைத் திறந்துகொண்டு என்னைப் பார்த்து "இந்த வேலை உனக்குத் தருகிறேன்" என்றார். தம்மை இவ்வாறு நான் எப்போதும் தியானம் செய்வதன் மூலம் தொண்டு செய்ய வேண்டும் என்று சுவாமி சொன்னதாக நான் உணர்ந்தேன்.

அதன் பிறகு மஹாத்மா எங்கிருந்தாலும் நான் அங்கே செல்வது வழக்கமாய்விட்டது. சிறப்பாக, விடுமுறை நாட்களில் நான் நாராயணவரம் சென்று அதன் அருகிலுள்ள ஊர்களுக்கும் காடுகளுக்கும் செல்வது வழக்கம். பல விந்தைகள் நிகழ்ந்தன. அவற்றையெல்லாம் நான் குறிப்பிடுவதற்கில்லை. ஒன்றிரண்டை மட்டும் குறிப்பிடுகிறேன். 1900–ல் ஒரு நாள் சுவாமியைப் பார்க்க நான் நாராயணவரம் சென்றபோது அவர் அங்கே இல்லை. பன்னிரண்டு மைல்களுக்கு அப்பாலுள்ள நின்ரு என்ற ஊரில் அவரிருப்பதாகக் கேள்விப்பட்டேன். அவ்வூருக்குச் செல்லும் பாதை மலைகள் சூழ்ந்த காட்டு வழியாக இருந்தது. சுவாமி இருக்கும் இடம் தெரிந்தவுடனே அவரைப் போய்ப் பார்த்து வணங்க வேண்டும் என்ற விருப்பம் என்னைப் பற்றிக் கொண்டது. நாராயணவரத்திலிருந்து நின்ரு செல்லப் புறப்படும்போது மாலை மணி நாலு. நாராயணவரத்திலிருந்து ஒரு மைல் சென்றவுடன் சுவாமியைப் பார்த்துவிட்டு வரும் B. நம்மைய நாயுடு, K. பார்த்தசாரதி நாயுடு, D. ஆராவமுது நாயுடு ஆகிய என் நண்பர்களைப் பார்த்தேன். வழி இடக்காயிருந்ததால் அந்த நேரத்தில் நான் போவது

ஏற்றதல்ல என்று அவர்கள் சொன்னார்கள். அவர்கள் சொற்படி நான் நாராயணவரம் திரும்பினேன். இதற்குள் மணி ஐந்தாகிவிட்டது. என் நண்பர்கள் எனக்கு ஒரு வண்டி ஏற்பாடு செய்ய முயன்றார்கள். ஆனால் வண்டி கிடைக்கவில்லை. அங்கேயே இருக்க என் மனம் இடம் தரவில்லை என்று என் நண்பர்களிடம் சொல்லிவிட்டு மறுபடியும் நாராயணவரத்திலிருந்து நடையாகப் புறப் பட்டேன். இரவின் இருள் மிகுதியால் என்முன் என்ன இருக்கிறது என்றே தெரியவில்லை. மழையும் தூறிக் கொண்டிருந்தது. என்றால் இயன்ற மட்டில் நடந்து கொண்டிருந்தேன். சுமார் ஒன்பது மணிக்கு நான் காட்டு வழியாகப் போய்க் கொண்டிருக்கும்போது வழி தவறி விட்டது. நான் மிகவும் கலங்கி உலகத்தை விட்டே தொலைந்து போனதாக நினைத்தேன். அந்த இரவில் போக வேண்டாமென்று சுவாமியின் சீடர்கள் சொல்ல அவர்கள் பேச்சைக் கேட்காது போனதற்காகச் சுவாமி என்னை மன்னிக்க வேண்டுமென்று வேண்டிக் கொண்டேன். திடீரென்று ஒரு பெரிய வெளிச்சம் தோன்றி சுமார் பதினைந்து நிமிஷங்கள் இருந்தது. இதனால் வழி தெரியவே சுமார் ஒரு மைல் நடந்தேன். மறுபடியும் இருள் சூழ்ந்து கொள்ளவே எனக்கு நடப்பது தொல்லையாயிற்று. அதே வெளிச்சம் மறுபடியும் இரண்டு முறை என் வழியில் தோன்றியது. பதினொரு மணிக்கு நல்லபடியே நான் சுவாமி யிடம் போய்ச் சேர்ந்தேன். அந்த இருள்மிகுந்த இரவில் தனியாக நான் அவ்வளவு நேரம் பொறுத்து ஊர் போய்ச் சேர்ந்ததைப் பார்த்து மிகவும் வியப்படைந்தார்கள்.

சுவாமி காலில் விழுந்து வணங்கி அவர்முன் நின்றேன். அவர் என்னை மகிழ்ச்சியோடு பார்த்து இரத்தம் கசிந்து கொண்டிருந்த என் கால்களைக் கழுவத் தம்முடனிருந்த புருஷோத்தம நாயுடுவைத் தண்ணீர் தரச் சொன்னார்.

உணவுக்குப்பின் சுவாமியோடேயே இருந்தேன். அடுத்த நாள் விடியற்காலை ஐந்து மணிக்குச் சுவாமி என்னை அருகிருந்த ஒரு குளத்திற்கு அழைத்துப் போய் குளிக்கச் சொன்னார். குளித்தவுடன் வலியும் இளைப்பும் போய் விட்டன. அது முதற்கொண்டு சுவாமியை ஒரு அவதாரமாக வணங்கி வந்தேன்.

1902-ஆம் ஆண்டு துவக்கத்தில் சுவாமி சென்னைக்கு வந்தபோது திருவல்லிக்கேணியில் பாரி திம்மப்ப நாயுடு தோட்டத்தில் தங்கியிருந்தார். ஒரு நாள் இரவு நானும் B. V. ராமாநுஜலு நாயுடு, K. பார்த்தசாரதி நாயுடு, C. வெங்கடசாமி நாயுடு, B. நம்மைய நாயுடு ஆகியோரும் —இன்னும் சிலரும் சுவாமியோடு உட்கார்ந்து கொண்டிருந்தோம். அவர் யாரையோ பார்த்து பேசுவதும் போல, சிலகாலம் தாம் ஒரு ஆலமரப் பொந்தில் இருந்ததாகவும், திருத்தணிகை, திருவள்ளூர் கோயில்கள் கட்டியபோது தாம் காடுகளில் சுற்றிக்கொண்டிருந்ததாகவும் சொன்னார்.

1896-ஆம் ஆண்டில் சுவாமியை நான் முதல் முதல் பார்த்த சில மாதங்களுக்குப் பிறகு, சுவாமியை ஜார்ஜ் டவுன் கோவிந்தப்ப நாய்க்கன் தெருவில் உள்ள என் வீட்டிற்கழைத்தேன். என் வேண்டுகோளுக்கிணங்கி வந்து என்னுடன் இரண்டு நாட்கள் தங்கினார். முதல் நாளிரவு என் பெரிய அக்கா—சுப்பராவ் அம்மா (சென்னை ஹைக்கோர்ட் Solicitor C. விஜயராகவலு நாயுடு அவர்களின் தாயார்) சுவாமி வயது என்ன என்பதைத் தெரிந்து கொள்ள ஆவலுள்ளவர்களாயிருந்தார்கள். யாரையாவது இதைப்பற்றிக் கேட்க நினைத்தார்கள். திடீரென்று சுவாமி, "எனக்கு இப்போது வயது 500. நான் இங்கேயே இருந்தால் மற்ற இடங்களுக்கு எப்போது போவது?" என்று சொல்லத் தொடங்கினார்.

அலுத்துப் போகும் அளவுக்குத் தாம் நீண்ட காலம் வாழ்ந்துவிட்டதாகவா (இதற்குச் சிறிது பின்பு சமாதி அடைந்தார்)—அல்லது அந்த அம்மையார் நினைத்ததற்கு உண்மையாகவே பதில் சொன்னதாகவா—அல்லது தகுந்த வழியில் வாழவில்லையென்றால் நீண்ட வாழ்க்கையால் பயனில்லையென்பதாகவா—எவ்வாறு அவர் சொன்னதன் பொருளை உணர்ந்து கொள்வது என்பது எனக்குத் தெரியவில்லை.

(கையொப்பம்) V. எதிராஜுலு நாயுடு.

---

## Retired Asst. Inspector of Schools Cuddalore-New Town
## N. தேவசிகாமணி முதலியார்
### அவர்களுடைய அனுபவங்கள்.

*1891-ஆம் ஆண்டிலிருந்து 1896 வரையில் நான் வட ஆற்காடு ஜில்லாவில் (Asst. Inspector of Schools) ஆக அடிக்கடி இருக்க நேர்ந்தது. நான் புத்தூர் செல்கின்ற சமயங்களில் சுவாமியைப் போய்ப்பார்ப்பது வழக்கம். கண்ணுக்கு எட்டா நிகழ்ச்சிகளைக் காணும் ஆற்றல் அவருக்கிருந்தது என்பது அடிக்கடி தெளிவாயிற்று. இங்கே ஒரே ஒரு நிகழ்ச்சியைப்பற்றி மட்டும் குறிப்பிடுகிறேன். (First Grade Pleader) ஆக வேலூரில் இருந்த கிருஷ்ணையர் என்பவர் (Pneumonia) காய்ச்சலால் மிகவும் வருந்திக்கொண்டிருந்தார். திருத்தணிகைக்கு அருகில் என் வேலை காரணமாகப் போக நேர்ந்த போது சுவாமியைப் போய்ப் பார்த்து நோய்வாய்ப்பட்ட என் நண்பருக்கு உடல் நலம் ஏற்படச் சுவாமியை வேண்டிக் கொள்ள நினைத்தேன். அப்போது (Sub Asst. Inspector of Schools) ஆக இருந்த V. நாதமுனி முதலியாரும் நானும் சுமார் மூன்று மணிக்கு நாராயணவரம் போய்ச் சேர்ந்தோம். மஹாத்மாவைப் பார்த்து எங்கள் வீட்டில் உணவு கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொண்டோம். ஆபத்தான நிலைமையிலிருந்த கிருஷ்ணையர் உடல் நலம் பெறுவதற்காக நாங்கள் சுவாமிக்கு உணவு அளிக்க விரும்பினோம். சுவாமி அதை மறுத்து இழவுச் சாப்பாடு தமக்கு வேண்டாமென்று சொல்லிவிட்டார். நாங்களிருவரும் காற்று வாங்குவதற்காக ஆற்றங்கரைக்குச் சென்றோம். அன்று காலை கிருஷ்ணையர் காலமானதாக வேலூரிலிருந்து வந்த தந்தி எங்களிடம் கொடுக்கப்பட்டது. இழவுச்சாப்பாடு என்று ஏன் சுவாமி சொன்னார் என்பது அப்போது விளங்கிற்று.*

சுவாமி இருப்பிடத்திற்கு நாங்கள் திரும்பியதும் அந்தப் பிராமணர் தம் விதிப்படி இறந்து விட்டதாகவும் அதற்காக வருந்துவதில் பயனில்லை என்றும் சுவாமி சொன்னார்.

தெய்வீகப் பிறவிகள் அன்பின் ஆர்வத்திற்கு Ferrous of Devotion வசமாகிறார்கள் என்பதை விளக்கும் ஒரு நிகழ்ச்சியை இங்கே சுருக்கமாகக் குறிப்பிடுகிறேன். சுவாமி தம் அடியார்களோடு சிந்தாதிரிப் பேட்டையில் தங்கியிருப்பதாக 1894–ஆம் ஆண்டு ஈஸ்டர் முதல் நாள் என் நண்பர் ஒருவர் மூலமாகக் கேள்விப்பட்டேன். என்னுடைய குரு ஸ்ரீ பகவந்தர் கோயிலுக்குச் சுவாமியை அழைத்துச்செல்ல வேண்டுமென்ற எண்ணம் என்னை வலுவாகப்பற்றிக் கொண்டது. கூடுமானால் சுவாமியைத் தனியாக முதல் அல்லது இரண்டாம் வகுப்பு வண்டியில் அழைத்து வருவதற்கு வேண்டிய பணத்தோடு புறப்பட்டேன். நாற்காலிகள் முதலியவை மிகச் சிறப்பாகப் போடப்பட்டிருந்த பெரிய அறையில் அவரை அன்று மாலை பார்த்தவுடன் எனக்கு அச்சமும் கவலையும் மேலிட்டன. என்னுடைய எளிய தற்காலிகமான சென்னை இருப்பிடத்திற்கு வர அவர் இசையமாட்டார் என்று எண்ணினேன். என் நோக்கம் கைகூடச் சிறிதும் வழியில்லை என்ற நினைப்பு என்னை ஏக்கத்திலும் வருத்தத்திலும் ஆழ்த்தி விட்டது. அடுத்த நாள் காலையில் சில பெரிய மனிதர்கள் தம் இருப்பிடத்திற்குச் சுவாமி வரவேண்டுமென்று கேட்டுக்கொள்ள அவர் அதற்குச் செவிசாய்க்கவில்லை. நம்பிக்கைக் குறைவுடனும் தழுதழுத்த குரலிலும் நானும் அவர்களைப் போலவே வேண்டிக் கொண்டேன். சுவாமி உடனே எழுந்து, தம்முடனிருந்தவர்களிடம் தம் நாயையும் மூட்டைகளையும் என்னிருக்கைக்குக் கொண்டுபோகச்சொன்னார். அவர் வண்டியைத் தொடர்ந்து அடியார் கூட்டமும் வந்தது. வழியில் (Retd. I. G. of Registration) திவான் பஹதூர்

P. ராஜரத்ன முதலியார் C. I. E. அவர்கள் வீட்டில் தாகத்திற்குச் சாப்பிட்டுவிட்டு என் இருப்பிடம் வந்து சேர்ந்தார். சென்னையில் இருந்து பழக்கமில்லாதவனாதலால் சுவாமிக்கும் அவர் அடியார்களுக்கும் இருமுறை எளிய உணவு மட்டுமே அளித்தேன். என்னுடன் சுவாமி மூன்று நாட்களிருந்தார். ஆனால் வெளியார்களிடமிருந்து நிறைய உணவு காலையிலும் மாலையிலும் வந்து கொண்டிருந்தது. ஒவ்வொரு வேளையும் சுவாமியோடு சுமார் தொண்ணூறு பெயர்கள் சாப்பாட்டிற்கு உட்கார்ந்திருப்பார்கள். இரவில்தான் சுவாமி தனித்திருக்க முடிந்தது. பொழுது போனவுடன் ஒருநாள் என்னுடன் கடலூருக்கு வரவேண்டுமென்று சுவாமியை வேண்டிக்கொண்டேன்.

அவர் பதிலொன்றும் சொல்லவில்லை. கடலூரில் என் மகள் அடிக்கடி வலியால் (Epilepsy) துன்புறுவதை நினைத்தேன். அவர் நான் நினைத்ததைத் தெரிந்துகொண்டு என் மகளைப் பார்ப்பதாகச் சொன்னார். அடுத்த நாள் தெற்கே போகும் ரெயில் வண்டியைப் பார்த்துத் தாமும் அதே பக்கம் விரைவில் வருவதாகச் சொன்னார். அவர் வருவார் என்ற நம்பிக்கை எனக்குப் பிறக்கும்படியாகச் சில குறிப்புக்கள் கிடைத்தன. சுவாமியின் மீதே என் நினைப்பைச் செலுத்தினேன். அவரைக் கடலூர் அழைத்துச்செல்ல வேண்டுமென்ற எண்ணம் என் உள்ளத்தைக் கவர்ந்து கொண்டது. அன்று மாலை அவர் பெருங்கூட்டத்தினிடையில் இருந்தார். நான் கூட்டத்தில் நுழைந்து மெதுவாக அவர் முன் சென்று தழுதழுத்தகுரலில் என் குருவின் கோயிலுக்கு வரவேண்டுமென்று கேட்டுக்கொண்டேன். சிந்தாதிரிப் பேட்டையில் நிகழ்ந்தவாறே, என்னுடன் வருவதற்காக அவர் தம் சாமான்களை உடனே எடுத்துவரச் சொன்னார். சென்னைப் பெரிய மனிதர்கள் அவரை விட்டுப் பிரிய மனமற்றவர்களாயிருந்தும், என் மௌனமான

வேண்டுகோளால் நான் சுவாமியை இணங்கவைத்ததால், தடை ஒன்றும் சொல்லவில்லை. சுவாமியையும் அவருட னிருப்பவர்களையும் என்னையும் எங்கள் சாமான்களோடு தங்கள் வண்டியில் அழைத்துச் சென்று எங்களுக்கெனத் தனியாக ஒரு வண்டி பார்த்து எங்களை ஏற்றினார்கள், இரவு பதினொரு மணிக்கு ஸ்ரீ பகவந்தர் மடத்தை அடைந் தோம். வேறொரு செய்தியைச் சற்று இங்கே குறிப்பிட வேண்டும். ஸ்ரீ பகவந்தர் ஒரு பெரிய மஹான். நூறு வயதுக்கு மேலிருந்தவர். நுண்மையாகப் பொருளை உணரும் அகக்கண் பார்வைபெற்றவர். உள்ள வன்மை (will power) மிகுதியாக உடையவர். அவர் சமாதிக்குத் தான் நாங்கள் சென்றோம். புறக்கண்ணுக்குத் தோன்றாத பகவந்தரைப் பார்த்து சுவாமி, "என் கண்ணே, என் கண்மணியே, எத்தனை மலைசுற்றினாய், எத்தனை காடு சுற்றினாய், எத்தனைக் குகையிலிருந்தாய், கடைசியில் இந்த இடமா ஓடி உட்கார்ந்தாய்! நீ போய் விட்டதாய் சிலர் நினைக்கிறார் களே! முன்னே மாடு ஓடியாடி மேய்ந்து கொண்டிருந்தது. இப்போது படுத்துப் பார்த்துக் கொண்டிருக்கிறது, உன் சந்நிதி ஏழுமலையான் சந்நிதிபோல் விளங்கவேண்டும்" என்றார். ஸ்ரீ பகவந்தர் நுண் உடலில் இயங்குவதாகச் சுவாமி தெளிவாகச் சொன்னார், அடுத்த நாள் என் மகளை அவர் முன்பு அழைத்துச் சென்றேன். அவரருகில் சென்ற தும் என் மகளுக்கு வலிப்பு கண்டது. உணர்வற்று அவரருகில் வீழ்ந்து கிடந்தாள். சுவாமி அடிக்கடி திருநீற்றை அவள் வாயில் போட்டுக்கொண்டிருந்தார். கடலூரில் சுவாமி ஒரு வாரம் தங்கியிருந்தார். அந்த வாரம் முழுவதும் சுவாமி அவளை உன்னிப்பாகப் பார்த்து வந்தார். சென்னைக்குப் புறப்படுவதற்கு முன்னாள் அவர் பெண்ணை யாற்றுக்குச் சென்று விறகு சேர்த்து சுமார் ஒரு மணி நேரம் கொளுத்திவிட்டு கிரக கரேம் போய் விட்டது

என்ருர். அன்று முதல் என் மகளுடைய நோய் மிகவும் குறைந்து வந்து ஒரு மாதத்தில் அவள் உடல் நிலை சரியாகி விட்டது. கடலூரில் தங்கியிருந்த கடைசி நாள் சுவாமி ஊரைச் சுற்றி வந்து ஒருவரும் வழிகாட்டாமலே என் வீட்டிற்குத் திரும்பி வந்து விட்டார். மற்றவர்கள் அவரை வற்புறுத்தி அழைத்தும் வேருெருவர் வீட்டிற்கும் அவர் செல்லவில்லை. நான் எழுதுவது மிகவும் நீளமாகிவிடும் என்று அஞ்சி, அவர் ஆற்றலைக் காட்டும் (Occult Powers) வேறு சில நிகழ்ச்சிகளைக் குறிப்பிடாமல் விடுகிறேன்.

திருச்சிற்றம்பலம்.

(கையொப்பம்) N. **தேவசிகாமணி முதலியார்.**

---

## சென்னை ஹோமியோபதி

## டாக்டர். C. வீரராகவராவ்.

## அவர்களுடைய அனுபவங்கள்.

1895-ஆம் ஆண்டில் சுவாமியை நாராயணவரத்தில் பார்த்து அவரோடு ஏறக்குறைய நாலு மாதங்கள் தங்கி இருந்தேன். அந்தச் சமயத்தில் சுவாமியிடம் பலர் வந்தனர். அவர்கள் அன்பின் உண்மைக்கும் நம்பிக்கைக்கும் ஏற்ற வாறு வாழ்த்தும் எச்சரிக்கையும் பெற்றார்கள். 1901-ஆம் ஆண்டு வரையில் எனக்கு ஐயமேற்பட்ட பல செய்திகளில் சுவாமியின் கட்டளையைப் பெற்றேன். சுவாமி எழுபது வயது ஆனவர் போலத் தோன்றினார். ஆனால் 90 வயதுடையவர்களைக் கேட்டதற்கு அவர்கள் தங்கள் இளமையிலும் சுவாமியை இதே தோற்றத்தில் பார்த்த தாகச் சொன்னார்கள்.

ஒரு முறை நான் சுவாமியோடிருந்தபோது என் இளைய மகன் மிகவும் நோய் வாய்ப்பட்டிருப்பதாக என் வீட்டி லிருந்து கடிதம் வந்தது. போஸ்ட் ஆபிஸில் கடிதத்தைப் பிரித்துப் பார்த்துவிட்டு வருத்தத்தோடு சுவாமியிடம் சென் றேன். சாய்ந்து அமர்ந்திருந்த அவர் சில நிமிஷங்களில் எழுந்து உட்கார்ந்து தம் கால் நீட்டிக் கொண்டிருந்த தூணிலிருந்த ஒரு நீலக்கயிற்றை அவிழ்த்து “இதைக் குழந்தை கையில் கட்டினால் சரியாகிவிடும்” என்று சொன்னார். நான்கு நாட்கள் கழித்து என் மகன் உடல் நலமடைந்ததாகக் கடிதம் வந்தது, அடிக்கடி அவர் என் கனவில் தோன்றி வரப்போகும் நிகழ்ச்சிகளை முன்னதாகத் தெரிவித்தார். கடல் பொங்கிச் சென்னை மூழ்கிவிடப்

போகிறது என்ற வதந்தி கேட்டு நான் அச்சங்கொண்ட போது அவர் என் மனத்தைத் தேற்றினூர். வேறொரு முறை காய்ச்சல் கண்டிருந்த என் மகனுக்கு அவர் சொற்படி தண்ணீர் கொடுத்தேன். மருந்தில்லாமலே அவன் நல முற்ருன். சுவாமி ஒரு அக்னி ஹோத்ரி; அவர் வளர்த்தத் தீயினின்றும் எடுத்த விபூதியால் பேய் பிசாசு பிடித்தவர் கள் பலர் நல மடைந்தார்கள்.

நெல்லூர் ஜில்லா கந்தகூர் தாலுக்கா ராமயபடத்தில் நான் அலுவலாகச் சென்றிருந்தபோது தாரகயோகம் செய்து கொண்டிருந்தேன். ஒரு நாள் இரவு ஏழரை மணிக்குத் தொப்புள் அருகில் குண்டலியில் ஒருவிதமான எரிச்சல் ஏற்பட்டது. உடனே சாப்பிட்டுவிட்டு அயர்ந்து தூங்கினேன், தூங்குவதற்கு முன் கடியாரத்தைப் பார்த் தேன். மணி எட்டு ஆகியிருந்தது. நல்ல உறக்கம் வருமுன் நாராயணவரத்திற்கு நான் பறந்து செல்வது போலிருந்தது. சுவாமி தோன்றினூர். நான் அவரடி விழுந்து வணங்கி னேன். அவர் என்னை அன்புடன் வாழ்த்தி, அணைத்துச் சிறிது தூரம் அழைத்துச் சென்று தங்க ஓர் இடம் காட்டி ஞர். அங்கே சென்றதும், "எத்தனை நாட்கள் நான் பிறர் வீட்டில் தங்குவது? நான் இருக்க ஒரு வீடு பார்த்துத்தா" என்ருர். நான் அவ்வாறே செய்வதாகச் சொன்னேன். உறக்கங்கலைந்து, விழித்துப் பார்த்தேன். மணி ஒன்பதாகி யிருந்தது. இதற்குப் பிறகு உறங்கமுடிய வில்லை. இரண்டு வாரங்களுக்குப் பிறகு நான் நெல்லூர் சென்றபோது சரியாக நான் கனவு கண்டநேரத்தில் சுவாமி நிர்வாணம் அடைந்ததாகக் கேள்விப் பட்டேன். நான் கண்ட கனவு இந்தச் செய்தியை முன்னதாகவே எனக்கு உணர்த்தியது.

(கையொப்பம்) Dr. C. **வீரராகவராவ்.**

---

## சென்னை, பெரவளூர் General Contractor & Hony Magistrate

# P. பார்த்தசாரதி நாயுடு

## அவர்கள் அனுபவங்கள்.

பெரிய மஹானான ஸ்ரீ சுரைக்காய் சுவாமியிடம் எனக்கு ஏற்பட்ட சில அனுபவங்களைப்பற்றிச் சிறிது தயக்கத்தோடுதான் நான் எழுதத் துணிகிறேன். அவரைப் பற்றி எழுத எனக்குத் தகுதியில்லையென்று உணர்கின் றேனாயினும் பொதுவாக உலகத்திற்கும் சிறப்பாக என் னுடைய சபைக்கும் கடமைப்பட்டிருப்பதால் எழுது கிறேன். ஸ்ரீ சுரைக்காய் சுவாமியைப் போன்ற பெரிய ஞானியையும் மஹாத்மாவையும் பற்றிப் பேச ஆயிரம் தலை உடைய ஆதிசேஷனாலும் முடியாது என்று திட்டமாகச் சொல்லலாம். பகவத் கீதையில் ஸ்ரீ கிருஷ்ணன் சொல்லு கின்ற மஹாத்மாவின் இலக்கணத்திற்குச் சரியான இலக் கியமானவர் இந்த மஹாத்மா.

"கல்வியும் விநயமும் நன்கு கற்ற பிராமணனிடத் திலும் பசுவினிடத்தும், யானையினிடத்தும், நாயினிடத்தும் நாயைத் தின்னும் புலையனிடத்தும் பண்டிதர் சமநோக்கு டையோர்"—கீதை V. 18.

மேலும், வெறும் உலோகாயதமும் சமயச் செய்திகளில் நம்பிக்கை இன்மையும் மிகுந்துள்ள இந்தக் காலத்தில் இந்த மஹான் தோன்றியதே ஸ்ரீ கிருஷ்ணன் கீதையில் சொன்னதற்கு ஏற்றவாறுள்ளது.

"நல்லோரைக் காக்கவும் தீயன செய்வோரை அழிக்க வும் அறத்தை நிலைநிறுத்தவும் நான் யுகந்தோறும் பிறக் கிறேன்."—IV, 7.

1897-ஆம் ஆண்டு அல்லது அவ்வாண்டின் அண்மையில் எனக்குச் சுவாமியைப்பற்றித் தெரிய வந்தது. அவர் அப்போது எழும்பூரில் என் மாமா ? D. ஆராவமுது நாயுடு வீட்டிலிருந்தார். என் மாமா சுவாமியிடம் என்னை அறிமுகப்படுத்தி வைத்தார். நான் சுவாமி காலில் விழுந்து வணங்கினேன். சுவாமியின் பெருமிதமான தோற்றத்தைக் கண்டவுடன் எனக்கு உடல் முழுவதும் ஓர் அதிர்ச்சி உண்டாகி அவரிடத்தில் முழு நம்பிக்கையும் மரியாதையும் உண்டாயின. அது முதல் அவரிடம் ஆர்வமுள்ள அடியார்களில் நானும் ஒருவனுனேன். உண்மையில், நான் குறிப்பிடுவதற்கு உயர்ந்த ஆன்மீய வாழ்க்கையைப் பற்றிய அனுபவங்கள் மிகுதியாக இல்லை. உலகியல் அல்லது சமய வாழ்க்கையைப் பற்றிய அறிவுரைகளும் நான் பெற்றதாகச் சொல்வதற்கில்லை. ஏனென்ருல் இத்தகைய செய்திகளைப்பற்றி அவர் விடியற்காலை நாலு அல்லது ஐந்து மணிக்கு உவமைக் கதையாகத்தான் சொல்லுவது வழக்கம். இவைகளை எளிதாக உணர்ந்து கொள்ளவோ பொருள் உரைக்கவோ முடிவதில்லை. சில சமயங்களில் சரியாகக் கேட்க முடியாத அல்லது குரல் தெளிவில்லாத வழியில் இவற்றைச் சொல்லுவார். வீடு பேறு அடைவது எப்படி என்பது போன்ற கேள்விகள் ஒருமுறை நான் கேட்டபோது, சுவாமி உவமையாகப் பின் வருமாறு சொன்ஞர். "சாப்பிடும் உணவு அவ்வளவு எளிதாக உன் கலத்திற்கு வந்துவிடாது. முதலாவது முட்கள், புதர்கள், கற்கள், களை போன்றவற்றை வயலினின்றும் நீக்கி, கால்வாய்களில் உள்ள குப்பையை அப்புறப்படுத்தி பின்னர் கம்பு அல்லது கேழ்வரகு விதைத்தால் நல்ல விளைவைப் பெறலாம்." அடிக்கடி அவர் கூறிய வேறெரு உவமை: "(மனமாகிய) குரங்கை உரமான கயிற்ருல் கட்டு; இப்படியும் அப்படியும் எல்லாப் புறங்களிலும் அது

குதிக்கும். அதை உறுதியான சங்கிலியால் நன்ருகக் கட்டிஞல் உனக்குத் தொல்லை இல்லை" என்பதாகும். இந்த உவமைக் கதைகளில் உயர்ந்த மறைபொருள் மிகுதியாக உண்டு என்பதில் ஐயமில்லை. மேலும் வேறு பல உண்மைகளையும் அவர் பல உவமைக் கதைகளால் உணர்த்துவது உண்டு. நிறைய உள்ள அத்தகைய கதைகளை இங்கே தருவதற்கில்லை. அவருடன் நெருங்கிப் பழகியவர்கள் கூட அவற்றுள் பெரும்பாலானவற்றை உணர்ந்துகொள்ள முடியவில்லை. சில வேளைகளில் அவர் திடீரென்று சிரிப்பார். அடுத்த விஞடி சிரிப்பின்றி இருப்பார்; அதற்குச் சற்றுப் பிறகு. (Become Serious) மற்றவர்களுக்கு விளங்காத எதைப்பற்றியோ வருந்திக்கொண்டோ எண்ணமிட்டுக் கொண்டோ இருப்பார். அதற்குப் பிறகு எதைப் பற்றியோ தாமாகவே பேசிக் கொள்ளுவார். அவரிருந்த சூழ்நிலைக்கு இத்தகைய நடத்தை தொடர்புடையதாகத் தெரியவில்லை.

யாராவது ஒரு விலங்கை அடிப்பதையோ அடிக்க முயலுவதையோ பார்த்தால் உடனே அடிக்க வேண்டாமென்று உரக்கக் கூவுவார் அல்லது வேண்டிக் கொள்ளுவார். பிறகு அந்த விலங்கின் முன் பிறப்பைப் பற்றிய வரலாற்றைச் சொல்லத் தொடங்குவார். ஒரு முறை ஒரு நாயைப் பற்றி அவர் "முன் பிறப்பில் அவன் ஒரு இடையனுக என்னேடு மந்தைகள் மேய்த்து வந்தான். இப்போது இப்படியாகிவிட்டான். ஐயோ, பாவம், ஐயோ பாவம்" என்று சொன்னர். இதைப்போல துன்பப் பட்டுக்கொண்டிருந்த மனிதனையோ விலங்கையோ பற்றிய முன்பிறப்பின் வரலாற்றைக் கூறி இரக்கப்படுவார். கீதையின் ஐந்தாம் அத்தியாயத்தில் கூறப்பட்டுள்ள ஞானியின் இலக்கணத்திற்கு எவ்வகையிலும் ஒத்ததாகவே சுவாமியின் பல திறப்பட்டப் பண்புகள் அமைந்திருந்தன.

என் சொந்த வாழ்க்கையைப் பற்றிய பல நிகழ்ச்சி களில் அவருடைய தீர்க்கதரிசனத்திறமையும் அற்புதங்கள் செய்யும் திறமையும் மிகச்சிறப்பாக விளங்கின. இருமுறை என் மனைவிக்கு இராஜபிளவை வந்து நிலைமை கவலைக் கிடமானபோது புளி, கடலை எண்ணெய், ஆகியவை கொண்டே அவளை எளிதாக நலமுறச் செய்தார். மூன்றும் முறை கட்டி வந்ததை அவரிடம் சொன்னபோது அவன் தன் வழியைப் பார்த்துக்கொள்ள வேண்டுமென்று சொல்லி ஏதும் செய்ய மறுத்தார். என் மனைவி பிழைக்கவில்லை. உணவு, சிற்றுண்டி ஏதுமின்றி இம்முறை தான் சுவாமி யைப் பார்ப்பதற்காகப் புத்தூரிலிருந்து நீண்ட தொலைவி லிருந்த குப்பாடு என்ற ஊருக்குச்செல்ல வேண்டியிருந்தது. நான் போய்ச் சேரும் வரையில் அவர், "பையன் ஒன்றும் சாப்பிடாமல் வருகிறான்" என்று சொல்லிக் கொண்டிருந் தாராம். நான் போய்ச் சேர்ந்ததும் உடனே போய்க் கஞ்சி சாப்பிடச் சொன்னார். வேறொருமுறை என் உடன்பிறந் தாரின் பிள்ளை கவலைக்கிடமாக நோயுற்றிருக்கையில் பெரவ லூரில் என் வீட்டில் சுவாமி இருக்கும்படி நேரவே, அவர் கையில் நோயாளியின் ஜாதகத்தை வைத்து நோயாளியைப் பற்றிக் கேட்டோம். அவர் அதைத் திறந்து உடனே மூடி நோயாளிக்கு மாலை போட்டு அவன் போகிற வழியில் அனுப்பிவிட வேண்டுமென்றார். இதனால் அவன் பிழைக்க மாட்டான் என்பதை உணர்த்தினார். அவ்வாறே அவன் பிழைக்கவில்லை. பின் வருவனவற்றை முன்னதாக உணரும் அவருடைய பேராற்றலைப் பின்வரும் நிகழ்ச்சி காட்டுகிறது சுவாமி ஒரு சமயம் என்னுடனும் வேறு சில அடியார் களுடனும் குப்பாடு என்ற ஊரில் இருந்தார். ஒரு நாள் நாராயணவரத்திற்கும் குப்பாட்டிற்கும் இடையிலிருந்த கோவிந்தப்ப நாயுடு கண்டிகைக்குச் செல்ல வேண்டு மென்றார். இதற்காக மாலைப் பொழுதுக்குள் வண்டிகள்

முதலியன ஏற்பாடு செய்தோம். பொழுதிருக்கும் போதே சாப்பாட்டு வேலையையும் முடித்துக் கொண்டோம். வண்டிகள் கட்டியவுடன் சாமான்களை எடுத்துக்கொண்டு சுவாமியிடம் சென்று புறப்படும்படி வேண்டினோம். ஆனால் சுவாமி வர மறுத்துவிட்டார். எவ்வளவு வேண்டியும் வரவில்லை. எங்களை மட்டும் போகும்படிச் சொன்னார். அவருக்கு வருத்தம் உண்டாகக் கூடாதென்று நாங்கள் போவதாகச் சொன்னோம். ஆனால் முன் ஏற்பாட்டின்படி கோவிந்தப்ப நாயுடு கண்டிகையில் தங்காமல் நேரே நாராயணவரம் செல்ல முடிவு செய்தோம். பாதி வழி சென்றவுடன் கனத்த மழை பெய்யத் தொடங்கியது; இருட்டியும் விட்டது. இரவு வந்துவிட்டபடியால் கோவிந்தப்ப நாயுடு கண்டிகையில் தங்க வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. அங்குச் சென்றவுடன் சுவாமி வழக்கமாகத் தங்குமிடத்திற்குப் போனோம். ஆனால் அந்த வீட்டில் ஒரு நோயாளிக்கு ஜன்னி கண்டிருந்ததால் வேறு எங்காவது போகச் சொன்னார்கள். அந்த இருட்டில் கஷ்டத்தோடு வேறொரு வீடு பார்க்க வேண்டியதாயிற்று. விடியற் காலையில் அந்த நோயாளி இறந்துவிட்டதாகக் கேள்விப் பட்டோம். இதற்காகத்தான் சுவாமி முதல் செய்த ஏற்பாட்டை மாற்றினார் போலும். மாற்றியதற்குக் காரணம் என்ன என்று நாங்கள் தெரிந்து கொள்வதற்காகத் தான் எங்களை மட்டும் அனுப்பியதும் வழியில் இடர்ப்பாடுகள் உண்டாக்கியதும் போலும்.

சுவாமியுடைய அளவற்ற பெருமையைக் காட்டும் பல நிகழ்ச்சிகள் என் மனத்தில் ஊற்றைப் போலப் பெருகி நினைவுக்கு வந்தாலும் எழுதுவதற்குக்கால, இடவரையறை இருப்பதால் மேலும் எழுதவில்லை. இன்னும் ஒரு நிகழ்ச்சியைக் குறித்துவிட்டு நிறுத்திக் கொள்ளுகிறேன். நாராயணவரம் சென்றிருந்த போது சுவாமியைச் சுற்றி

நானும் வேறு சிலரும் உட்கார்ந்து கொண்டிருந்தோம். அங்கிருந்த நேரம் முழுவதும் விரைவில் வீடு கட்ட வேண்டுமென்பதற்காக மூன்று இடங்களைப் பார்த்து அவற்றுள் எதைத் தேர்ந்தெடுப்பது என்று முடிவு செய்ய இயலாததைப்பற்றி எண்ணிக் கொண்டிருந்தேன். திடீரென்று சுவாமி நான் வீடு கட்ட வேண்டிய இடத்தைக் குறிப்பிட்டு விவரித்தார். இந்த இடங்களைப்பற்றி அவரிடம் நான் சொல்லவில்லை. அவரும் அவைகளை ஒரு பொழுதும் பார்த்ததில்லை. அவர் கூறிய சில விவரங்கள் எனக்கே தெரியாதவை. ஆனல் நான் பிறகு பார்த்தபோது அவை உண்மையாயிருந்தன. என்னைப் பலகாலும் வாட்டிய கவலை சுவாமியால் இப்படி ஒரு விஞடியில் தீர்க்கப்பட்டது.

சபையைச் சேர்ந்தவர்கள் சுவாமியின் பெருமைபற்றிய வேறு செய்திகளைச் சொல்லியிருப்பார்கள். ஆகையால் அவைகளை மீண்டும் கூருமல் நான் இதோடு நிறுத்திக் கொள்ளுகிறேன்.

(Sd.) P. பார்த்தசாரதி நாயுடு.

## கூடூர் தாசில்தார்

# M. குப்புசாமி செட்டி M. A.

## அவர்களுடைய அனுபவங்கள்.

1882-ஆம் ஆண்டு அக்டோபர் இரண்டாந் தேதி P.W. செயலகத்தில் நான் குமாஸ்தாவாகச் சேர்ந்தேன். இதுவே நான் பார்த்த முதல் வேலை. P.W. செயலகத்தில் நிதியாளராக வேலை பார்த்துவந்த ஆராவமுது நாயுடுவின் பழக்கம் ஏற்பட்டு நாளடைவில் அது முதிர்ந்து நெருங்கிய நட்பாயிற்று. அவரிடமிருந்தும், அவருடைய நண்பர்கள் செங்கல்வராய முதலியார், டோக் நாராயணசாமி நாயுடு இவர்களிடமிருந்தும் நான் சுரைக்காய் சுவாமியைப்பற்றி முதல் முதலாகத் தெரிந்து கொண்டேன். சுவாமியை நேராக நான் பார்ப்பதற்குமுன் அவர்கள் மூலமாக அவர்கள் சுவாமியைப் பார்த்த பொழுது அவர் சொன்னவைகளைப் பற்றிக் கேள்விப்பட்டேன். ஆனால் சொன்னவற்றில் உயர்ந்த மெய்ப்பொருளின் தன்மை இருப்பதாக உணர்ந்தேன். மேலும் அவர் ராய் பஹதூர் N. ரத்னசபாபதி பிள்ளை B.A. B.C.E. அவர்களைப் பற்றிச் சொன்னது சொன்னபடியே நடந்தது. இவ்வாறு சுவாமியைப்பற்றி நீண்ட காலமாகக் கேட்டு வரவே நேரே சென்று அவரை வணங்கி வர வேண்டுமென்று விரும்பினேன். இதற்கு வாய்ப்பு (சுமார்) 1883 ஆகஸ்டு ஐந்தாந் தேதி ஏற்பட்டது. ஆராவமுது நாயுடு அன்று மாலை முன்பு சொன்ன நண்பர்களுடனும் பிரம்பூரில் இருந்து கொண்டு ரெயில்வேயில் வேலை பார்த்து வந்த இராமையா என்பவருடனும் புறப்படுவதற்கான ஏற்பாடுகள் செய்திருப்பதாகச் சொன்னார்.

என் உடன்பிறந்தாருக்குச் சொல்லி அனுப்பிவிட்டு நானும் அவர்களோடு புறப்பட்டேன். அவர் நாராயண வரத்தில் இல்லாததால் எங்கெங்கே அவர் இருந்ததாகச் சொன்னார்களோ அங்கெல்லாம் போய்ப் பார்த்தோம். அந்தப் பக்கத்தில் அவரை எல்லோருக்கும் நன்றாகத் தெரியும். அவரை, வயதானவராகவும் தனிப்பட்ட பண்புகள் உடையவராகவும் பிறருக்கு உதவி செய்ய விருப்பமும் இரக்கமும் உடையவராகவும் அவர்கள் அறிந்திருந் தார்கள். நின்ரு என்ற ஊரைக்கடந்து அதற்கருகில் உள்ள நிர்வாயல் என்ற (செங்கற்பட்டு ஜில்லாவைச் சேர்ந்த) ஒரு சிற்றூரில் மாலை இரண்டு மணிக்குப் பார்த் தோம். முகத்தில் படும் வெயிலையும் பொருட்படுத்தாது அவர் ஒரு புங்கமர நிழலில் படுத்து உறங்கிக் கொண்டிருந் தார். நாங்கள் அவர் அருகில் உட்கார்ந்த பத்து நிமிஷங் களுக்குப் பிறகு விழித்துக் கொண்டார். அவர் கண்கள் வைரங்கள்போல் ஒளி வீசிக்கொண்டிருந்தன. அவரை வணங்கினோம். ஊருக்கு ஒரு பர்லாங் தொலைவிலுள்ள ஒரு மாந்தோப்புக்கு அழைத்துச் சென்றார். அங்கே உணவு சமைத்தோம். சுவாமியும் எங்களோடு உணவருந்தினார். இதற்குள் இரவாயிற்று. அன்றிரவு நிலவொளி இருந்தது. சுவாமி அங்கேயே தங்க முடிவு செய்யவே நாங்களும் அவ ருடன் உறங்கினோம். அவர் விழித்ததிலிருந்து நாங்கள் உறங்கும் வரையில் அவர் நீண்டநேரம் பேசிக்கொண்டிருந் தார். ஆனால் எல்லாம் உள்பொருள்? கொண்ட உவமைகள் ஆக இருக்கவே எனக்கு அவற்றின் பொருள் முழுவதும் விளங்கவில்லை. விடிவதற்கு ஒன்றரை அல்லது ஒரு மணி நேரத்திற்குமுன் சுவாமி எழுந்தார். அருகில் உறங்கிக் கொண்டிருந்த வேறு சிலரும் அவருடன் எழுந்தார்கள். ஆனால் பனிக்காலத்தில் அவ்வளவு முன்னதாக எழுந்திருக்க எனக்கு விருப்பமில்லை. மேலும் என் நண்பர்கள் எளிதாக

எதையும் நம்பிவிடுபவர்கள்; நல்ல தன்மையுடைய ஆனால் பித்துக்கொள்ளிபோன்ற ஒருகிழவனாரை அவர்கள் மிகவும் பாராட்டினார்கள் என்றும் நினைத்தேன். விடிந்தவுடன் மற்றவர்கள் வெளியே செல்லும்போது நான் போகவில்லை யாதலால் அங்கிருந்த சாமான்களைப் பார்த்துக் கொள்ளும் படிச் சொன்னார்கள். தம் ஐயங்கள் எல்லாம் நீக்கப் பெற்றதாகவும் எனக்கு எதைப்பற்றி யாவது சுவாமி யிடம் தெரிந்துகொள்ள வேண்டுமென்றால் கேட்டுக்கொள் ளலாம் என்றும் சொன்னார்கள். என் இரண்டாவது மனைவியை இழந்திருந்தேனாதலால் மறுமணம் செய்து கொள்வதா, கூடாதா என்பதைப்பற்றி சுவாமி என்ன சொல்லுவார் என்று தெரிந்து கொள்வது நல்லது என்று தோன்றிற்று. ஒன்றும் வெளிப்படையாகச் சொல்லா திருந்தும் இதைப்பற்றி நினைத்த உடனே, சுவாமியும் உடனே பொருத்தமாகச் சொன்ன பதில் என்னைத் திடுக் கிடச் செய்தது. இறந்துபோன என் மனைவியை எவ்வளவு அன்பாக நடத்தி வந்தேன் என்பதைப்பற்றிச் சொல்லி விட்டுத் தவிர்க்க முடியாததும் நடந்து போனதுமானதைப் பற்றித் தொடர்ந்து வருந்திக் கொண்டிருப்பதில் பயனில்லை யென்றார். மணப்பருவத்தில் உள்ள உறவுப் பெண்களைப் பற்றியெல்லாம் விவரமாகக் குறிப்பிட்டார். அவர்களுள் யாரை நான் மணப்பேன் என்றும் நடக்க இருப்பவை பற்றியும் சொன்னார். மேலும் இவ்வுலக இன்பத்திற்கும் வெற்றிக்கும், ஆன்மீய வாழ்வில் முன்னேறுவதற்கும் நான் விரைவில் மறுமணஞ் செய்துகொள்ள வேண்டுமென்றார். உடனே விடுமுறைக்காக விண்ணப்பஞ் செய்யச் சொல்லித் திருமணத்திற்கு வேண்டிய பணம் எளிதாகக் கிடைக்கு மென்றும் திருமணம் விரைவிலும் செவ்வையாகவும் நடை பெறும் என்றும் சொன்னார். வாய் திறந்து ஒன்றும் சொல் லாமல் மனத்தில் நினைத்த உடனேயே என் கேள்விக்குச்

சுவாமி பதிலளித்தது என்னை வியப்படையச் செய்தது. உடனே அவரடி பணிந்து வணங்கினேன். பெற்றோர்கள் காட்டும் பரிவும் பாராட்டும் கலந்த சொற்கள் கூறி என்னை எழுந்திருக்கச் சொன்னார்.

நான் நினைத்ததற்குச் சுவாமி பதில் சொன்ன பிறகு வேறு பலர் அவரைப் பார்க்க வந்தார்கள். கிராமமக்களுக்கு உரிய எளிமையோடு அவரவர்கள் சொன்ன நோய் நொடிகளுக்குத் தகுந்த பரிகாரம் சொன்னார். ஆனால் ஒரு நடுத்தரவயதுடைய பிராமணர் கேட்ட கேள்விக்கு அவர் பதில் சொல்லவில்லை. இந்தப் பிராமணர் சுவாமியிடம் தமக்காக என்னைப் பரிந்து பேசிப் பதில் பெற்றுக்கொள்ளச் சொன்னார். காத்திருந்தால் சுவாமி அவரைக் கவனித்து ஏதாவது சொல்லுவார் என்று நான் சொன்னதற்குச் சுவாமி என்னைக் கடிந்து அந்தப் பிராமணர் பாவம் மிகுதியாகச் செய்து பல குடும்பங்களை அழித்திருக்கும்போது அவர் குறையைத் தீர்க்க இப்போது தாம் என்ன செய்ய முடியும் என்று கேட்டார். உடனே அந்தப் பிராமணர் திரும்பிப் போய் விட்டார்.

சற்று பொறுத்து அந்த ஊரைச் சேர்ந்தவர் ஒருவர் நாங்கள் யார் என்று சுவாமியைக் கேட்டார். அதற்குச் சுவாமி, "இவர்களெல்லாம் என் அம்மா வீட்டுப் பிள்ளைகள்" என்றார். இதைக் கேட்ட வேறொருவர் அப்படியானால் ஒருவர் திருநீறு அணிந்திருக்க மற்றொருவர் திருமண் இட்டிருக்க, சிலர் பூணூல் போட்டிருக்க எவ்வாறு இவர்களெல்லாம் ஒரே வீட்டை அல்லது குடும்பத்தை அல்லது இனத்தைச் சேர்ந்தவர்களாக இருக்க முடியும் என்று கேட்டார். இதற்குச் சுவாமி இந்த வேற்றுமைகள் உண்மையில் நிலையானவை அல்ல என்றும் குடத்தைச் செய்பவன் குயவன், துணியைத் துவைப்பவன் வண்ணான்,

நூல் நூற்பவன் சாலியன் என்று இவ்வாறிருப்பினும் உண்மையில் இவர்களெல்லோரும் தத்தம் தாய்களின் பிள்ளைகளே என்றும்—இப்படியாக வகுப்பு வேற்றுமை பற்றிய சிக்கலை வெகு எளிதாகத் தீர்த்து, அனைவருக்கும் கடவுள் தந்தை, மக்களெல்லோரும் உடன் பிறந்தோர் என்ற உண்மையை அறிவுறுத்தினார். மக்களை மட்டுமல்ல— உயிருள்ள எல்லாவற்றையுமே அவர் உடன் பிறந்தனவாக எண்ணினார். மக்களிடத்து மட்டுமல்ல, விலங்குகள், எறும்பு, பூச்சி ஆகிய எல்லா உயிர்களிடத்தும் அவர் இரக்கம் காட்டினார் — என்பது தெளிவு. ஆனால் இவை களின் துன்பம் எத்தகையதாயிருப்பினும் அதைப் போக்கு வதில் இவர் ஏதோ சில வரம்புகளுக்கு உட்பட்டிருந்த தாகத் தெரிகிறது.

மேற்சொன்ன பயணத்தின் போது நானும் என்னுடன் வந்தவர்களும் அவருடன் நின்று என்ற ஊரில் மூன்று அல்லது நான்கு நாட்கள் தங்கினோம்.

அவர் நெஞ்சாரச் சொன்ன வாழ்த்தைப் பெற்று (இவ்வாழ்த்து தமிழ்ச் செய்யுள் போலிருந்தது) நாங்கள் சென்னை திரும்பினோம். நின்றுவிலிருந்து புறப்பட்டுப் புத்தூர் வரும் வரையில் மழையில் நன்றாக நனைந்து விட்டோம்.

இது முதல், வாய்ப்பு கிடைத்த போதெல்லாம் நான் சுவாமியைப் போய் பார்த்து வந்தேன். ஒவ்வொரு முறை யும் குறிப்பிடத் தக்கது ஏதாவது இருந்தது. ஆனால் நாட் குறிப்பு நான் வைக்காததால் நடந்தவற்றைப்பற்றித் தேதி விவரங்களோடு சொல்ல இயலவில்லை. முழுவிவரங்கள் தந்தால் மிக விரிவாகி விடுமாதலால் குறிப்பிடத்தக்க சில வற்றை மட்டும் தருகிறேன்.

நான் குடியிருந்த இடத்தருகில் மங்கத்தாயம்மா என்ற வயதான என் உறவினர் ஒருவர் இருந்தார். மூன்றும் அல்லது நான்காவது முறையாகச் சுவாமியைப் பார்க்கப் புறப்பட்ட ஒரு சனிக்கிழமையன்று அந்த அம்மையார் தாம் இருமலால் மிகவும் வருந்துவதாகச் சுவாமியிடம் சொல்லச் சொன்னார்கள். சுவாமியிடம் சென்று ஞாயிற்றுக்கிழமை முழுவதும் அவருடனிருந்து அன்றிரவு புறப்பட அவர் உத்தரவு கேட்டேன். அந்த அம்மையார் சொன்னது மறந்தே போய்விட்டது. ஆனால் சுவாமியே, நோய்வலுக்கும், மும்முரமாகும் என்று சொல்லி, " இதைப் பற்றி நான் என்ன சொல்லுவது?" என்று கேட்டார். பிறகு தாம் சொன்னது எனக்கு விளங்கிற்றா என்று கேட்டார். எனக்கு விளங்கவில்லை யென்றேன். சுவாமி அந்த அம்மையார் இருந்த வீட்டைப் பற்றிய விவரங்கள் சொல்லி, வீட்டில் முன்புறம் மரக்கிராதி இருக்குமென்று சொன்னார். தாம் சொன்னது அந்த வீட்டில் நோயாக இருந்த மங்கத்தாயம்மாவைப்பற்றி என்றும் கூறினார். நோய் என்புருக்கி நோயாக முற்றி அந்த அம்மையார் சிறிது காலத்திற்குப் பிறகு இறந்து போனார்.

இதற்குப்பின் என் தாயாருடைய அக்காவின் பேத்திகள் இருவருள் ஒருத்தி நோயாக இருந்தாள். அவள் உடல் நலமுறுவாளா என்றும் மணமாகாத அவள் பெண்ணைப் பற்றி என்ன செய்வது என்றும் தெரிந்துகொள்ள விரும்பினேன். இம்முறையும் ஒரு சனிக்கிழமை புறப்பட்டுப் போய் நாராயணவரம் பெருமாள் கோயில் மண்டபத்தில் படுத்து உறங்கினேன். விழித்தெழுந்தபோது சுவாமி, கிழக்கு மேற்காக இருந்த வீதியில் தென்புறம் எனக்கு நேர் எதிராக இருந்த வீட்டுத் திண்ணையில் உட்கார்ந்திருந்தார். நான் சென்று அவரை வணங்கி முகம் கழுவிக் கொள்ள ஆற்றுக்குப் போனேன். நான் திரும்பி வந்த

போது அவர் ஆவுல நாராயணசாமி நாயுடு வீட்டுத் திண்ணையிலிருந்தார். (பிறகு, இங்கேதான் அவர் மிகுதியாகத் தங்குவது) அவரோடு பலர் இருந்தனர். நான் கேட்க வேண்டியதைப் பற்றி மிகுதியாக எண்ணிக் கொண்டிருந்தும் கேட்கத் துணியவில்லை. சுவாமியே என் சட்டைப் பையிலிருந்த கடிகாரத்தை எடுத்தார். வேடிக்கையாக அங்கிருந்தவர்களுள் ஒருவர் அது என்ன சொன்னது என்றுகேட்டார். இதற்குச் சுவாமி, முன்பு சொன்ன மணமாகாதிருந்த பெண் பெயரைச் சொல்லி அவள் தாயார் நிலைக்காக வருந்தி கண்ணீர் விட்டு அவள் மிகவும் இளைத்து விட்டதாகவும் ஒன்றும் செய்வதற்கில்லை யென்றும் சொன்னார். பெண்ணின் தகப்பனார், பாட்டனார் பெயர் சொல்லி, மணமாகாத பெண்ணுக்காக நான் ஆவன செய்ய வேண்டுமென்றும் விரைவில் நல்ல குடும்பத்தில் மணமாகு மென்றும் இதனால் அவள் நல்ல நிலையிலிருந்து கொண்டு மற்றவர்களுக்கு உதவி செய்ய முடியும் என்றும் சொன்னார். சுவாமி சொன்னது நேராகவும் பெயர்ப்பொருத்தங்களுடனுமிருக்கவே மனித எல்லைக்கு மேற்பட்ட அறிவும் ஆற்றலும் சுவாமி காட்டியதைக் குறித்து வியப்படைந்தேன்.

மித்தே கண்டிகா என்ற இடத்திற்கு வென்லக் பிரபு வருவதாக இருந்தார். கர்லஞ்சென்ற மஹாகனம் H. F. க்ளாக்ஸ்டவுன் அவரோடிருந்தார். அவரோடு (Camp Clerk) ஆகச் சென்று பஞ்சத்தால் பீடிக்கப் பட்டிருந்த இடங்களுடைய படத்தோடு அந்த இடங்களைப் பார்ப்பதற்காக என்னை நியமித்திருந்தார்கள். நாராயணவரம் வழியாக நான் செல்லவேண்டியிருந்ததால் சுவாமியைப் பார்த்து வணங்கி அவரோடு உணவருந்தினேன். ஆறுமணிக்குப் பிரபுவும் மற்றவர்களும் குறித்த இடத்திற்கு வருவார்கள் என்று என்னை அதற்குள் அங்கே இருக்கச் சொல்லியிருந்ததால் பகல் இரண்டு மணிக்குப் புறப்படுவதற்காகச்

சுவாமியை உத்தரவு கேட்டேன். சுவாமி போவதற்கு உத்தரவு எளிதாகத் தரவில்லை. அடுத்த நாள் வரை நான் போவதற்குத் தேவையில்லை என்றார். நான் அன்று மாலையே போனேனெனினும் வென்லக் பிரபு அடுத்த நாள் மாலை தான் வந்தார்.

ஒரு முறை நான் சென்றபோது சுவாமி முன்னிலையில் மூன்று வகையான யோகப் பயிற்சிகள் செய்தேன். இவற்றில் மூன்றாவதின் பயனை எனக்குக் கூட்டுவிப்பதற்காக அவர் என்னை இருபது வீடுகளுக்கு அழைத்துச் சென்றார். இவ்வீடுகளிலெல்லாம் உண்பதற்கு ஏதாவது கொடுத்தார்கள். இவற்றுள் முதல் வீட்டிலும் கடைசி வீட்டிலும் (இங்கே ஒரு திருமணம் நடந்து கொண்டிருந்தது.) இந்துக்கள் வழக்கப்படி விருந்துச்சாப்பாடு கிடைத்தது. எங்கள் இருப்பிடத்திற்குத் திரும்பியவுடன் உணவு அளிக்கப் பட்டது. கொடுத்த எல்லாவற்றையும் நான் உண்டது வியக்கத்தக்கதாக உள்ளது. சுவாமி சொற்படி நடக்க வேண்டுமென்ற முழு நம்பிக்கையோடு நடந்து கொண்டதால் இவ்வாறு செய்ய முடிந்தது.

வேறொரு முறை, சுவாமியைப் பார்த்து அவர் பெருமையைப் பற்றித் தாமே கண்டறிய வேண்டுமென்று P. ஐயாசாமி முதலியார் M A, B L, என்னுடன் வந்தார். அவர் சுவாமியை வணங்கியவுடன் தம்மைச் சோதிப்பதற்காக அல்லவா அவர் வந்தது என்று சுவாமி முதலியாரைக் கேட்டார். முதலியார் செடிகளைப் பற்றித் தெரிந்துகொள்ள வேண்டுமென்று நினைக்கவே, சுவாமி கண்டிகையிலிருந்து நாராயணவரம் வரும் வழியிலே இருநூறுக்கு மேற்பட்ட வகைச் செடிகளைக் கொடுத்தார். முதலியார் தம் சட்டைப் பைகளில் இவற்றை நிரப்பிக் கொண்டாரேனும் அவற்றைப் பற்றிச் சுவாமி கூறிய விவரங்களை உணர்ந்து கொள்ள முடியாமல் திகைத்து விட்டார்.

ராய் பஹதூர் N. ரத்தினசபாபதி பிள்ளை B.A.B.C.E. அவர்களுடைய மகள் திருமணத்தின்போதுதான் சுவாமி; நாங்கள் அவரோடு பழகியதற்குப் பிறகு, முதல் முதலாகச் சென்னைக்கு வந்தது. அப்போது சுவாமியும் கண்ணுக் குட்டிச் சுவாமி என்ற வேறொரு சுவாமியும் வியக்கத்தக்க வகையில் நோய்களைப் போக்கினார்கள். ஆனால் இதில் சிறப் பாகக் குறிப்பிடத்தக்கது என்னவென்றால் சுவாமி தம்மிடம் வந்தவர்களின் பெயரைச் சொல்லி அவரவர் துன்பங்களைப் போக்கி அவர்களுக்கு ஏற்ற வழியை அவர்கள் மட்டும் உணர்ந்து கொள்ளும்படிச் சொன்னது தான். இதனால் முதலில் நம்பிக்கை இல்லாதிருந்த (I.G. of Registration) ஆபீஸிலிருந்த V. செங்கல்வபதி நாயுடு சுவாமியின் பெருமையை உணர்ந்து அவர் அறிவையும் ஆற்றலையும் கண்டு வியந்தார். செடி, கொடிகளில் ஆண் பெண் தன்மையைப் பற்றிய நிகழ்ச்சிகளைக் குறித்து நாயுடு அவர்கள் சுவாமியைக்கேட்ட கேள்விகளுக்குக் கிடைத்தபதில் விஞ்ஞான நூல்களுக்கு முழுவதும் பொருந்துவதாயிருந்தது.

வேறொருமுறை நான் சுவாமியோடிருந்தபோது—(இது 1891. அல்லது 1892–ல் இருந்திருக்கலாம்) இருபது அல்லது இருபத்திரண்டு வயதுடைய ஒரு இளம் பெண் ஒரு கிழவியோடும் ஒரு மனிதனோடும் நான்கு அல்லது ஐந்து வயதுள்ள தன் மகனை அழைத்து வந்தாள். பழங்களும் தின்பண்டங்களும் கொண்டு வந்திருந்தாள். அந்தப்பெண் எதுவும் சொல்வதற்குமுன் சுவாமி அவர்களையெல்லாம் போய்விடச் சொன்னார். ஆனால் அவர்கள் சற்று நேரம் நின்று பிறகு மெதுவாக வருத்தத்தோடு போகத் தொடங்கி னார்கள். சுவாமி அவர்களை அழைத்து சிறுவனின் தாயா ரைப் பார்த்து ஏன் அவள் கணவன் போகவேண்டா மென்று தடுத்தும் நம்பிக்கையின்றியிருந்தும் வந்தார்கள்

என்று கேட்டார். அவள் கணவன் கட்டிடம் கட்டும் வேலையில் இருப்பதாகவும் லஞ்சம் வாங்குவதாகவும் ஒழுக்கக்கேடு உடையவனுயிருப்பதாகவும் சொன்னூர். பிறகு சிறுவனின் தலையில் இருந்த சதைவளர்ச்சிக்கு வேப்பிலையை நன்ருக அரைத்துப் போட்டால் சதைவளர்ச்சி நின்றுவிடுமென்றும் சிறுவனின் தகப்பனுரைத் தம்மிடம் அழைத்து வந்தால் அவனைத்திருத்தி நல்வழிப்படுத்துவதாகவும் சொன்னூர். அவர்கள் திரும்பிப் போவதற்குமுன் என்னிடம் அந்தப் பெண்ணின் கணவன் (D.P.W.) பெரிய வேலையிலிருந்ததாகவும் சிறுவனுக்குத் தலையில் சதை வளர்ச்சி இருந்ததால் ஐரோப்பிய வைத்தியர்கள் ரண சிகிச்சை செய்ய முடியாதென்று சொன்னதாகவும் வளர்ச்சி மிகுதியாக ஆகச் சிறுவனுக்குக் கண்பார்வை குறைந்து வந்ததாகவும் சொன்னூர்கள்.

இந்தச் சமயத்தில் கோதாவரி ஜில்லா கலெக்டர் எனக்குக் காகிஞடா பட்டணத்தில் (Sub Magistrate) வேலை தருவதாகச் சொன்னூர். என் குடும்ப நிலைக்காகவும் வேறு சில காரணங்களுக்காவும் இந்த வேலையை ஒத்துக்கொள்ள முடியாமலிருந்ததால் அவருக்கு என் நன்றியையும் வர முடியாமையும் தெரிவித்தேன். சுவாமிக்கு இது மகிழ்ச்சி அளித்தது. இதற்குப் பிறகு சூளூர்பேட்டை உதவி தாசில்தாராக நெல்லூர் ஜில்லாவைச் சேர்ந்த வெங்கடகிரி பிரிவுக்கு மாற்றப்பட்டேன். 1895-ஆம் ஆண்டு செப்டம்பர் 25-ஆந் தேதி (Board of Revenue) ஆபீஸில் (Settlement Branch) இருந்த வேலையை ஒப்புவித்துவிட்டு நெல்லூர் ஜில்லாவில் புது வேலையை ஒத்துக்கொள்ளப் போகும் வழியில் சுவாமியைப் பார்த்து வணக்கம் செலுத்தினேன். அவரிடம் விடைபெறும் போது, கலெக்டர் என்னைப் பற்றி நல்லெண்ணம் கொண்டிருந்ததாகவும் அரசாங்கத்தார் என் வேலையைப் பற்றி

அவ்வாறில்லையென்றும் சுவாமி சொன்னார். அவரைத் தெரிந்துகொண்டு அவரையே நம்பியிருந்ததால் எனக்கு எதைப்பற்றியும் கவலை இல்லையென்று சொல்லி விடை பெற்றேன். பிறகு வெங்கடகிரி சென்று அங்கிருந்து அப்போது கூடூர் தாசில்தாராக இருந்த E. சீதாராம ராவ் நாயுடு அவர்களோடு கூடூருக்கும் நெல்லூருக்கும் சென்றேன். அங்கே (Head Asst. Collector) இவர்களைப் பார்த்து 1895-ஆம் ஆண்டு அக்டோபர் முதல் தேதி வேலையில் சேர்ந்தேன். இதற்குப் பிறகு நான் (Precis Test) தேர்வு பெறவில்லையென்று அரசாங்கத்தார் அத்தேர்வினின்றும் விலக்கு அளிக்க மறுத்தார்கள். அடுத்த (Precis) தேர்வுக்கு நான் விண்ணப்பம் செய்திருந்தேன். தேர்வுக்காகச் சென்னைக்குப் போகும் வழியில் நாராயணவரம் சென்று சுவாமியைப் பார்த்து வணங்கினேன். அவர் அப்போது படுத்துக்கொண்டிருந்தார். நான் அருகே சென்றவுடன் எழுந்து எனக்காகத் தாம் வெகுதூரம் சென்றதாகவும் எல்லாம் நல்லபடி முடிவானதாகவும் சொன்னார். சிறிது நேரம் தங்கி, மாலையில் விடை பெற்றுக்கொண்டு பிறகு அடுத்த நாள் காலையில் தேர்வில் கலந்து கொண்டு Hon. Mr. Grose I.C.S. அவர்களைப் பார்த்தேன். என் நிலைமையை அவருக்குச் சொன்னதும் அவர் முன்பு பிறப்பித்த உத்தரவை மீண்டும் கவனிப்பதாகச் சொன்னார். பிறகு, நான் அரசாங்கத்தாருக்குக் கலெக்டர் மானவேதன் ராஜா I.C.S. அவர்கள் மூலமாக விண்ணப்பம் செய்தேன். (Precis Writing) தேர்வு எனக்கு வேண்டாமென்று உத்தரவாயிற்று. இந்த உத்தரவு வருவதற்குள் தேர்விலும் வெற்றி பெற்றேன். இதற்குள் என்னை மறுபடியும் பழைய வேலைக்கு மாற்றி என் இடத்தில் ந. முஹம்மது ரஜா சாஹேப் பகதூரை நியமித்திருந்தார்கள். ஜெய்ம்பு என்ற இடத்தில் நான் முகாமிலிருந்ததால் அவர் எனக்குத்

தம்மிடம்பதில் வேலையை ஒப்புவிக்கும்படி ஒரு கடிதம் எழுதினார் அரசாங்க உத்தரவின் நகல் எனக்குக் கிடைக்காததால் நான் கலெக்டரிடம் சென்று அவர் உத்தரவு பெற்று வேலையை ஒப்புவித்தேன். இரண்டு மூன்று நாட்களில் மீண்டும் இவ்வேலையையே ஏற்றுக் கொண்டேன். ஏனென்றால் அதற்குள் அரசாங்கத்தார் எனக்கு (Precis) தேர்வில் அளித்த விலக்கு உத்தரவு கிடைத்தது. முன்பிருந்த கலெக்டர் அனந்தபூருக்கு மாற்றப்படவே T. H. (Lefanu) நெல்லூர் ஜில்லா கலெக்டரானவுடன் மறுபடியும் வெங்கடகிரி பிரிவை எனக்குக் கொடுக்க உத்தரவு செய்தார். பின்பு ஒருமுறை கூட தவறு ஒன்றும் நான் செய்யாதிருந்தும் எனக்குக் கொடுத்திருந்த பெரிய வேலையை ஒப்புவித்த பிறகும் இருந்த இடத்திலேயே இருந்தேன். மூன்று, நான்கு நாட்களுக்குள் மறுபடியும் அந்த வேலையை என்னையே பார்க்கச் சொன்னார்கள். அந்த மூன்று நான்கு நாட்களுக்கும் முழுச் சம்பளம் கொடுத்தார்கள்.

நடக்கக்கூடிய நிகழ்ச்சிகள் என்பவை நடப்பதற்கு முன்பே முடிவாகின்றன போலும். நடக்கப் போவதை முன்னதாகவே சுவாமி அறிந்து தெரிவித்ததை விளக்கப் பல நிகழ்ச்சிகள் உண்டு.

1893-ஆம் ஆண்டில் நான் M.A. தேர்வுக்குச் சென்ற போது தத்துவ சாஸ்திரத்தில் நான் தேர்வு பெற உறுதி கொண்டதுபற்றிச் சுவாமி மகிழ்ந்து, தேர்வுக்கு முன் நான் அவரைப் பார்த்தபோது, "எது சரி என்று உனக்குத் தோன்றுகிறதோ, அதை எழுது, தேர்வுக்குச் செல்லத் தவருதே—நீ வெற்றி பெறுவாய்" என்று சொன்னார். அவர் சொன்னபடியே நடந்தது.

என் முயற்சி இல்லாமலே எனக்கு (Deputy Collector) வேலை கிடைத்தது. எனினும், இது கிடைப்பதற்குக்

காரணமாயிருந்தவர்களுக்கு, அவர்களுள் முதன்மையாக இருந்த கனம் A. பட்டர்வொர்த் A. Butterworth அவர்களுக்கு என் நன்றியைத் தெரிவித்தேன். இந்த வேலையிலிருந்த போதும், அதற்குப் பிறகும் (Deputy Collector) வேலைக்கு எனக்கிருந்த உரிமையை வற்புறுத்தி விண்ணப்பம் செய்திருந்தேன். சுவாமி இவ்வாறு செய்ய வேண்டாமென்று சொல்லியிருந்தும் நான் அவர் சொற்படி நடக்கவில்லை. வேறொரு செய்தியிலும் அவர் சொன்னதை உணர்ந்து கொள்ளாமல் அவர் சொல்லை மீறினேன். இதனால் நான் வருந்த வேண்டியிருந்தது. கட்டாயமாக ஏற்பட்ட இந்த விளைவினால் நான் வருந்தினாலும் திருந்தினேன்.

சுவாமி சமாதி அடையும் வரையில் இயன்ற போதெல்லாம் அவரைப் போய்ப் பார்க்கத் தவறுவதில்லை. எட்வர்ட் மன்னர் முடிசூடிய நாளில் சுவாமி சமாதி வைக்கப்பட்டார். அதற்கு முந்திய நாள் அவர் உயிர் நீத்தார். நான் அவரைக் கடைசியாகப் பார்த்தபோது நாராயணவரம் சென்று அங்கிருந்து தம் ஊருக்குச் செல்வதாகச் சொல்லிக்கொண்டிருந்தார். என்னை இரண்டு மூன்று நாட்கள் தம்முடன் நிறுத்த விரும்பினார். எனக்கு இரண்டு மூன்று நாட்கள் விடுமுறை பெற உரிமை இருந்தும் அவர் அவ்வளவு விரைவில் சமாதி அடைவார் எனத் தெரியாததால் ஊருக்குத் திரும்ப வேண்டுமென்று வற்புறுத்தி விடை கேட்டேன். என் விடுமுறை, பின்பு அவரை வந்து பார்க்க உதவும் என்று நினைத்தேன். அவர் மனமில்லாமல் விடை கொடுத்தார். பயணம் செல்கிறவர்கள் போல முழு உணர்வோடு அவர் உயிர் நீத்தார் என்பது அவர் அதற்காக முன்னதாகச் செய்த ஏற்பாடுகளினால் தெரிகிறது.

பொதுவாக அவர் பேச்சு, உலகில் நடக்க வேண்டிய முறை பற்றியும், யோகம், தத்துவம் இவற்றைப் பற்றியுமாக இருந்தது. அவர் சொல்வது எளிதாகவும் தெளிவாகவும் இருந்ததால் கேட்பவர்கள் தங்கள் ஆற்றலுக் கேற்றவாறு உணர்ந்து கொண்டார்கள். அவர் சொல்லின் ஆழத்தையும் உட்குறிப்பையும் மிகச் சிலரே உணர்ந்தனர்.

படிக்காத உழவுத் தொழிலாளிக்கு அவர் சொல்வது தெற்றென விளங்கியது. அவர் சொல்லுவதை அப்படியே செயல் முறையில் கொண்டு வந்தாலும், அது உண்மையாகவும் நன்மை பயப்பதாகவும் இருந்தது ; படித்தவர்களுக்கும் கூர்ந்து ஆராய்பவர்களுக்கும் தத்துவ உண்மை நிறைந்ததாக இருந்தது. பாரதம், பாகவதம், இராமாயணம், பகவத்கீதை, உபநிஷதங்கள் இவைபற்றிய குறிப்புக்கள் இருந்தன. ஆனால், குறிப்பாக இவைகளைப் பற்றிக் கூறினாரே தவிர, படிப்பாளியாக அவர் தம்மைக் காட்டிக் கொள்ளவில்லை. எனினும் அவர் சொன்னவை மெய்யுணர்வு நூல்களுக்கு மிகப் பொருத்தமாக இருந்தன.

இயற்கைச் சக்திகளை அவர் அடக்குவதும், நோய்களை நீக்குவதும் வியக்கத்தக்கவாயிருந்தன. அவர் சொற்படி நடந்தால் நன்மை ஏற்படும். ஆனால் நன்மை தம்மால் ஏற்பட்டதாகச் சுவாமி சொல்லிக் கொள்வதில்லை. அவர் சொல்லும் முறைகள் அவரிடம் நம்பிக்கை இல்லாதவர்கள் ஏற்றுக்கொள்ளக் கூடியவை அல்ல. வயிற்று வலிக்கு ஒரு முறை அவர் தம் உள்ளங்கையில் ஒரு சிறு குச்சியைச் சிறிது நேரம் வைத்திருக்க அது ஒருவித பழுப்புத் தூளாக மாறிவிட்டது. அதை நோயாளியிடம் கொடுத்து சிறிதளவு காதில் போட்டுச் சில துளி தண்ணீர் விட்டால் நோய் நீங்கும் என்றார். நோய் அவ்வாறே நீங்கிற்று.

அன்றாடம் வருபவர்கள் எண்ணிக்கையையும் அவர்களைப்பற்றிய விவரங்களையும் சுவாமி முன்னதாகவே உணர்ந்து தெரிவிப்பார். மக்கள் அவரிடம் வருவதற்கு முன்பே அவர்கள் வருகையைப்பற்றி முன்னதாகக் கூறுவார்.

நான்காவது அல்லது ஐந்தாவது முறை நான் சென்ற போது அவர் நாராயணவரத்தில் ஒரு பாழடைந்த வீட்டில்

இருந்தார். அவரை வணங்கியபின் என் உணவுக்கு எங்கே யாவது ஏற்பாடு செய்வதற்காகப் புறப்பட எழுந்தேன். அவர் என்னைச் சிறிது நேரம் இருக்கச் சொல்லி, "நீ போக வேண்டாம், உனக்கும் உன் தகப்பனுருக்கும் தெரிந்த சிலர் சென்னையிலிருந்து வருகிறுர்கள்" என்றுர். கால் மணி நேரத்திற்குள் சென்னையிலிருந்து தங்கள் குடும்பத்தின ரோடு சிலர் வந்தார்கள். வேறு ஏற்பாடு செய்யவிடாது, எனக்கு வேண்டிய எல்லாவற்றையும் அவர்களே செய் தார்கள்.

பேய், பிசாசு பிடித்தவர்கள், உணர்வு கெட்டவர்கள், ஆகியவர்களை அவர் நலமுறச் செய்வது அன்றுட நிகழ்ச்சி யாயிருந்தது.

ஒருமுறை நான் என் மனைவி, குழந்தைகளோடு போயிருந்தபோது, சுவாமி எங்களோடு புத்தூர் வந்து மறுபடியும் நாராயணவரம் எங்களை அழைத்து வந்து விட்டார். நாராயணவரம் வந்தவுடன் என் மனைவிக்குக் கடுமையான உடல் வலியும் காய்ச்சலும் வந்தன. நோயை முதலில் போக்கி அதற்குப் பிறகு எங்களை அனுப்ப வேண்டுமென்று எங்களைத் திரும்ப அழைத்து வந்து விட்ட தாகச் சொன்னுர். வேப்பிலை போட்டு வைத்திருந்த தண்ணீரைக் கொடுக்கச் சொன்னுர். அன்று மாலைக்குள் காய்ச்சல் நின்றுவிட்டது. அடுத்த நாள் போவதற்கு உத்தரவு அளித்தார்.

சுவாமியுடைய பழக்கம் ஏற்பட்டபின் ஒரு ஞாயிற்றுக் கிழமை அவரோடு தங்கியிருந்து பொழுது சாய்ந்ததும் போக உத்தரவு கேட்டேன். அவர்முன் நெகிடி நன்றுக எரிந்து கொண்டிருந்தது. அவர் படுத்துக் கொண்டிருந் தார். அவரொன்றும் பதில் சொல்லவில்லை. நான் அடுத்த நாள் வேலைக்குச் செல்ல வேண்டியிருந்ததால் அவரை வணங்கிப் புறப்பட்டேன். அடுத்த தெரு செல்வதற்குள்

என் சட்டையில் பணப்பை இல்லையென்று கண்டேன். இதை நான் தங்கியிருந்த வீட்டில் தற்செயலாக வைத்து விட்டிருந்தேன். நான் திரும்பிச் சென்றதும் சுவாமி எழுந்து உட்கார்ந்துகொண்டு சிரித்துக் கொண்டிருந்தார். ஒன்றும் சொல்லாமல் நான் உள்ளே சென்று பணப்பையை எடுத்து என் சட்டையில் வைத்துக்கொண்டு வெளியே வந்து மீண்டும் சுவாமியை உத்தரவு கேட்க அவர், மகிழ்ச்சி யோடு "இப்போது போகலாம்" என்றார். இவ்வாறு, நான் பணப்பையை வைத்துவிட்டுப் புறப்பட்டதால் மீண்டும் திரும்புவேன் என்பதை முதலில் குறிப்பாக உணர்த்தினர்.

இத்தகைய நிகழ்ச்சிகளும் சிறு வரலாறுகளும் பல உண்டு. விரிக்கில் பெருகுமாதலால் அவற்றை இங்கே கூறவில்லை.

இரண்டாம் முறை சுவாமி சென்னைக்கு வந்தபோது என் வீட்டிற்கு வந்து ஓரிரவு தங்கினர். வந்தவர்களுள் சில முஸ்லிம் நண்பர்களிருந்தனர். அவர்களுள் ஒருவர் P.W. Secretariat இல் இருந்தார். அவர் நினைத்த கேள்விக்குச் சுவாமி பதில் சொல்லி அந்த முஸ்லிம் அடிக்கடி வேடிக்கையாகச் சொல்லும் ஒரு பேச்சோடு முடிந்தார். இவ்வாறு சொன்ன பதில் தமக்கென உணர்ந்த அந்த முஸ்லிம் மிகவும் வியப்படைந்தார்.

சுவாமியுடன் நானும் செங்கல்வராய முதலியார், ஆராவமுது நாயுடு—இன்னும் சிலரும் நாராயணவரத்தி லிருந்தோம். இரவு ஒன்பது மணிக்குமேல் ஆவுல நாராயண சாமி நாயுடு வீட்டின் முன்புறத்தில் சுவாமியைச் சுற்றி நாங்கள் படுத்துக்கொண்டோம். நாங்கள் படுத்த சிறிது நேரத்திற்குள் சுவாமி எழுந்து எங்கோ நடக்கும் துயர நிகழ்ச்சியைப் பற்றி உரத்துப் பேசிக் கொண்டிருந்தார். நடப்பதைப்பற்றிய முழு விவரங்களையும் விடியற்காலை

நாலுமணி வரையில் சொல்லிக் கொண்டிருந்தார். அதன் பிறகு, நடந்து விட்டதைப்பற்றி வருந்திப் பயனில்லை என்றும், தாம் குறிப்பிட்ட பெண்மணி இறந்துவிட்டதாக வும் சொல்லிப் படுத்துக் கொண்டார். விடிந்தவுடன் இறந்துபோன அம்மையாரின் உடன்பிறந்தாருக்குத் தந்தி வரவே அவர் சுவாமி உத்தரவு பெற்றுச் சென்னைக்குத் திரும்பினார். அடுத்த நாள் வேறொருவருக்குத் தந்தி வந்தது. சுவாமி அவருக்கு உத்தரவு தரும்போது தந்தி பற்றிய விவரங்களைச் சொல்லி, கவலைக்கிடமில்லை யென்றார். நாங்க ளனைவரும், இந்த நிகழ்ச்சிகளால் தெளிவான அவர் ஆற்றலைக் கண்டு வியந்தோம். அவர் பெருமைக்கு இவை களைவிட வேறு என்ன சான்று இருக்க முடியும்? அவர் சொன்னது அனைத்தும் உண்மை என்பது தெளிவாயிற்று.

**சுவாமியின் பேச்சும் செயல்களும்:** சுவாமி, தம் பேச் சாலும் வாழ்க்கையாலும் தம்மிடம் வந்தவர்கள் நன்றாக உணரும்படிச் செய்த உண்மைகள் இரண்டு:-(i) பேரன்பு— கலப்பில்லாத, எல்லாருக்கும் பொதுவான அன்பு — (ii) எண்ணத்திலும் செயலிலும் பற்றற்றிருத்தல். இவற்றில் ஒன்றைச் சர்க்கரையாகவும் மற்றொன்றை உப்பாகவும் அவர் குறிப்பிடுவது வழக்கம். அவர் சொல்வதைக் கேட்டவர்கள் தத்தம் ஆற்றலுக்கு ஏற்றவாறு பொருள் உணர்ந்துகொண்டார்கள். யோகத்தைப் பற்றித் தெரிந்த வர்கள் அதற்கேற்றவாறு புரிந்து கொண்டார்கள்.

இறப்பை அவர் திரைக்குள் மறைவாகக் குறிப்பிட் டார். இறப்பதால் அழிவு ஒன்றும் இல்லையென்றும் நிலைமை மாறுதல் தவிர வேறொன்றும் இல்லையென்றும் நல்ல வழியில் நடப்பவர்கள் இந்த உலகத்திலிருந்து மறைந்து விட்டாலும் முன்னேறிக்கொண்டு செல்வார்கள் என்றும் சொல்லுவார்.

பொருளுணர்ந்து சொற்களைத் திரும்பத் திரும்பச் சொல்லும் வழிபாட்டு முறையை அவர் விரும்பவில்லை. இதைப் போலவே ஹடயோகப் பயிற்சிகளை மேற்கொள்ளுவதையும் அவர் விரும்பவில்லை. இவற்றால் சில வேளைகளில் உடலுக்குக்கெடுதி நேரிடலாம்—உடல் அழிந்தே போகவும் கூடும் என்றும் கூறுவார். பெட்டைக் கோழியைக் கட்டிப் போட்டால் அதன் குஞ்சுகள் அதன் அருகிலேயே இருக்குமென்றும் மூச்சை அடக்கவோ, பார்வையை குறித்த ஓர் இடத்தில் செலுத்தவோ தேவையில்லையென்றும் சொல்லுவார்.

எண்ணங்களை அடக்கி அவற்றை நல்வழிப்படுத்துவது ஒன்றே நம் சிறுமை நீங்கி நம் உயிரின் பெருமையையும் சமயத்தின் மறைபொருள்களின் அழகையும் உணரவழியென்றும் இடைவிடாது சொல்லிவந்தார். உள்ளத்தை ஒரு வயல் அல்லது தோட்டத்திற்கு ஒப்பிட்டு வளர்ச்சிஏற்படுவதற்கு வேண்டிய முறைகளைச் சொல்லுவார். தம்மிடம் வந்தவர்களுடைய உள்ளத்தில் நிகழ்வது அவருக்குத் தெரியுமாதலால் தம்மிடம் அன்பு கொண்டிருந்தவர்களுடைய எண்ணங்களின் தவறான போக்கை எடுத்துச் சொல்லி அவர்கள் உணரும்படிச் செய்வார். நான் அவரிடம் சென்ற போதெல்லாம் என்னை முதலில் வாழ்த்தி ஊக்கம் கொள்ளும்படி அன்பாகப் பேசி நான் அதற்கு முன் அவரைப் பார்த்ததிலிருந்து அன்று வரை நடந்தவைகளைக் குறிப்பிட்டு வீணாக நான் கோபப்பட்டிருந்தால் அல்லது வேறு ஏதாவது பிழை செய்திருந்தால் என்னைக் கண்டிப்பார். அவர் மறைவுக்குப் பின் அவ்வாறு என்னைத்திருத்தவோ சரியான பாதையில் செலுத்தவோ ஒருவரும் இல்லாது போனது குறித்து மிகவும் வருந்துகிறேன்.

சில சிறுவர்கள் பனைமரத்தில் உள்ள காய்கள் மீது கற்களை எறிந்து கொண்டிருந்தனர். இதை எனக்கும் மற்றவர்களுக்கும் சுட்டிக்காட்டி அவர்கள் முயற்சி வீணானது என்றும் விரும்பிய பொருள் கிடைக்கச் செய்ய வேண்டிய வழிகள் எவை என்றும் உயிர் மெய்யுணர்வு பெறச்செய்ய வேண்டிய முயற்சிகள் இன்னின்ன என்றும் சொன்னார்.

தனக்கும் பிறர்க்கும் துன்பமுண்டாக்கும் தீச்செயல்களையும் தீய எண்ணங்களையும் நீக்கவேண்டும் என்ற குறிப்போடு முட்களையும் நாகதாளியையும் நீக்க வேண்டுமென்று அடிக்கடி சொல்லுவார். மேலும் எப்போதும் மக்களுக்கும் விலங்குகளுக்கும் நன்மை செய்ய வேண்டுமென்று வற்புறுத்தி வந்தார்.

நம்மாழ்வாரையும் மற்ற பெரியார்களையும் பற்றி ஒரு முறை நாங்கள் பேசிக்கொண்டிருக்கும்போது எங்களருகே அவர் வந்து உட்கார்ந்துகொண்டு அப்பெரியார்களின் தன்னலமற்ற அருள்தொண்டு, கடவுளிடத்துப் பேரன்பு முதலியனபற்றி விரிவாகச் சொன்னார்.

மற்ற சமய ஆசிரியர்களைப் போல, அவர் சொற்பொழிவு செய்வதில்லை. பொதுவாகக் குரு என்பவர் தம் மாணவர்களுக்குத்தரும் பாராயணச் சொற்றொடர்களைத் தருவதில்லை—சைவனோ, வைணவனோ, கிறித்துவனோ, முஸ்லிமோ—ஒருவன் நல்லவனாகவும் உண்மையுள்ளவனாகவுமிருந்தால் அவனைப்பாராட்டி, மேற்கொண்டு ஒழுகுவதற்கு வேண்டிய அறவுரையோ செயல் முறையோ அவனுக்கு அருள் செய்வார். தம் வாய்திறவாமலும் ஒரு சொல்லும்

கூறும்லும் தம்மினும் வயதில் மூத்திருந்த மாணவர்களின் ஐயங்களைப் போக்கிய பேராசிரியரைப்போல, சுரைக்காய் சுவாமியும் பேச்சினால் ஏற்படுத்தக்கூடிய விளக்கத்தைவிட மிகுதியான அறிவுரையைத் தம் பேச்சின்மையாலும், செயல்களாலும் தம் வாழ்க்கையாகிய எடுத்துக்காட்டா லும் அளித்தார். அவர் தொண்டும் அவரைப்போன்ற பிறர் தொண்டும், அவர்கள் சொற்படி நடப்பவர்களுக்கு என்றும் நன்மை தருவன. அவர்கள் தொண்டின் எதிரொலியாக நன்மையே விளையும். அவர்கள் தொண்டு என்றும் தொடர்ந்து வாழ்வதாக!

(கையொப்பம்) **குப்புசாமி செட்டி.**

---

## சென்னை, (Retired Income Tax Inspector.)

## M. இராமசாமி ஐயா

### அவர்கள் அனுபவங்கள்.

பதினைந்து பதினாறு ஆண்டுகளுக்குமுன் எழும்பூரில் ஆராவமுது நாயுடு வீட்டுக்குச் சுரைக்காய் இராமசாமி அவர்கள் வந்தபோதுதான் முதல் முதலாக நான் அவரைப் பார்த்து வணங்கும் பேறு பெற்றேன்.

அன்று முதல் சுவாமியிடம் எனக்குப் பணிவு மிகுதி யாயிருந்தது. ஏனெனில் அவரைப் பார்த்தது முதல் அவர் ஒரு பெரியவர் என்ற கருத்து என் உள்ளத்தில் பதிந்தது. இதற்கு அடையாளமாக நான் அவரடி பணிந்து வணங்கியதும் எனக்கு உலகியலில் ஒரு தேவையுமில்லையென்றார். ஏனென்றால் நான் என் விருப்பங்கள் நிறைவேற வேண்டுமென்று அவரிடம் செல்லவில்லை.

சுவாமியிடம் சென்ற போதெல்லாம் எனக்கு உள அமைதி இருந்தது. உலகப் பொருள்கள் வேண்டுமென்று கேட்பது வீண் என்று தோன்றிற்று. சமய நூல்களில் யோகிகளுக்கு உள்ளனவாகச் சொல்லப்பட்ட எல்லா ஆற்றல்களும் தம்மிடம் உடையவராகச் சுவாமி எனக்குத் தோன்றினார்.

(கையொப்பம்) M. **இராமசாமி ஐயா.**

---

திருத்தணிகை தாலுக்காவைச் சேர்ந்த
திருவாலங்காட்டில் குடியிருக்கும் வட ஆர்க்காடு
கார்வேட் நகர சமஸ்தானத்தின் மாமல்தாராக இருந்த

## T. C. சுப்பையர்
## அவர்களின் அனுபவங்கள்.

1866-ஆம் ஆண்டிலிருந்து சுவாமியை எனக்குத் தெரியும். மிகப் பெரிதாக இருந்த நகரம் சமஸ்தானத்தின் மாமல்தாராக இருந்த எனக்கு அந்தச் சமஸ்தானத்தைச் சேர்ந்த கோயில்களை மேற்பார்வையிட்டு அறநிதிகள் போன்றவை செவ்வையாகச் செலவு செய்யப்பட்டு வருகின்றனவா என்று பார்க்கும் பொறுப்பு இருந்தது. பிரம்மஞான சங்கத்தை ஏற்படுத்தி அதன் தலைவர்களாக இருந்த H.B. Blavatsky ப்ளாவட்ஸ்கி அம்மையார், Colonel Olcott கர்னல் ஆல்காட் ஆகியவர்கள் 1885-ஆம் ஆண்டில் நகரிக்கு வந்தார்கள். கார்வேட் நகர மஹாராஜாவாக இருந்த குமார வெங்கடபெருமாள் ராஜா பஹதூர் தேவமஹாராஜா வந்தவர்களை அழைத்துச் சென்று சமஸ்தானத்தில் பார்க்க வேண்டிய இடங்களைக் காட்டி வரச் சொன்னார். அவர்கள் சுவாமியைப் பார்த்து வணங்க விரும்பினார்கள். பழங்கள் முதலியன கொண்டுவந்து சுவாமிக்குக் கொடுத்தார்கள். சுவாமியை வணங்கி அவரிடம் குறிப்பாகச் சிலவற்றைப்பற்றி அறிவுரை கேட்டார்கள். சுவாமி, "நான் என்ன சொல்லுவது? இதுவரையில் சமயத் துறையில் கறுப்புக் காக்கைகள் உழைத்து வந்திருக்கின்றன. இப்போது வெள்ளைக் காக்கைகளும் இவற்றோடு ஒத்துழைக்கத் தொடங்கியுள்ளன" என்று பதில் சொன்னார்.

சுவாமியைப் பார்க்க வந்தவர்கள் திரும்பிப் போவ தற்குள் நான் எதிர் வீட்டிற்கு ஒரு வேலையாகப் போக வேண்டியிருந்தது. அங்கே ஒரு பெரிய தேள் என் விரலில் கொட்டிவிட்டது. வலிதாங்க முடியாமல் நான் குழந்தை யைப்போல் அழுதுகொண்டு சுவாமியிடம் ஓடினேன். அவ ரோடு நான் நெருங்கிப் பழகியிருந்ததால் அவர் தாடியைப் பிடித்துக்கொண்டு உதவி செய்ய வேண்டுமென்று அவ ருக்கு உத்தரவு இடுவதுபோல, "என்னால் வலிதாங்க முடிய வில்லையே, வலிதாங்க முடியவில்லையே" என்று கத்தினேன். சுவாமி "ஐயோ, பாவம்! நான் என்ன செய்வது? சாணியைத் தடவு" என்றார். இது எனக்குப் போது மென்று தோன்றியது. அவர் சொற்படியே நடந்து வலி நீங்கக் கண்டேன். வழக்கம்போல் வலி மெதுவாக நிற்காமல் உடனே நின்றுவிட்டது. இந்த நிகழ்ச்சி ப்ளாவட்ஸ்கி அம்மையார், கர்னல் ஆல்காட் ஆகியவர் களின் முன்னிலையில் நடந்தது.

வேறொரு முறை நான் மிகவும் நோயுற்றிருந்தபோது பிழைக்க மாட்டேன் என்று கவலைப்பட்டார்கள். பற்பல மருந்துகள் சாப்பிட்டும் நன்மை ஏற்படவில்லை. சுவாமி யிடத்தில் மிகவும் நம்பிக்கைக் கொண்டிருந்த கார்வேட் நகர ராஜா, சுவாமியிடம் போய் என்னை ஒப்புவித்து விட்டால் அவர் என்னைக் காப்பாற்றுவார் என்று சொன்னார். அவ்வாறே நான் சுவாமியிடம் சென்று அவரடி பணிந்து என் குறையைச் சொன்னேன். சுவாமியை அணைத்துப் பிடித்துக்கொண்டு என்னை நலமுறச் செய்தா லன்றி அவரை விடுவதில்லையென்றேன். அவர் என்னைக் கஞ்சி சாப்பிடச் சொன்னார். என்ன கஞ்சி என்று விளங் காததால் அவரைக் கேட்பதற்குள் அவர் அந்த இடத்தை விட்டுச் சென்று ஏழு மைல்களுக்கு அப்பால் உள்ள கொப்பேடு என்ற ஊருக்குப் போய்விட்டார். இந்த

நிலையில் என்னை விட்டுச் சென்றதற்கு மனம் தளராது நான் அவரைத் தேடிச்சென்று கொப்பேட்டில் காலை பதினொரு மணிக்கு அவரைப் பார்த்தேன். "என்ன தாதா, என்னை ஏமாற்றிவிட்டு நலமுறச் செய்யாமல் வந்துவிட்டீர்களே! நீங்கள் தாம் என்னை நலமுறச் செய்ய வேண்டும்" என்று சொன்னேன். அந்தச் சமயத்தில் அவர் அடியார்களுள் ஒருவர் அவருக்கு வெற்றிலைபாக்கு மடித்துக் கொடுத்துக் கொண்டிருந்தார். சுவாமி என்னிடம் சிறிது தர, நான் அதை விழுங்கினேன். அரைமணி நேரத்திற்குள் நோய் நீங்கிவிட்டது. அன்று மாலை எனக்கு உடம்பு சரியாகி விட்டது.

முல்லா சாயபு தெருவில் குடியிருந்து (A. G.'s Office) ஆபீஸில் வேலைபார்த்து வந்த ஒருவருடைய மனைவி, மாணிக்கம்மாள் என்பவர் மிகக் கொடிய தொழு நோயால் பல ஆண்டுகளாக வருந்திக் கொண்டிருந்தார். பல மருந்துகள் சாப்பிட்டும் நன்மை ஏற்படவில்லை. சுவாமி வியக்கத்தக்க வகையில் நோய்களைப் போக்குவதைக் கேட்ட அந்த அம்மையார் அவரோடு சில நாட்கள் தங்கினார். ஒரு நாள் சுவாமி அவர்களை அழைத்து ஒரு பிடி சோறு கொடுத்தார். அந்த வினாடியிலிருந்து அவர்கள் நலமுறத் தொடங்கினார்கள். சீழ் நின்றுவிட்டது. கண்ணுக்குத் தெரியும் வகையில் மாறுதல் ஏற்பட்டது. ஒரு வாரத்திற்குள் நோய் முழுவதும் நீங்கிவிட்டது. கடப்பை ஜில்லாவில் தாசில்தாராக இருந்த நரசிங்கராவ் என்பவருடைய தொழு நோயையும் சுவாமி போக்கினார். மேனாட்டிலும் நம் நாட்டிலும் தொழு நோய் நீக்க முடியாதது என்று கூறப்படுகிறது! எனக்குத் தெரிந்த வரையில் குறைந்தது ஐந்தாறு பெயர்களுடைய தொழு நோயைச் சுவாமி நீக்கியுள்ளார்.

தம்மிடம் வந்த எல்லோருடைய நோய்களையும் சுவாமி நீக்கவில்லையென்பது உண்மையே. இறைவன் திருவுள்ளம் நம்மால் அறிய முடியாதது. பெரியவர்களின் உள்ளமும் அத்தகையதே. அவர்களுடைய வழிகளை நாம் உணர்ந்து கொள்ள முடிவதில்லை. நீக்க முடியாதது என்று கருதப் படும் தொழு நோயை நீக்குவது—வெறும் காய்ச்சல் அல்லது ஏதாவது சிறிய நோயை நீக்காதிருப்பது—இவை எதனால் என்று நாம் தெரிந்துகொள்ள முடியவில்லை. என் மைத்துனர் T. இராமச்சந்திர ஜோஸ்யரும் அவர் உடன் பிறந்தார் சுப்பா சாஸ்திரியும் குடல் புண்ணால் வருந் தினார்கள். சுவாமிக்குத் தின்பண்டங்கள் கொண்டுசென்று அவர் அவற்றை ஏற்றுக்கொண்டால் தம் நோய் நீங்கு மென்று அவர்கள் எண்ணினார்கள். சுவாமி அவர்களை ஏறெடுத்துக்கூடப் பார்க்கவில்லை. அவர்கள் கொண்டு சென்ற தின்பண்டங்களையும் தொடவில்லை. அவர்கள் நோய் நீங்காமல் பின்னர் இறந்து போனார்கள் என்று சொல்லத் தேவையில்லை.

(கையொப்பம்) T. C. **சுப்பையர்.**



## M. & S. M. ரெயில்வே
## (Chief Auditor ஆபீஸ் அகௌண்டண்ட்)

# A. அப்பளராவ்
## அவர்கள் அனுபவங்கள்.

சுவாமியின் பெருமையில் நம்பிக்கையின்றி, அவர் அடியார்கள் அவருக்குச் செலுத்திய அன்பையும் வணக்கத்தையும் நான் ஏளனம் செய்த காலமுண்டு. அவர் ஒரு பெரியவர் என்பதை ஒப்புக் கொண்டாலும் "எதற்காக அவர்முன், கடவுளுக்குச் செய்வதுபோல் கற்பூரம் ஏற்ற வேண்டும்? ஒருவேளை சுவாமிக்கு மிகுதியான தற்பெருமை இருந்ததால்அடியார்கள் ஆர்வத்தால் இவர் பெருமைக்காகச் செய்தவற்றை ஏற்றுக்கொண்டு வந்தாரா? எளிய, கள்ள மற்ற கிழவனும், சூழ்ச்சிக்காரருமான அவர் அடியார்களும், பொதுவில் நடந்துகொள்வது மக்களை ஏமாற்றிப் பணம் பறிக்கும் இழிவான நோக்கத்துடன் அல்ல என்று சொன்னாலும், எதற்காகக் கடவுளுக்கும் அவர் உருவத்திற்கும் மட்டும் செலுத்தும் வணக்கத்தை வெறும் மனிதரான இவர் ஏற்றுக்கொள்வது?"

இவ்வாருக நான் நினைப்பதுண்டு. சுவாமியுடைய அரும்பெரும் ஆற்றலில் அளவற்ற நம்பிக்கை கொண்டிருந்த காலஞ்சென்ற நம்மைய நாயுடு சுவாமியைப் பார்ப்பதற்காக என்னைத் தம்முடன் வரும்படி அடிக்கடி சொல்வதுண்டு. நான் ஏதாவது காரணம் சொல்லிப் போகாதிருந்து விடுவேன்.

1901–ஆம் ஆண்டில் சுவாமி சென்னைக்கு வந்தபோது திருவல்லிக்கேணியில் பேரி திம்மப்ப நாயுடு வீட்டில் தங்கி

யிருந்தார். விருப்பமில்லாமல் நான் என் நண்பரோடு ஒரு சனிக்கிழமை இரவு அங்கே சென்றேன். அடுத்த நாளும் அங்கே இருந்து எல்லாவற்றையும் பார்த்து, என் நம்பிக்கை இன்மைக்குக் காரணம் தேடி, சுவாமியின் அடியார்களைவிட நான் அறிவில் மேலானவன் என்று காட்டிக்கொள்ள நினைத்தேன். வழக்கமாக உறங்கும் நேரத்திற்கு முன்பே அன்றிரவு எல்லோரும் படுத்துக்கொண்டார்கள். எனக்குத் தூங்க முடியவில்லை. கொசுக்கடித் தொல்லையும் வெறும் தரையில் படுக்கும் இடைஞ்சலும் சேரவே நான் திண்ணை மீது உட்கார்ந்து கொண்டிருந்தேன். சரியாகப் பதினொரு மணிக்குச் சுவாமி படுக்கையைவிட்டு எழுந்து வெளியே வந்தார். அவரைப் பார்த்தவுடன் மரியாதைக்காக எழுந்து நின்றேன். அவரைப் பார்த்துக்கொண்டு, மூலை முடுக்கு களில் படுத்திருந்த கணக்கற்ற அடியார்கள் சுவாமி நினைத் தால் அரிய செயல்கள் செய்வார் என்று நம்பிக்கொண்டு சுவாமியின் அருகில் இருக்க விரும்பி அவ்வாறிருந்ததைப் பற்றி எண்ணிக் கொண்டிருந்தேன். சுவாமி வெளியே சென்று சிறுநீர் கழித்துவிட்டுத் தம் படுக்கைக்குத் திரும் பினார். அறையின் வாசற்படியில் நின்றுகொண்டு, "அவரைக் கடவுளாகக் கொண்டுள்ளவர்களின் அறியாமை என்னே! கடவுளின் பண்புகள் அவரிடம் என்ன இருக்கின்றன?" என்று நினைத்தேன். சுவாமி என்னை ஒரு நிமிஷம் உற்றுப் பார்த்தார். சைகையால் என் உள்ளத்தில் அவரைப்பற்றி யும் அவர் அடியார்களைப் பற்றியும் என்ன நினைத்தேன் என்பதைக் குறித்து என் எண்ணங்கள் எவ்வளவு தெளி வாகத் தமக்குத் தெரியும் என்று உணர வைத்தார். மின் சாரத் தாக்குதல் போன்ற அதிர்ச்சி என் உடல் முழுவதும் ஏற்பட்டது. என் உடலில் நடுக்கங்கண்டது, ஏன் என்று தெரியவில்லை. என் மூளை குழம்பிற்று. என் எண்ணங்கள் தெளிவற்றுப் போயின. அங்கே தொங்கிக்கொண்டு சிறி

தளவே ஒளிதந்த விளக்கொளியில் என் கைகால்கள் நடுங்குவதை அங்கே யாராவது பார்த்திருந்தால் என் மீது இரக்கப்பட்டிருப்பார்கள் அனைவரும் உறங்கிக் கொண்டிருக்கவே ஒருவரும் பார்க்கவில்லை. இந்தக் குழப்பத்திலும் துயரத்திலும் ஐந்து நிமிஷங்கள் சென்றன. என் அறியாமையால் நான் நினைத்ததற்கெல்லாம் சுவாமி என்ன செய்வாரோ என்று அச்சங்கொண்டேன். சுவாமி திரும்பி, "அஞ்சாதே" என்று சொல்லி நான் உறங்க ஓர் இடம் காட்டினார். நான் மறுபடியும் என் நிலை அடைந்தேன். ஆனால் என் உள்ளப் பண்பு மாறுதல் அடைந்தது. அவருடைய சைகைகள் வியக்கத்தக்க பெரியதொரு நிகழ்ச்சியை என்னுள் ஏற்படுத்தவே அவர் பெருமையை ஒப்புக்கொள்ள வேண்டியதாயிற்று. அவர் மிகச் சிறந்த ஆற்றலுடைய பெரியவர்—வேண்டிய பொழுது அவ்வாற்றலை ஆளக் கூடியவர். இதற்கு முன்பே எனக்கு மேனாட்டு அறிதுயில் கலைப்பயிற்சியுடையோர் செய்யும் உள வசியம் போன்ற செயல்களைப்பற்றித் தெரியும். எனவே ஒருவர் மற்றொருவரைத் தம் உள ஆற்றலுக்கு உட்படுத்தக்கூடும் என்பதில் எனக்கு நம்பிக்கை உண்டு. எனக்கு மிகுதியான மன உறுதி (Will) உண்டு. புகழ்பெற்ற வசியக்காரர் ஒருவர் பல நாட்கள் முயன்றும் என்னை வசியப்படுத்த முடியவில்லை. வசிய நிலைக்கு அவரால் என்னை உட்படுத்த முடியாது என்று இருபத்தைந்து ரூபாய் பந்தயமும் கட்டினேன். இருபது நாட்களுக்குமேல் முயன்றும் என் மன உறுதியை அடக்கி அவர் வெற்றிபெற முடியவில்லை. என்னைப் போன்ற மன உறுதி வாய்ந்தவன், ஒரு விநாடியில் நம்பிக்கை இன்மை என்ற நிலையிலிருந்து மாறி, சுவாமியின் கை அசைவால் அச்சங்கொண்டு "நான்" என்று கொண்டிருந்த தன் முனைப்பு நீங்கி, சுவாமி முன்னிலையில் நான் ஒரு சிறியவன் என்ற நிலைக்கு வருவதுபற்றிக் கணக்கூடக்

கண்டிருக்கமாட்டேன். எனவே இத்தகைய மாறுதல் ஏற்படுத்தியவர் எளிய மனிதனாக இருக்கமுடியாது. மனித நிலைக்கு மேற்பட்டவராயும் அளவற்ற கவர்ச்சி ஆற்றல் படைத்தவராகவும் கடவுளின் அவதாரமாகவும் இருத்தல் வேண்டும் என்று உணர்ந்தேன். அதுமுதல் சுவாமியின் வியக்கத்தக்க பெருமையில் எனக்கு மட்டற்ற நம்பிக்கை ஏற்பட்டது. • சுவாமியின் உண்மையுள்ள மாணவனாக இருந்துவருகிறேன்.

இந்நிகழ்ச்சிக்குச் சிறிது காலம் பொறுத்து விசாகப் பட்டினத்திலிருந்து என் உறவினர் என் வேலையை விட்டு விட்டு வரும்படி அடிக்கடி சொன்னதால் என் வாழ்க்கை நிலையற்றிருந்தது. என்றால் இது தீர்க்கப்பட முடியாத சிக்கலாயிருக்கவே பல அரிய நிகழ்ச்சிகளைச் செய்வதாயும், பின் வருவனவற்றை முன்னரே அறிவிப்பதாயும் புகழ் பெற்றிருந்த சுவாமி எனக்கு இதைத் தீர்த்துத் தரவேண்டு மென்று விரும்பினேன். நான் சென்னையிலிருப்பதா அல்லது என் உறவினர் நான் சென்னையிலிருப்பதை விரும்ப வில்லையாதலால் வேலையை விட்டுவிட்டு விசாகப்பட்டினம் போய்விடுவதா என்று நினைத்துக்கொண்டு சுவாமியிடம் சென்று வணங்கினேன். அவர் உடனே, "நம்பிக்கையை இழக்காதே. சென்னையிலேயே நல்ல வேலை கிடைத்து அங்கேயே நிலையாக இருப்பாய்" என்றார். இது அவர் சொன்னவாறே நடக்கவே சுவாமியிடம் நான் கொண் டிருந்த நம்பிக்கை உறுதி பெற்றது.

(கையொப்பம்) A. அப்பளராவ்.

---

சென்னை கோவிந்தப்ப நாய்க்கன் தெரு, 148. எண்ணுள்ள மங்க விலாசத்தில் இருக்கும்

## Dr. J. V. ராமசாமி நாயுடு, L. M. & S., அவர்கள் அனுபவங்கள்.

புத்தூர் ஸ்ரீமான் சுரைக்காய் சுவாமி அவர்களைப் பற்றிய என் அனுபவத்தை எழுதும்படித் தாங்கள் கேட்டதற்குப் பதில்:

சுவாமியுடைய பெருமையைப்பற்றி L. F. ஆடிட்டர் P. ராஜகோபால் நாயுடு அவர்கள் மூலமாக அறிந்தேன். நோயாளிகளைப் பார்ப்பதற்கென நாயுடு அவர்கள் வீட்டில் நான் ஓர் அறை வைத்திருந்தேன்.

நான் சென்னைக்கு வந்த இரண்டு மூன்று ஆண்டுகளுக்குப் பின்பு சுவாமியிடம் அறிமுகப் படுத்தப் பெற்றேன், அதற்குப் பிறகு சுவாமி சென்னைக்கு வரும் போது அவரிடம் அடிக்கடி செல்வதுண்டு.

உடலைப்பற்றிய நோய்களையும் வேலையில் ஏற்பட்ட தொல்லைகளையும் பிசாசு, வைப்பு முதலியவற்றால் ஏற்பட்ட இன்னல்களையும் சுவாமி போக்குவதைக் கண்டும் அவற்றைப்பற்றிக் கேட்டும் உள்ளேன்.

ஒரு பௌர்ணமி இரவு நான் சுவாமியோடிருந்த போது, அவர் அடிக்கடி என்னிடம் "கால்வாயிலுள்ள வண்டலைப் போக்க வேண்டும்" என்றார், புறப் பொருள்களின் சேர்க்கையால் ஏற்பட்ட கெடுதிகளைப் போக்க வேண்டும் என்று சுவாமி சொன்னதாக நான் பொருள் செய்து கொண்டேன்.

மூன்ருவது பிள்ளை எனக்குப் பிறப்பதைப்பற்றி முன்னதாகவே சுவாமி எனக்குத் தெரிவித்தார். தாம் சமாதி அடைவதற்கு மூன்று மாதங்களுக்கு முன்பே இவ்வுலகை நீத்துவிடுவதை எனக்குத் தெரிவித்தார்.

சுவாமியின் பெருமையை விளக்கும் இத்தகைய நிகழ்ச்சிகள் எத்தனையோ அவரிடம் சென்றவர்களுடைய அனுபவத்தில் உள்ளன.

(கையொப்பம்) J. V. ராமசாமி நாயுடு.

---

Motto :—"புதிய பொருளிலும் உருவகமாகவும் சொற்களை வழங்கும்போது அவை இனிய மெருகு பெறுகின்றன; ஒவ்வொரு சொல்லும் புதிய ஆட்சி பெறத்தக்கதாகிறது, நுண் பொருளைச் சுட்டவல்லதாகிறது. உள்ளத்தின் சட்டங்களை நாம் உணரவில்லை—உயர்ந்த தியான நிலைகளையும் நீள நினைத்தலையும் அடக்கிப் பழக்க நிலைக்கு நினைத்த போது அவற்றைக் கொண்டு வரமுடியவில்லை"—எமர்ஸன். (Emerson)



# நாராயணவரத்தின் நாட்டுப் பாங்கான மஹான்

சென்னை, விவேக சூடாமணி ஆசிரியரான

## C. V. சுவாமிநாத ஐயர்.

## அவர்களுடைய புகழ்க்காணிக்கை.

பின்வருவது திரு. C. V, சுவாமிநாத ஐயரை நேரில் பார்த்துத் தெரிந்து கொண்ட செய்திகளின் சுருக்கம். ஆன்மீயச் செய்திகளில் ஆசிரியருக்கும் மாணவருக்கும் உள்ள தொடர்பின் மறைபொருள் பொது வாசகர்கள் உணர்ந்து கொள்ள முடியாதிருப்பதால், ஐயர் அவர்கள் அனுபவங்களை இங்கே பொதுவாசகர்களுக்கும் அக்கரை ஏற்படக் கூடிய வகையில் செய்திச் சுருக்கமாகத் தருகிறோம். இந்த மஹானைப்பற்றி திரு சுவாமிநாத ஐயர் எவ்வளவு ஊக்கம் காட்டுகிறார் என்பது இங்கே இணைக்கப் பெற்றுள்ள அவரது புகழ்க்காணிக்கை என்பதால் தெரியவரும். நம் நிருபர் அவரைப் பார்த்தபோது அவர் பின்வருமாறு சொன்னார் ;

நாராயணவரத்து மஹானுடைய பெருமையைப் பற்றி என்னுடைய குருவிடம் கேள்விப்பட்டதிலிருந்து அவரைப் பார்க்க வேண்டும் என்று பேரவாக் கொண்டிருந்தேன். என்றாலும் முதலில் அவரைச் சிந்தாதிரிப் பேட்டையில் பார்த்தபோது அவரிடம் நெருங்கிச் செல்ல முடியவில்லை. 1901 ஆம் ஆண்டில் திருவல்லிக்கேணியில் ஒரு தோட்டத்தில் அவரிருந்தபோது அவரிடம் நேரில் பழகும் வாய்ப்பு கிடைத்தது. நான் ஏறிச்சென்ற சைகிளை அவர் புதுமையாகப் பார்த்து அதன் ரப்பர் டயர்களையும் சக்கரங்களிலிருந்த கம்பிகளையும் தொட்டுப் பார்த்துவிட்டு "வெள்ளைக்காரன் திறமை" என்று சொன்னார். அவர் சொன்னதைத் திரும்பச் சொல்லும்படி கேட்டேன். பக்கத்திலிருந்த ஒருவர் அவர் சொன்னதைத் திரும்பச் சொல்லிவிட்டு என்னுடைய செவிடு தீர்வதற்குச் சுவாமி அருள் செய்ய வேண்டுமென்றார். சுவாமி, "வெள்ளைக் காரனிடம் போ" என்று சொன்னார் இதைக் கேட்டவுடன் நான் "சுவாமியை நாடிச் சென்றது என்னுடைய உடல் நோய்கள் தீர்வதற்காக அல்ல. உண்மையில் செவிடாயிருப்பது ஒரு நன்மையே" என்றேன்.

பிறகு நான் கொண்டுபோயிருந்த கற்கண்டையும் பழங்களையும் சுவாமியிடம் கொடுத்தேன். அவர் அவற்றை ஏற்றுக்கொண்டு அங்கிருந்த மற்றவர்களுக்குப் பகிர்ந்து கொடுத்தார். தம் தொண்டை. புண்ணாக இருந்ததால் அவர் முசுமுசுக்கைச்சாறு தடவிக் கொண்டிருந்தார். சாற்றை நான் அவர் தொண்டைக்குப் பூசுவதற்கு இசைந்தார்.

சுவாமி தம் வழக்கத்திற்கேற்ப, தம் எதிரில் விறகு பிளப்பதை மிகுந்த அக்கறையோடு பார்த்துக் கொண்டிருந்தார். அருகிலிருந்த என் பக்கம் திடீரெனத் திரும்பி அங்கே இருந்த ஒரு பெரிய (Knotty price of wood)—மொக்கையைப் பிளக்க முடியுமா என்று கேட்டார். அவர்

சொன்னதைத் ஒரு சோதனையாக உணர்ந்து ஆனவரை முயல்வதாகச் சொல்லி உடனே கீழ்ப்படிந்தேன். ஆனால் நான் கோடரியை எடுத்தது அதுவே முதல் முறை. நான் செய்தது ஏற்ற முறைப்படியில்லாவிட்டாலும் எடுத்த வேலையை விட்டுவிடவில்லை. அவர் இட்ட கட்டளைக் கேற்ப நான் முயன்று அலுப்படைந்தாலும் வேலை முடிய வில்லை என்பதைப் பார்த்த சுவாமி, என்னைத் தம் அருகே யழைத்துப் புன்சிரிப்போடு, "உன்னால் அதைச் செய்ய முடியவில்லையே" என்றார். அதற்கு நான், "என்னால் இயன்றவரைச் செய்வதாகச் சொன்னேன். விளைவு ஒன் றும் இல்லையென்றால் அது என் கவலை அன்று. உங்களு டையது" என்று பதில் சொன்னேன். இதனால் அவர் என் மன நிலையை உணர்ந்து விரைவில் என்னிடம் அக் கறை கொள்ளலானார். ஒருவரோடொருவர் நாங்கள் பழகி விட்ட பிறகு, நான் ஆன்மீக நெறியில் நுழைந்தவன் என்று எளிதாகத் தெரிந்துகொண்டார். இதை உணர்ந்த அவரிடம் என்னுடைய முன்னேற்றத்தை உறுதியாக்கிக் கொள்ள சில குறிப்புக்கள் பெற வேண்டும் என்ற என் விருப்பத்திற்கிணங்கினார். "பயிரிட வேண்டிய நிலம் இருக் கிறது. ஆனால் உழைப்பாளிகள்தாம் மிகக்குறைவு" என்று அவர் சொன்னபோது, அவர் குறிப்பறிந்து, "நிலம் எங்கே இருக்கிறது? அன்புகூர்ந்து எனக்கும் சிறிது தர வேண்டும். அதை நான் பயிர் செய்கிறேன்" என்று நான் பதில் சொன்னேன். "நாராயணவரத்திற்கு வா. நான் வேண்டிய நிலம் தருகிறேன்" என்று உடனே சுவாமி சொன்னார். நாராயணவரம் என்றால் என்ன என்று தெரி யாது அதன் லக்ஷ்யார்த்தத்தில் புரிந்துகொண்டு "நிலம் நாராயணவரத்திலிருந்தால் ஏன் இப்போது இங்கேயே அதைக் காட்டக்கூடாது?" என்று கேட்டேன். அங்கே இருந்தவர் ஒருவர் நாராயணவரம் என்பது சுவாமியுடைய

சொந்த ஊர் என்று விளக்கினர். என்றாலும், நான் சொன்னதை வைத்துக்கொண்டு சுவாமி உடனே, "இருளன் குடிசை போட்டுப்பார்" என்றார். இருளன் குடிசை என்ற சொற்கள் முதலில் எனக்கு விளங்கவில்லை. ஆனால் அருகிலிருந்த ஒரு நண்பர் இடையர்கள் சமவெளி களில் தங்களுடைய கூடாரங்களை அமைத்து ஆடு, மாடு களைக் கவனித்துக் கொள்ளுவதை விளக்கியபோது, மஹான் கூறிய சொற்களின் முழு உண்மை எனக்கு விளங் கிற்று. அவர் உவமைக் கதைகள் வாயிலாகப் பெரிய உண்மைகளைக் கூறுகிறார் என்று விரைவில் உணர்ந்து கொண்டேன். இவ்வாறுதான் கடவுளுடைய தீர்க்க தரிசிகள் தங்களுக்கு அறிவிக்கப்பட்ட உயர்ந்த மறை பொருள்களைப் பிறருக்கு எடுத்தோதுகிறார்கள். சமவெளி யில் இருளன் குடிசைபோட்டு நீண்ட காலமும் தொடர்ந் தும் நான் விழித்திருந்தேன். கவனித்துப் பார்த்து வணங்கி யும் வணங்கிக் கவனித்துப் பார்த்தும் விழித்திருந்து என் விளக்கைத் தூண்டிக் கொண்டிருந்திருக்கிறேன். கடைசி யில் நல்ல மேய்ப்பன், கையில் மந்திரக்கோலோடு தோன் றினார். மந்திரக்கோலின் இசை என் உள்ளத்தை மயக்கவே நான் உடலிருந்ததாகவாவது அதனால் கட்டுப்பட்டதாக வாவது அறியவில்லை. இப்படி எழுதுவதால் பொதுவாகப் படிப்பவர்கள் இதைப் புரிந்துகொள்ள மாட்டார்கள் என்று அஞ்சுகிறேன். எனவே என் தெய்வீகக் குதிரை இவ்வுலகத்தியது அல்லவெனினும் அதைக் கட்டுப்படுத்தி அதன் ஆட்டத்தைச் சரிப்படுத்தி அதைத் தரையில் நடக்க வைக்கிறேன். ஏன்? நம் பாட்டி ஔவையார் கூறுகிறார் :

பற்றிலா தொன்றினைப் பற்றினா லல்லது
கற்றதனா லென்ன பயன்.

மேலும் அவர் கூறுவதாவது :

இமையாத நாட்டத்திருந் துணர்வாருக்
கமையாத வானந்த மாம்.

சுவாமி சொன்ன குறிப்பை வைத்து நான் செய்த ஆராய்ச்சியும் எனக்குக் கிடைத்த அனுபவத்தையும் சுவாமி கூறியதன் பொருளையும் ஒரு பாட்டாக எழுதி விவேக சூடாமணி ஆருத்திரா தரிசன மலரில் (1906-ஆம் ஆண்டு ஜனவரி (Volume XIV—PP 271-75) வெளியிட்டிருக்கிறேன்.

இதற்குப்பின் சித்தர் வகையைச் சேர்ந்த ஒரு யோகியைத் திருச்சியில் பார்த்தேன். "வாலையென்னு மம்பிகைப் பெண் வடிவென்னுத்தான்" என்று தொடங்குகிற சில தத்துவார்த்த பாடல்களை அவருக்குக் காட்டினேன். இப்பாடல்களை அவர் மிகவும் சுவைத்தார். ஆனால் அவற்றின் பொருளைச் சொல்ல மறுத்தார். அப்பொருள் ஆன்மீக நெறியில் தலைப்பட்டவர்களுக்கே சொல்ல வேண்டியது; அப்படிப்பட்டவர்களே அதைக்கொண்டு தங்கள் அனுபவத்தைச் சரிபார்க்க முடியும் என்ற கொள்கையுடையவர். சுரைக்காய் சுவாமியின் உதவியால் என் சொந்த ஆன்ம அனுபவத்தில் இப்பாடல்கள் உண்டானவை என்று நான் சொன்னவுடன் அவர் சுரைக்காய் சுவாமியை ஒரு பெரிய மந்திர சித்தர் என்று புகழ்ந்துவிட்டு என் அனுபவத்தைச் சோதிப்பதற்காக என்னை ஒரு குறிப்பிட்ட யோகக்குறியில் (Centre) நினைவைச் செலுத்தச் சொன்னார். உடனே ஒரு ஒளிப்பிழம்பு தெரிந்தது. இதை நான் சொன்னவுடன், முடிவான நிலை அடையும் வரையில் அந்த ஒளியிலேயே என் நினைப்பை நிறுத்தச் சொன்னார். இந்த விஷயத்தில் அக்கறை உள்ளவர்கள் பின்வருவனவற்றில் இதைக் காணலாம்.

நாராயணவரத்துச் சுவாமியை நான் பார்த்தபோது நடந்த வேறொரு நிகழ்ச்சியைச் சொல்ல வேண்டும். தென்னை மரத்தில் மரமேறி ஒருவன் ஏறிக்கொண்டிருந்

தான். இதை வியப்பாகச் சுவாமி பார்த்துவிட்டுத் தமக்குள், "இது என்ன பித்துபிடித்த உலகம், மரத்தைப் பழுக்கவிடமாட்டார்கள். ஆனால் அதைத் தட்டி அதன் சாற்றை எடுத்துவிடுகிறார்கள். பழம் பழுத்த உடன்தான் நாம் உண்டு சுவைக்கக்கூடிய கொப்பரை கிடைக்கும்" என்று சொல்லிக்கொண்டார். இதில் பொதிந்துள்ள பெரிய நடைமுறை உண்மையை நான் 1911-ஆம் ஆண்டு ஏப்ரல் ஒன்பதாந் தேதி காலை வரையில் உணரவில்லை. அன்று காலை என் தொண்டை கட்டிக்கொண்டது. அதற்கு முன்னாள் மாலை சுவாமியைப்பற்றித் தெரிந்து கொள்வதற்காக என்னைப் பார்க்கவந்த நிருபரிடம் பேசிக்கொண்டிருந்ததால் இவ்வாறு தொண்டை கட்டிக்கொண்டது. முதலில் இது எனக்குப் புதுமையாக இருந்தது. பின் வழக்கம்போல எனக்கு விடியற்காலையில் உண்மை புலப்பட்டது. கடந்த மஹாளயம் முதல் நான் வழக்கமாகச் சாப்பிட்டுக்கொண்டிருந்த கொப்பரைக்குப் பதிலாக இளநீர் சாப்பிட்டதால் இப்படி நடந்தது. மஹாளயத்தைத் தொடர்ந்து நவராத்திரியோடு உடலுக்கும் என் உணர்வுக்கும் பத்து ஆண்டுகளாக ஏற்பட்டிருந்த போர், கடவுள் அருளால், உணர்வுச் சார்பான வெற்றியில் முடிந்தது.

1. நாட்டுப் பாங்கான தோற்றமுடைய நாராயண வரத்துச் சுவாமி ஒளி வீசுகின்ற, தீட்டப் பெறாத செம்மணி.

தூய்மை அடைந்து அருள்நிறைந்திருந்த அவர் உள்ளத்தைப் புற நாகரிகத் தீர்மையில்லாத அவர் தோற்றமும் அவரது பழங்கால நடைமுறைகளும் மறைத்தன.

2. அவரது சொற்கள் எளிமையும் நேர்மையும் வாய்ந்தவை—நாகரிக மேல் பூச்சு அற்றவை என்றே

சொல்லலாம். ஆனால் அவற்றின் பொருள் நிறைவாகவும் குற்றமின்றியும் குறுகிய கட்டுப் பாடின்றியும் இருந்தது.

மொழி அவர் எண்ணத்திற்கு அடிமையாக இருந் தது; அவர் எண்ணமோ அடக்கி ஆளப்பெற்ற அவர் மனத்தின் அடிமையாக இருந்தது.

3. எவ்வாறு அவருடைய எண்ணம், உரை, செயல் இவை மூன்றும் ஒன்றாயிருந்தனவோ, அவ் வாறே ஒழுக்கம், அறம், சமயம் எல்லாம் அவருக்கு ஒன்றே;

"ஒழுக்கமே மனிதனை உருவாக்குகிறது." என் கிறார்கள், ஆனால் ஒழுக்கம் அறத்தினின்றும் அறம் உண்மைச் சமயத்தினின்றும் பிறக்கும் போதுதான் இக்கூற்று உண்மையாகிறது.

4. புற நாகரிகத் தீர்மையற்ற அவர் ஒழுக்கம் ஒரு தங்கச் சுரங்கம். அவருடைய நாட்டுப் பாங் கான சொற்கள் உண்மையின் சுரங்கம்.

அவருடைய சொற்கள் சுரீரென உள்ளத்தைத் தொடுவனவாயும் தம்மிடம் அண்டி வந்தவன் அகத்தை வெளிப்படுத்துவனவாயும் இருந்தா லும் அவர் எப்போதும் அருள் நிறைந்தவரா யிருந்தார்.

5. நான் அவரை முதல் முதல் பார்த்தது, "திவான் பஹதூர்" வீட்டில்—ஒரு படுக்கையில்—அநு பூதிமானாகவும் அநுபூதி நெறிக்கு உரிய கவர்ச்சி யும் போக்கும் உடையவராகவும் இருந்தார்.

அநுபூதி நெறியின் தொடக்க நிலையிலிருந்த எனக்கு அவர் எட்ட முடியாதவராகத் தோன்

றினார்; ஆனால் அவருடைய முதல் மாணவர் மிகத் தவறான இந்த எண்ணத்தைப் போக்கினார்;

6. எவ்வாறு இயற்கையின் மடியில் பிறந்து வளர்ந்தார் என்று சுவாமி தம்முடைய நாட்டுப்புற வாழ்க்கையைப்பற்றி என்னிடம் பேசினார்.

ஆடம்பரப் படிப்பு அவருக்கு இல்லை; இயற்கையின் திறந்த புத்தகமே அவர் படித்தது.

7. இயற்கையின் திறந்த புத்தகத்தின் அநுபூதிக் கதைகளுடன் அவர் பேசிய சொற்கள் உள்ளத்தை ஊடுருவுவன.

அவர் உங்கள் முகத்தைப் பார்க்கிறார்; ஆனால் தம்முடைய அநுபூதிக் கலையால் அதன் உட்புறத்தைப் பார்த்து உங்களுடைய நெஞ்சம், உயிர் ஆகியவற்றின் மையத்துக்குச் செல்கிறார்'

8 அவர் பேசுவதை நீங்கள் கேட்கிறீர்கள்; ஆனால் உங்கள் நெஞ்சம் உண்மையும் தூய்மையும் வாய்ந்திருந்தால் அவர் குரல் உள்ளே பாய்ந்து உங்கள் நெஞ்சத்தின் நரம்புகளில் இசை எழுப்பும்.

அவர் குரலும் சரியாக மீட்டப்பட்ட உங்கள் நெஞ்சின் ஒலியும் சந்தித்து இழைந்து ஒன்றாகி, அவர் சொற்கள் உங்கள் நெஞ்சக் குகையில் இசைப்பாக்கள் ஆகின்றன.

9. இதுவே உலகத்திற்கு இந்த நாட்டுப் பாங்கான மஹானின் அநுபூதிக் கவர்ச்சி. அவர், உலகங்களை ஆக்கவும் அழிக்கவும் வல்ல ஒரு மந்திர திருஷ்டர்.

அவருடைய சொற்களால் தங்கள் நெஞ்சத்தின் விருப்பங்கள் நிறைவேற வேண்டுமென்று உலகத்தினர் கூட்டமாக அவரைச் சூழ்ந்து கொண்டனர்.

10. பழைய சித் அக்னி குண்டத்தை—உணர்வின் பலிபீடத் தீயை—அவர்தம் உண்மைவாய்ந்த நெஞ்சில் எப்போதும் ஓம்பிவந்தார்.

தம்மிடம் உண்மையாக நாடி வந்தவர்களுக்கு அதைத் தம் எதிரில் பெரிய முறுக்கு ஏறிய முடிச்சுகள் உள்ள மரத்தைக் கொண்டு எப்போதும் எரிந்து கொண்டிருந்த தீயால் வெளிப் படுத்திஞர்.

11. வேரும் அடிமரமும் கோணலான கிளைகளும் கூடுகின்ற மரக்கட்டைகளே அவர் இருப்பிடத்திற்கருகில் தீயை வளர்ப்பதற்கு விரும்பி வேண்டப்பட்டவை.

உயிருக்குள்ளிருந்த அகத்தீயை அவர் உள்ளமும் நெஞ்சமும் காத்தன; அவருடைய சீடர்கள் புலஞல் கட்டுண்ட உயிரின் அடையாளமாகப் புறத்தீயை வளர்த்தனர்.

12. தாம் விரும்பி வாழ்ந்த உண்மையை அவர் விளங்காத மறைபொருளாக்கவில்லை; கேட்ட பிறகு எப்போதும் நெஞ்சில் குடிகொள்ளும் எளிய சொற்களால் அதைப்பற்றி அடிக்கடி பேசிஞர். கேட்பவர்களின் எளிய நம்பிக்கை அல்லது தூய்மையான அன்பால் அவர்கள் நெஞ்சு இவருடைய நெஞ்சோடு இழைந்து நின்றது.

**13.** இந்த நாட்டுப்புற மஹானின் பெருமையும் இதுவே; எளிமையும் இதுவே; உண்மை வாழ்க்கையைத் தாம் வாழ்வதன்மூலம் அவருடைய அறிவுரையை நாடியவர்களின் வாழ்க்கையை உயர்த்தினர்.

ஆனல் வீண் அக்கரை கொண்டவர்களுக்கு அவர் சொற்கள் முரட்டுத்தனமாகவும் அவர் நெஞ்சின் தெய்வீக இசை நயமற்றதாகவும் தெரிந்தன.

**14.** இத்தகைய நாட்டுப்பாங்கின் பெருமையில் விளங்கிய மஹானுனவரை அநுபூதி நெறியில் நுழைவு பெற்றவர் ஒருவர் பார்க்கச் சென்றார் —தம்முடைய நெஞ்சின் ஏக்கத்தைத் தீர்த்துக் கொள்வதற்காக.

அவர் சென்றார், கண்டார், கீழ்ப்படிந்தார், காப்பாற்றப்பட்டார்! சுவாமி காட்டிய நெறியின் எளிய கதை இதுவே. கட்டுப்பாட்டிற்கு உட்பட்ட நெஞ்சுக்கு இந்நெறி அவ்வளவு நன்ருக அமைக்கப்பட்டிருந்தது.

ஆனல் புலன்வழிக் கட்டுப்பட்ட உயிருக்கு இந்நெறி செங்குத்தாகவும் கூர்மையாகவும் காணப்பட்டதால் நெஞ்சு தோற்றது, கரடு முரடான வழியில் செல்ல மறுத்தது.

ஆனல் அநுபூதி நெறி நின்ற ஆசிரியர், நடுங்குகின்ற நெஞ்சை இந்த உலகின் நெருக்கமான சந்தையில் இன்பத்திலோ துன்பத்திலோ தனித்து வருந்தும்படி விட்டுவிடுகிருர் என்பது உங்களுக்குத் தெரியுமல்லவா ?

16. "இருளன் குடிசை போட்டுப்பார்" என்று மஹான் ஒரு முறை சொன்னார். தாமே உண்மையான பழங்கால இருளனாக மாறினார்!

அநுபூதி நெறியில் நுழைவு கொண்டவர் இந்த மனிதனையும் அவர் சொல்லையும் பார்த்து ● இருளன் குடிசை வெட்டவெளியில் போட்ட உடனே, உணர்வின் பரப்பு எல்லையற்ற பரப் பாக் விரிந்தது.

17. நல்ல மேய்ப்பனின் கதை, எளிய சொற்களில் கூறப்பட்டுள்ளது. ○ அதன் உட்பொருளை அநுபூதி நெறி நின்ற ஆன்மா மட்டுமே உணர்ந்து பற்றிக்கொள்ளக்கூடும். நண்பனே, அநுபூதி நெறி உள்ளக் குழப்பம் உண்டாக்கு வதல்ல; புறநோக்கு உடைய மனத்தின் காரணமாகப் புலனால் கட்டப்பட்ட ஆன்மா காணத்தவறுகிற தத்துவங்களைத் தெளிவாக வும் நேரடியாகவும் காட்டுகின்ற உண்மைக் காட்சியே அநுபூதி நெறி.

● "என்னைப்பார்"—ஸ்ரீ இராமகிருஷ்ணபரமஹம்ஸர்.

○ ஜனவரி 1906 விவேகசிந்தாமணி ஆருத்ராதரிசன மலரைப் பார்க்கவும்.

**18.** துரியப்பரி ● ஏறமுடியாத பொதுவாசகரின் மனம், சுவாமியின் அநுபூதி உண்மைகளை எளிய ஆங்கிலத்தின் துணைகொண்டு உணர முடியாது.

ஆனல் இறுதிவரை நாராயணவரம் சுவாமியின் உயர்ந்த நிலையை ஒருவாறு உணர்ந்ததற்கு அடையாளமாக புன் சொற்கள் கொண்ட இந்தச் சிறு காணிக்கையை அனுப்புகிறேன்.

(கையொப்பம்) **C. V. சுவாமிநாத ஐயர்.**

---

(Vol 14 — PP 271–25)

● துரியப்பரி என்று திருமூலர் கூறுகிறர்.

இந்தக் கட்டுரையின் தலைப்பில் உள்ள எமர்சன் அவர்களுடைய மொழியையும் ஒப்புநோக்குக.

(செய்தித் தாள்களிலிருந்து திரட்டியவை)

## தற்காலத்திய ஹிந்து துறவி

ஹிந்து சமூகத்தைச் சேராத வெகு சிலரே இந்தக் கட்டுரையின் பொருளாகவுள்ளவரைப் பற்றிக் கேட்டிருக்கக்கூடும். எனினும் அவருடைய வாழ்க்கை உற்று நோக்க வேண்டியதொன்று, பொது வாசகர்களும் அக்கரை கொள்ளக் கூடியதொன்று. சென்னையிலிருந்து செல்லும் வடமேற்கு ரெயில் பாதையில் புத்தூர் என்ற ஸ்டேஷனுக்குச் சுமார் மூன்று கல் தொலைவில் பழமையானதும் புண்ணிய ஸ்தலமாகக் கருதப்படுவதுமான நாராயணவரம் என்னும் ஊர் இருக்கிறது. ரெவினியூ பிரிவில் அது ஒரு தலைமைக் காரியாலயம்; சமீப காலம் வரையில் அரசியல் ஊழியர்களுடைய நிலையமாக இருந்தது. (Seat of Public Officers) இப்பொழுதும் அது ஒரு பெரிய ஊர்தான். நெசவுத் தொழில் நடைபெறும் இடம்; நெசவாளர் பெரும்பாலும் பட்டு நூற்காரர். அங்கே நெய்யப்படும் பட்டுத்துணிகள் சிறந்த வகையைச் சேர்ந்தவை, அழகிய நிறமுடையவை, ஆதலால் பெரிதும் விரும்பப் படுகின்றன. எனினும், பொது மக்களின் ஆதரவு குறைவினாலும் வேறு மலிவான துணிகள் வந்து சேர்வதாலும் இந்தத் தொழில் இப்போது சற்று குறைந்திருக்கிறது.

நாராயணவரத்தைச் சுற்றியுள்ள இடம் மஹான்களும் பெரியவர்களும் நடமாடிய இடம் என்பதாகப் பல கதைகள் உண்டு. சுற்றுப் புறத்தில் குன்றுகள் உண்டு.

இவற்றுள் மிக எடுப்பாக உள்ளது மூக்குமலை. முன் பெல்லாம் இந்தக் குன்றுகளின் சரிவுகளில் அடர்ந்த காடுகள் இருக்கும். இப்போது அவையெல்லாம் அழிந்து விட்டன. குன்றுகளில் அங்கங்கே குகைகள் போன்ற இடங்கள் உண்டு. இவற்றை உள்ளூர் மக்கள் "கோணை" என்கிறார்கள். முன் காலத்தில் யாத்திரை சென்ற மஹான் களின் தற்காலிக இருப்பிடமாக இக்கோணைகள் இருந்தன என்பது செவி வழிச் செய்தி. இவற்றுள் மிகப் பெரியதும் முதன்மை வாய்ந்ததும் சதாசிவக் கோணை என்பதாகும். சதாசிவர் பெயரால் இக்கோணை வழங்கப் பெறுகிறது. ஆண்டுதோறும் மஹாசிவராத்திரி இங்கே சிறப்பாகக் கொண்டாடப் பெறுகிறது. இங்கே வழிபாட்டிற்காகப் பல அடியார்கள் வருகிறார்கள். நாராயணவரத்திற் கருகில் உள்ள கைலாச கோணையும் புண்ணிய ஸ்தலமாக ஹிந்து பக்தர்களால் கருதப்படுகிறது. கைலாச கோணைக்கு அருகில் அவர்கள் செல்ல நேர்ந்தால் அங்கே சென்று அதன் தெளிந்த நீர் வீழ்ச்சியில் காலை, மாலை வழிபாடுகளை நடத்தத் தவறுவதில்லை. குன்றின் ஒருபுறத்திலிருந்து இடை விடாது இந்த நீர்வீழ்ச்சி தெள்ளிய தண்ணீரைப் பொழி வதால் குளிப்பதற்கு மிக நன்றாக இருக்கிறது. என்றாலும் உல்லாசப் பிரயாணங்களுக்காகவே மக்கள் இந்தக் கோணைக்குச் சென்று குளித்தும் இயற்கைக் காட்சிகளின் அழகைக்கண்டு இன்புற்றும் வருகிறார்கள். அடர்ந்த காட்டின் நடுவில் இந்தக் கோணை இருக்கிறது. வெயில் நுழையாதபடி இலையால் பந்தல் போட்டபடி பெரிய மரங்கள் நிழல் தருகின்றன. அழகிய காட்சிகளில் அமைதி யும் கவர்ச்சியும் குடிகொண்டிருப்பதால் நம்பிக்கை இல்லா தவர்களும் ஒரு காலத்தில் இந்த இடம் புனிதத் தன்மைக்கு உறைவிடமாக இருந்தது என்று வழங்கும் கதைகளில் நம்பிக்கை கொள்கிறார்கள்.

நாராயணவரத்தைச் சுற்றியுள்ள இடமெல்லாம் பக்தியுள்ள ஹிந்துக்களுக்குப் புனிதமான இடம் என்று முன்பு குறிப்பிட்டேன். எனவே, இத்தகைய புனிதமான இடத்திலிருந்து இந்தக்காலத்தில் மிகவும் மேன்மையான ஒரு துறவி தோன்றியதில் வியப்பில்லை. இவர்தாம், நீண்ட காலம் வாழ்ந்து அண்மையில் சமாதி அடைந்த ஸ்ரீ சுரைக்காய் சுவாமி ஆவர். குறிப்பிடத்தக்க நிகழ்ச்சிகள் நிறைந்த அவர் வாழ்க்கையில் அவர் காட்டிய புனிதத் தன்மையும் நிகழ்ச்சிகளை முன்னதாக உணரக்கூடிய ஆற்றலும், "உயர்ந்த இனம்," "தாழ்ந்த இனம்" என்ற பாகுபாடில்லாமல் எல்லா ஹிந்துக்களிடையுமே அவருக்குத் தனி மதிப்பைத் தந்தன. ஆடுகளை மேய்த்து வந்த எளிய இடையன் அவர்—செவி வழிச் செய்திகள், அவர் ஒரு யோகியை ஒரு நாள் கண்டு அவருக்குப் பணிவிடை செய்துவர, யோகியின் சொற்படி அவர் உலக வாழ்வை விட்டுச் சமய வாழ்வை மேற்கொண்டார் என்று கூறுகின்றன. சுரைக் குடுக்கையை வைத்திருந்த காரணத்தால் அவருக்குச் சுரைக்காய் சுவாமி என்ற பெயர் வந்தது. சில துறவிகள் உலர்ந்த சுரைக் குடுக்கையைக் குடிப்பதற்கும், உண்பதற்கும் ஏற்ற கலமாக வைத்திருக்கின்றனர். முதலில் அவர் மதர்பாக் என்ற இடத்தில் இருந்தார். பிறகு துறவியாகச் சில காலம் நடமாடி கடைசியில் நாராயணவரத்தில் வந்து தங்கினர். அவருடைய பக்தியும் பின் நிகழ்வனவற்றை முன்னரே தெரிவிக்கும் ஆற்றலும் எல்லோருக்கும் தெரியவே, சென்னை உள்பட நாட்டின் பல பாகங்களிலிருந்தும் அவரைப் பலர் வந்து கண்டனர். விலையுயர்ந்த வெகுமதிகளும், துணிகளும், இனிய தின்பண்டங்களும் கொண்டு வந்து அவர் அருளைப் பலர் நாடினர். மிகுந்த செல்வம் உடையவர்கள் என்பதற்காக யாரையும் அவர் மதிப்பதில்லை. நடுநிலைமையை மேற்கொண்ட அவர், செல்வம்,

19

சமூகத்தில் உயர்ந்த நிலை, இவைகளைப் பொருட்படுத்த வில்லை. தாம் கூற வேண்டியதை நடு நிலைமையில் நின்று சொன்னார். சில வேளைகளில் சுவாமியிடம் தம் குறைகளைச் சொல்ல சிலர் இருமுறை செல்ல வேண்டியிருந்தது. ஒவ்வொரு முறையும் சிறப்பாகச் சுவாமிக்கு விருந்து செய்யப் படும். எல்லா நிலையிலிருந்தவர்களும் எல்லா வகையான மக்களும் தங்கள் எதிர்காலத்தைப் பற்றித் தெரிந்து கொள்ளவாவது தங்கள் கவலைகளைப் போக்கிக் கொள்ள வாவது சுவாமியிடம் சென்றனர். சென்னைப் பல்கலைக் கழகத்தில் படித்துப் பெரிய வேலையிலிருந்தவர்களும், பண்பாடும் அறிவுத்திறமும் தமக்கு மிகுதியாக இருப்பதாக நினைத்தவர்களும் செல்வந்தர்களும் பெரிய குடும்பத்தைச் சேர்ந்த ஹிந்துப் பெண்மணிகளும் அவர் அடியார்கள். இவர்கள் சுவாமியிடம் சென்று அவர் அடிபணிந்து தம் உலகியல் அலுவல்களைப் பற்றி அவரிடம் ஆறுதலான அல்லது நம்பிக்கை ஊட்டக்கூடிய மொழிகளைப் பெற்று வருவதைப் பெரிய பேருகக் கருதினார்கள். கவலை மிகுந்த காதலர், உத்தியோகத் துறையில் முன்னேற விரும்பியவர், புறக்கணிக்கப்பட்ட மனைவி, வியாபாரத்தில் தவித்துக் கொண்டிருக்கும் வியாபாரி, இவர்களனைவரும் சுவாமியிடம் ஆறுதலும் அறிவுரையும் பெறுவதற்காகச் சென்றனர். ஆறுதலுடனே, கவலையுடனே அவர்கள் திரும்பியது அவர் கூறிய பதில் அவர்களுக்கு உகந்ததாகவோ அல்லாமலோ இருப்பதைப் பொறுத்திருந்தது. சுவாமியின் பதில் எப்போதும் உருவகப் பேச்சாக இருந்தது. இது பொதுவாக அவரிடம் சென்றவர்களுக்கு எளிதில் விளங்குவதில்லை. எனினும் அவர் சொன்னது மறைமுகமாக இருந்தாலும் தவருக உணர்ந்து கொள்ள முடியாத பேச்சு வழக்கை ஒட்டியிருந்தது. புதிதாகச் சென்றவர்களுக்குத் தொடர்ச்சி

யில்லாதது போல் காணப்பட்ட அவர் பேச்சு அறிவுக் கோளாறு உடையவனின் பொருளற்ற பேச்சைப் போலிருந்தது.

தொழுதற்குரிய வகையில், வெண்ணிறத் தாடியோடும் பல ஆண்டுகளாகக் கவனிக்கப் பெறுததால் ஏற்பட்ட சடையோடும் காட்சி அளித்தார். அவர் தோற்றம், நூறு ஆண்டு வாழ்ந்தவர் என்று அவரைப்பற்றி நிலவி வந்த கருத்து சரியானதுதான் என்று காட்டியது. ஹிந்து துறவிகள் வழக்கமாக அணியும் காவி உடையையும் துளசி மணிகளையும் அவர் அணிந்திருந்தார்.

தம்மிடம் ஏதாவது தெரிந்து கொள்வதற்காக அடிய வர் யாராவது வந்தால் உடனே, சுவாமி பொருத்த மில்லா தன போற்காணப்படும் பல சொற்களை மளமள வென்று பேசுவார். ஆனால் இவற்றைக் கூர்ந்து கேட்டவர்கள் தாம் நினைத்து வந்த பொருள் பற்றித்தான் சுவாமி பேசினார் என்று தெரிந்து கொள்ளுவார்கள். சுவாமி பேசும்போது, வந்தவர்களை நேராகப் பாராமல் தலையைக் குனிந்து கொண்டு தொடர்பில்லாமல் பேசுவது போல வாய்க்குள் ஏதோ சொல்லுவார். அதனால் வந்தவர்கள் அவர் சொன்ன வற்றைக் கவனித்து உட்பொருளைக்காண வேண்டியிருந் தது. நாராயணவரத்தில் தம்முடைய ஆஸ்ரமத்தில் அவர் தனிமையாக வாழ்ந்தார். அவரைச் சுற்றியிருந்த சீடர் களுக்கு அவருக்காக ஏராளமாகக் கொண்டு வரப்பட்ட பொருள்களில் நிறையக் கிடைக்கும். சில வேளைகளில் சுவாமி ஊரில் தனியாக இருக்க விரும்பினாலும் அவருடைய பணக்காரச் சீடர்கள் அவரை அப்படியே சென்னைக்கும் மற்ற இடங்களுக்கும் கொண்டு போய் விடுவார்கள். ஏனெனில் விருந்து, திருமண வீடுகள், நோயாளிகள் உள்ள இடங்கள்—இவற்றிலெல்லாம் அவர் வருகையே பெரிய பேறாகக் கருதப்பட்டது. அவர்

சாப்பிட்டுவிட்டு எஞ்சிய உணவைக்கூடச் சிறப்பு வாய்ந்தது. தாகக்கருதி அவர் அருகில் இருந்தவர்கள் எடுத்துக் கொண்டனர். சுவாமி பிறருக்கு உதவி செய்யும் இயல்பு உடையவர். தமக்கு அன்பர்கள் அளித்த பொருளைச் சுவாமி அறவழியில் கொடுத்து விடுவார். அவர் காலமானது அவர் வாழ்ந்த ஊர் அருகிலுள்ள ஹிந்துக்களுக்கு ஈடு செய்ய முடியாத இழப்பு என்று நினைக்க வேண்டியிருக்கிறது. அவர் மறைந்து விட்டது அவர்களை உண்மையான துன்பத்தில் ஆழ்த்தியிருக்கிறது.

—மெட்ராஸ் மெயில், ஜனவரி 27, 1903.

---

## நாராயணவரம் சுவாமி

சரியாக இன்றைக்கு ஓராண்டுக்கு முன்பு இந்தச் சிறிய கட்டுரையின் பொருளாக உள்ளவர் காலமானார். மேன்மை தங்கிய ஏழாம் எட்வர்ட் மன்னரின் முடிசூட்டு விழாவன்றே - ஆகஸ்ட் ஒன்பதாந் தேதி—அவர் காலமானார். ஓர் ஆண்டு கடந்துவிட்டதென்றாலும் அவரைப் பற்றியும் அவருடைய தெய்வீகப் பண்புகளைப் பற்றியும் உண்மையான மதிப்பு வைத்திருந்தவர்களுடைய ஊக்கம் சிறிதும் குறையவில்லை. அவர் நினைவின் அறிகுறியாக எழுப்பப்பெறும் சின்னம் நன்றாக உருவாகிவரினும் அது விரைவில் முற்றுப்பெற வேண்டும் என்ற விருப்பம் எழுகிறது. 1903–ஆம் ஆண்டு ஜனவரி 27-ஆந் தேதி மெட்ராஸ் மெயில் செய்தித்தாளில் ஒரு கட்டுரை வெளிவந்தது. அதன் பகுதிகள் சில குறிப்பிடப்படுகின்றன; மேற்கோள்களாகத் தரப்பெறுகின்றன. மொத்தத்தில் பாராட்டாகவும் நன்றாகவும் எழுதப்பட்ட அக்கட்டுரையைப் பார்த்த

திலிருந்து பெரியவரின் சிறப்பைப்பற்றி இன்னும் சில குறிப்புக்கள் எழுத வேண்டுமென்று தோன்றியது. சுவாமி யின் முதல் குருபூஜை அவர் சீடர்களாலும் மற்றைய அன்பர்களாலும் தகுந்த முறையிலும் நல் ஊக்கத்துடனும் கொண்டாடப் பெற்றது. அன்று பல எளியவர்களுக்கு உணவு அளிக்கப்பட்டது. இதுவே, முழுத்துறவும் இரக்க மும், பிறர்க்குதவும் பண்பும் உள்ளவரின் குரு பூஜையைக் கொண்டாடச் சிறந்த வழி. இந்தப் பண்புகளுக்குச் சிறந்த எடுத்துக்காட்டாக இவர் வாழ்க்கை இருந்தது. அவர் கொள்கை தம்மை நம்பிவந்தவர்களுக்கு உதவி புரிவதும், அவர்களுக்கு ஏற்ற வழியில் ஆனமட்டும் உதவு வதுமாகும். அவரிடம் சென்றவர்கள் அவருடைய உண்மை யான மகிழ்ச்சிமிக்க அன்பை மறக்க முடியாது. ஆண், பெண், குழந்தைகள், விலங்குகள் ஆகிய எல்லா உயிர் களுக்குமே அவர் அன்பு காட்டினர்.

முன்பு குறிப்பிட்டதுபோல தனிச் சிறப்பு வாய்ந்த அவருடைய வாழ்க்கையின் விவரங்கள் எல்லோருக்கும் அக்கரை உண்டாக்கக் கூடியதாக இருக்கின்றன. உள் ளூரில் அவரை அன்பும், மக்களுக்கு உதவும் பண்பும் வாய்ந் தவராக மக்கள் கருதினர். அவர் தியானத்தில் ஆழ்ந்திருந் தார். அவர் உலகப் பகட்டுகளை மதிப்பவரல்லர். எப் போதும் உதவி செய்யத் தயாராயிருப்பவர். ஆனால் அவர் சொல்வதை முழுவதும் புரிந்துகொள்ள முடிவதில்லை, இப்படிப்பட்டவர் சாதாரண மனிதர் அல்லர் என்று இருபது அல்லது முப்பது ஆண்களுக்குமுன் முதலில் கண்டு பிடித்தவர்கள், இப்போது P.W.D.இல் இருந்து ஓய்வு பெற்றிருக்கிற ஒருவரும் அவருடைய இரண்டு நண்பர் களும் ஆவர். 1887-ஆம் ஆண்டிலிருந்து அவரிடம் தங்க ளுக்கு வேண்டிய உதவி ஒத்தாசைகளைப் பெறப் பலர்

சென்றனர். இதனால் அவர்களுக்கு மிருந்த நன்மை இருந்தது என்பது அவரை அவர்கள் பெருமதிப்போடும் பணிவோடும் பாராட்டியதிலிருந்து தெரிகிறது.

பொதுவாக நம் நாட்டில் மூச்சை அடக்க வேண்டும், இல்லற வாழ்க்கையைத் துறக்கவேண்டும் என்று சொல் லும் சமய ஆசிரியர்களைப்போல அவர் ஒன்றும் சொல்வ தில்லை. எப்போதும் தூய்மை, மன ஒருமைப்பாடு, ஆண்டவ னிடத்து அன்பு, சார்பு, பயன் கருதாது கடமையைச் செய்வது ஆகியவற்றை அவர் வற்புறுத்தி வந்தார். பின்னர், இவரிருந்த இடம் தேடிச் சென்றோர் தொகை இடர்ப்பாடான வழியில் பெருகியதால் இவருக்கே அது ஒரு தொல்லையாகிவிட்டது. ஆகையால் இந்தச் சமயங்களில் இவரைப் பார்த்தவர்கள் இவருடைய பண்புகளைப் பற்றி யும், செய்த உதவி, கூறிய அறிவுரை ஆகியவற்றைப் பற்றி யும் சரியாகப் பாராட்டுவது எளிதன்று. எனினும், சுவாமி கிடைத்த வாய்ப்புக்களைப் பயன்படுத்திக் கொண்டு தம்மை அடைந்தவருக்கு வேண்டுவன சொன்னார். அவருக்கு இருந்த பெருமதிப்பும் பாராட்டும், சென்னையில் வந்திருந்த போது சற்று உலவிவரச் சென்றாலும் இவரைப் பின் தொடர்ந்த கூட்டத்தைச் சமாளிப்பதற்காக அருகிருந்த போலீஸ் சேவகர்களும் இன்ஸ்பெக்டர்களும் செல்ல வேண்டியிருந்தது என்பதிலிருந்து தெரிந்துகொள்ளலாம். நிற்க, பகவத்கீதை கூறுவதுபோல, நமக்கு இப்போது நிகழும் வாழ்வின் தொடக்கமும் இறுதியும் தெரியாமல் நடுப் பகுதி மட்டும் தெரிவதுபோல இவர் வாழ்க்கையைப் பற்றி யும், எங்கே பிறந்தார், பெற்றோர் எவர், எந்தக் குலத்தைச் சேர்ந்தவர், இவர் இயற்பெயர் என்ன என்பவற்றைப்பற்றி இவரை வணங்குவதற்காக இவரிடம் அடிக்கடி சென்றவர் களுக்கும், மற்றும் எவர்க்குமே ஒன்றுமே தெரியாது. ஆனால் இவருக்கிருந்த பெரிய செல்வாக்கு எப்படி ஏற்

பட்டது? எனவே, இவருடைய தனிச்சிறப்பு வாய்ந்த வாழ்க்கையில் இறுதிப் பகுதி மட்டுமே நமக்குத் தெரிந்தது என்று சொல்வதில் வியப்பில்லை. இறுதி எதிர் பாராத வகையில், இவரை அடைந்தவர்கள் வருந்த வேண்டிய முறையில் ஏற்பட்டது. ஆனால் முடிவு அவருக்குத் தெரியாததன்று. ஏனெனில் இறுதி வருவது தெரிந்து தம் உடலை நீத்துச் செல்லும்போது தமக்கு விருப்பமுள்ள இடமான நாராயணவரத்திலிருக்க வேண்டுமென்று அங்கே சென்றுவிட்டார்.

சுவாமி எல்லோருக்கும் நன்றாகத் தெரிய வந்த காலத்திலிருந்து வடமேற்கு ரெயில் பாதையிலுள்ள புத்தூருக்கு மூன்று மைல் தொலைவிலுள்ள நாராயணவரம் என்ற ஊர் சுவாமியின் தலைமை இருப்பிடமாயிருந்தது. முன்பு குறிப்பிட்டபடி இந்த இடத்தின் சுற்றுப்புறம் பல மஹான்களும் பெரியார்களும் முற்காலத்தில் நடமாடிய இடம் என்பதாகப் பல கதைகள் வழங்குகின்றன. சென்னைக்கு இவ்வளவு அருகிலும் மக்கள் அடிக்கடி நடமாடும் இடங்களுக்கருகிலும் மிகக் கவர்ச்சியுடைய இயற்கைச் சூழலிலுமிருப்பதால் அங்கே சென்று வருவது இன்பந் தரத்தக்கதாயுள்ளது. மேலும் இங்கே உள்ள சிற்றூர்களைச்சேர்ந்த மக்கள், பொதுவாக, விருந்தோம்பல், எளிமை, ஆடம்பரமின்மை ஆகிய பண்புகள் உடையவர்கள் என்பது குறிப்பிடத் தக்கது. இந்த இயற்கைச் சூழலின் அழகு இதன் இடையில் வளைந்து செல்லும் மலைஅருவியினால் மிகுதியாகிறது. நாராயணவரத்தில் ஸ்ரீ கலியாண வெங்கடேசுவரர் கோயில் இருக்கிறது. நாராயணவரத்தைச் சுற்றியுள்ள இடமும் பக்தியுள்ள ஹிந்துக்களுக்குப் புனிதமான இடம்.

இந்தப் புனிதமான இடம் தற்காலத்தில் குறிப்பிடத் தக்கவராயிருந்த இந்தத் துறவியைத் தோற்றுவித்ததில்

வியப்பில்லை. இவர் சொந்த ஊர் எது என்று எவருக்கும் தெரியவில்லை. எனினும், வரலாற்று நோக்கோடு பார்க்கும் போது, இவர் வாழ்க்கையின் இளம்பிராயத்தைப் பற்றியும் அப்போது செய்தவை பற்றியும் விவரங்கள் கிடைப்பின் அவை மிகவும் சுவையுள்ளனவாயிருக்கும் எனலாம். மஹான்களாக வேண்டுமென முயலும் சிலரைப் போலல்லாமல், சுவாமி எவருடனும் பேசியும் பழகியும் வந்தாலும் தம்மைப்பற்றிய விவரங்களை எவரிடமும் சொல்லவில்லை. ஏனெனில் முற்றுந்துறந்துவிட்ட பிறகு, முன்பிருந்த நிலை தொடர்பு அற்றுப் போவதால் அதைப்பற்றிப் பேசுவது பொருத்தமன்று என்று சுவாமி நினைத்திருக்கலாம். அவரைப்பற்றிய விவரங்கள் வேறெவருக்கும் தெரியவில்லை. சுரைக் குடுக்கையை உண்பதற்காகவும் தண்ணீர் குடிப்பதற்காக வும் பல ஆண்டுகளாக வைத்திருந்த காரணத்தால் போலும் இவருக்குச் சுரைக்காய் சுவாமி என்ற பெயர் வந்தது. ஆனால் இவர் மதர்பாக்கத்திலா அல்லது வேறிடத்திலா முதலில் இருந்தது என்பது யாருக்கும் தெரியவில்லை. ஒருக்கால் தம் வாழ்க்கையில் சில காலம் அங்கே இருந் திருக்கலாம் அல்லது சென்றிருக்கலாம். அவர் வழக்க மாகச் சுற்றும் இடங்கள் சில உண்டு. ஒரு சமயத்தில் இவர் ஒழுங்காகப் பெரியபாளையத்திலிருந்து போய்க்கொண்டும் வந்துகொண்டுமிருந்ததாகவும் சொல்லப்படுகிறது. இவர் பலருக்கு அறிமுகமான பிறகு (அதாவது 1886–87 முதல் 1894–95 வரையில்) இவர் பயணம் நாராயணவரத்தி லிருந்து நாகலாபுரம் வரையிலும், பிறகு திருவள்ளூருக் கருகிலுள்ள சிறு ஊர்கள் வரையிலும் பரவியிருந்தது. ஜூலை 1894-ல் (மார்ச் 1893) சுவாமி ஒரு திருமண அழைப்பை ஏற்றுச் சென்னைக்கு வந்தார். சுவாமி சென்னை வரவேண்டுமென்ற பலர் விருப்பத்திற்கிணங்கவே அவர் வந்திருக்கலாம். சுவாமியை அழைத்தவர்கள் அவர்

அவ்வளவு எளிதாக நேரில் வர உடன்படுவார் என்று கன விலும் நினைக்கவில்லை. அவருக்குத் தம் வணக்கத்தைச் செலுத்தவும் இதன் வழியாக அவர் இசைவையும், வாழ்த்தையும் பெறவுமே அவர்கள் அவரை அழைத்தனர். இது முதல் அவர் பயணம் சென்னைவரை பரவியது. ஒரு முறை தென்னார்க்காடு ஜில்லாவில் உள்ள கூடலூருக்குச் சென்றார். முதல் முறை சென்னைக்கு வந்த பிறகு அவர் விழித்திருந்தாலும் படுத்திருந்தாலும் பெருவாரியான மக்கள் அவரை வணங்குவதற்காக வரத்தவறுவதில்லை.

சுவாமி சராசரி உயரத்திற்குச் சற்று குறைவாகவே இருந்தார்—உடல் மிகப் பருத்தும் இல்லை, மிகச் சிறுத்தும் இல்லை. இறுதிவரை அவருக்கிருந்த உடலாற்றல் வியக்கத் தக்கதாக இருந்தது. அவரிடம் பழகியவர்கள் கண்டறிந்த படி அவர் அறிவு, கால இட எல்லைகளால் கட்டுப்படாத தனிச்சிறப்பு வாய்ந்தது. அவர் வாழ்க்கையின் இறுதிப் பகுதியைச் சேர்ந்த பத்து ஆண்டுகளில் அவருக்குக் குடுமி கிடையாது—சரியாகப் பார்த்துக்கொள்ளாத காரணத்தால் அவர் முடி சடையாகிவிட்டது. அதற்குமுன் இருந்த ஒரு நீண்ட குச்சு முடியை அவர் எடுத்துவிட்டார். அது இப்போது கொப்பேடு என்ற ஊரில் ஒரு வீட்டில் அவர் நினைவின் அறிகுறியாக பாதுகாக்கப்பட்டு வருகிறது. துறவியின் காவி உடையை அவர் அணிந்ததில்லை. வழக்கத்தை ஒட்டியோ வெளித் தோற்றத்திற்காகவோ மற்றவர்களைப்போல அவர் ஒன்றும் செய்துகொள்ளாதது அவர் தனிப்பண்பு. அவர் எப்போதும் எது நல்லதோ, எது வசதியாக இருந்ததோ, எது பிறருக்கு உதவியாக இருந்ததோ அதைச் செய்தார். தம்முடைய குடும்பம் என்ற கட்டுப்பாடில்லாத அவருக்கு எல்லோருமே இறைவனின் மக்கள் என்ற முறையில் ஒத்த உறவினர்களானார்கள். அவருடைய முக ஒளியும் சுறுசுறுப்பும், இனிய உளப்

பாங்கும், தெய்வீக ஒளியும், அறிவாற்றலும் அவரது தோற்றத்தில் தெளிவாக விளங்கின என்பது பலமுறைகள் எடுக்கப்பட்ட அவருடைய புகைப்படங்களிலும் காண லாகும். பிறர் வணங்கத்தக்கத் தோற்றமுடையவராயிருந் தார். முழு வெண்மை இல்லையெனினும் முதுமையால் அவர் தாடியில் நரை மிகுந்திருந்தது. தியானத்தின் மிக உயரிய நிலையில் இருந்த அவர் எளிய உணவே போதுமென்றிருந் தார். தம்மைப்பற்றியோ தம் வசதிகளைப்பற்றியோ அவர் கவலை கொள்வதில்லை. விழித்திருந்து தம்சூழலைக் கவ னித்துக் கொண்டிருந்த போதெல்லாம் அவருடைய இன்பம் சிறந்த முறையில் பிறர்க்கு நன்மை செய்வதில்தான். ஆனால் அவர் உதவி செய்வது வெளிப்படையாக இராத தால் அதை அடைந்தவர்கள்கூடச் சிறிது பொறுத்தே தங்கள் அனுபவத்திலும் காட்சியிலும் அவர் என்ன செய் தார், எப்போது செய்தார் என்று தெரிந்துகொண்டார்கள். எதையும் தாம் செய்ததாக அவர் கருதாததால், அவர் செய்த உதவி அவரிடம் நிறைந்திருந்த ஆன்மீக ஆற்றலைக் குறைக்காமல் நிகழ்ந்து வந்தது. மேலும், நல்ல வேலை எது வாயினும் அதைச் செய்வதில் இன்பங்கண்டு தம்மிடம் வந்தவர்களையும், அவர் வேலை செய்யும்படிச் சொன்னார். நெகிடிக்காக மரம் வெட்டிப் பிளப்பதைப் பார்ப்பதில் அயராத அக்கரை கொண்டிருந்தார். அவர் சென்ற இடங் களில் 'எங்கெல்லாம் தண்ணீர்த் தேக்கம் இருந்ததோ அங்கெல்லாம் தம் அடியார்களைக்கொண்டு கற்கள் எடுத்து வரச்செய்து தண்ணீரைக் கடக்கச் சிறு பாலம் அமைப்பார்.

சுவாமி ஒரு மஹாத்மாவாக மாறுவதற்குமுன் ஆடு மேய்க்கும் இடையனாக இருந்தார் என்று சொல்லப்படு வதற்குத் தகுந்த அடிப்படை இல்லை. ஏனெனில் முன்பே குறிப்பிட்டபடி யாருக்கும், 'இவர் பிறப்பு, இளமைப் பருவம், இவற்றைபற்றிய விவரங்கள் தெரியா. இந்தக்

கருத்து, இவர் உழவர், இடையர் வாழ்க்கையை ஒட்டிய கதைகள், மேற்கோள்கள் போன்றவற்றைக் கூறியதால் எழுந்த யூகமாகலாம். பின்வருவனவற்றை முன்னதாகத் தெரிவித்து அதனுல் பல அடியார்களைப்பெற இவர் விரும்பவில்லை. ஆனுல் தம்மை அடைந்தவர்களுக்குப் பகட்டில்லாமல் எப்போதும் தம் அறவுரையாலோ, அவர்கள் சிக்கல்களைத் தீர்ப்பதாலோ உதவிவந்தார். அவர் சொன்னது எதுவும் பொய்யன்று; அவர் நடக்கும் என்று சொன்னது ஏதும் நடைபெறத் தவறியதில்லை என்பன உற்றுப் பார்ப்பவர்களுக்குத் தெரியும்.

வாய்ப்புக்குத் தக்கபடி நல்ல உணவு, சிற்றுண்டி அவருக்கு அளிப்பதற்காக அவரிடம் சென்றவர்கள் ஏற்பாடு செய்வார்கள். ஆனுல் அவர் விரும்பியது அவர்களுடைய உள்ளன்பே. அவர் தேவைகள் மிகக் குறைவு. ஆடம்பரப் பொருள்களை அவர் மதித்ததில்லை. கூழாயினும் அறுசுவை உண்டியாயினும் அவர் அளவுக்கு மிஞ்சி உண்பதில்லை. இதனுலும் இதைப்போன்ற மற்ற செயல்களாலும் அவர், நடைமுறையில், தமக்கே உரிய எளிய வகையில், பொன்னுன பாடங்கள் கற்பித்தார். இந்த நடைமுறைக் கல்வி முறையும் பிறர் துன்பத்திற்காக அளவற்ற இரக்க உணர்வும் அவரிடம் இருந்ததால் அவர் எல்லோராலும் விரும்பப் பட்டுத் தம்மிடம் பழகியவர்களுக்கு இனியவரானுர். தம்மிடம் அன்பாயிருந்தவர்களிடம் தாமும் அன்பாயிருந்தார். அவரை அறிந்தவர்கள் அவரிடம் மிகுந்த அன்பும் மதிப்பும் வழிபாட்டுணர்ச்சியும் கொண்டிருந்தார்கள். இப்போதும் அவர் அடியார்கள் இவ்வாறுதான் நடந்து கொள்கிறுர்கள்.

சுவாமியுடைய பேச்சு, எடுத்துக்காட்டு ஆகியவற்றை அறிந்திருந்தவர்களுக்கு அவர் பேசியதின் பொருள் விளங்கிக்கொள்ளக் கூடியதாயிருந்தது. உலகியலில் அவர்

உதவியை நாடினவர்களுக்கும் அவர் உதவி செய்தாரெனினும் ஆன்மீக வாழ்வையும் தத்வ, சமய உணர்வையும் நாடி வந்தவர்களிடமே அவர் மிகுந்த அக்கரை கொண்டிருந்தார்.

சுவாமி நீண்டகாலம் வாழ்ந்தார் என்பதில் ஐயமில்லை. ஆனால் இதில் பேச்சுக்கோ, விவாதத்திற்கோ இடமில்லை—ஏனெனில் நீண்டகாலம் வாழ்வதில் மட்டும் சிறப்பு ஒன்றுமில்லை.

—The Madras Standard.

---

திருவாளர் மயிலை **பாலசுப்பிரமணிய முதலியார்,** B. A., B. L.

**அவர்கள் மணிவிழா மலரில் பின்வரும் குறிப்பு உளது. இதனை அவர்கள் இசைவுபெற்று வெளியிடுகின்றோம்.**

"ஆறு மாதக் குழந்தையாயிருந்தபோது மூலம் வெளி வந்து உயிர் ஊசலாடிற்று. அப்போது சென்னையிலிருந்த சுரைக்காய் சாமியார் இடம் என்னைக் காட்டினார்கள். அவர் அருள்நோக்கு என்மீது பாய்ந்தது. ஒன்றும் வாய் திறவாது மூன்று விரல்களை நீட்டிக் காட்டினாராம். தாயும் தந்தையும் மூன்று நாளில் நான் மடிவேன் என்று எண்ணினார்களாம். மூன்றாம் நாள் வெளிவந்த மூலம் தானே உள் சென்றுவிட்டது. அன்றுமுதல் இன்று வரையில் எனக்கு மூலநோய் தொடர்பு எவ்விதத்திலும் இல்லை."

**—மணிவிழா மலர், பக்கம் 85.**

---

## சுரைக்காய் சுவாமிகள்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
| --- | --- | --- | --- |
| 1 | 13 | நிகழ்கின்றன | நிகழ்கின்றது. |
| 8 | 10 | வனளாவிய | வானளாவிய |
| 21 | 27 | ஆராவமுத | ஆராவமுது |
| 23 | 12 | பிடிக்கப்பட்டு | பீடிக்கப்பட்டு |
| 25 | 8 | விளையாட்டன்று | விளையாட்டன்று" |
| 38 | 7 | தீவினையிஞ | தீவினையிஞல் |
| 46 | 10,17 | ஆராவமுத | ஆராவமுது |
| 47 | 30 | ,, | ,, |
| 53 | 10 | ,, | ,, |
| 59 | 3 | பூஜாரிகள் | பூசாரிகள் |
| ,, | 26 | அதற்குதான் | அதற்குத்தான் |
| 61 | 18 | ராக்ஷசன் | ராக்ஷசம் |
| ,, | 22 | ராக்ஷசன் | ராக்ஷசம் |
| 63 | 3 | ராக்ஷசன் | ராக்ஷசம் |
| 63 | 6 | கொண்டிருந்தது | கொண்டுமிருந்தது |
| ,, | 28 | வேஷங் கொண்டவறுமான | வேஷங் கொண்டவனுமான |
| 64 | 3 | பாட்டதைக் | பாட்டைத் |
| 69 | 2 | Stationary | Stationery |
| 70 | 5,6 | "நீ பிள்ளை...... பெறுகிருய்" | "பிள்ளையைப் பெறுவான் என்று பார்த்தால் பெண்ணைப் பெண்ணைப் பெற்ருன்." |
| 73 | 8 | மருத்துவர்கன் | மருத்துவர்கள் |
| ,, | 18 | மேலென்று எண்ணிஞர் | மேலென்று நாயுடு எண்ணிஞர். |
| ,, | ,, | நாட்களுள் | நாட்களுக்குள் |
| 74 | 26 | M. A. | B. A. |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 75 | 1 | புதுமையாக | புதிதாக |
| ,, | 10 | ஒருவர் மிகவும் நோயுற்றிருந்தார். | ஒருத்தி நோயுற் றிருந்தாள். |
| ,, | 20 | இந்நிகழ்ச்சிக்கு முன் ஒருமுறை | இந்நிகழ்ச்சிக்குமுன் சுவாமி ஒருமுறை |
| 76 | 10 | தெரிவிக்கிறேன் | தெரிவித்துக் கொள்ளுகிறேன், |
| 78 | 11 | வருந்தி | வருத்தி |
| 80 | 20 | சொல் | சொல்" |
| 84 | 28 | மாறியதும் | மாறியதம் |
| ,, | ,, | உதவுவதற்கு மாகவும் | உதவுதற்காகவும் |
| 85 | 18 | அனுபவத்தில் கடவுள் | அனுபவத்தில் மக்கள் கடவுளைக் காண்பதும் |
| 86 | 14 | நிலைகளிலும் | நிலைகளும் |
| ,, | 17 | பகர்கின்றது | பகர்கின்றது" என்கிறார். |
| ,, | 28 | தம்மை | கடவுள் தம்மை |
| 87 | 18 | ஆகாது" | ஆகாது" என்கிறார். |
| 88 | 18 | Appolonius | Apollonius |
| 89 | 4 | எண்ணிதங்கள் | எண்ணித்தங்கள் |
| ,, | 27 | புகழ்பாடுவது...... | புகழ்பாடுவது பிறருடன் ஒத்துப் போவதற்காகத் தம் கொள்கையை விட்டுவிடுவ தாகாது...... |
| 90 | 24 | தண்ணீர்த் திராட்சை | தண்ணீர் திராட்சை |
| 93 | 8 | பல அற்புதங்களும் | பல அற்புதங்களும் உடலில் வடுக்கள் உண்டாக்குவதும் |
| ,, | 33 | விரிவாகியுள்ளது | விரிவாகியுள்ளது." |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 98 | 30 | ஊரிலில் | ஊரில் |
| 100 | 24 | மலிவாயிருந் தாலும் | மலிவாயிருந்த தாலும் |
| 107 | 6 | இருந்தார். | இறந்தார். |
| 108 | 14 | அவற்றை | அவரை |
| 109 | 1 | எதிர்வினை | எதிர்வினை. |
| ,, | 5 | வளர்ச்சி, | வளர்ச்சி. |
| 111 | 7 | செய்தியைப்பயிறி | செய்தியைப்பற்றி |
| ,, | 11 | இலாகாவீல் | இலாகாவில் |
| 117 | 10 | அவ்வாலிபன் | அவ்விளைஞர் |
| ,, | 13 | கொடுத்தான் | கொடுத்தார் |
| 118 | 19 | முன்னிலையிலும் இங்கிருந்து | முன்னிலையிலும், "இங்கிருந்து |
| ,, | 27 | விட்டிறங்கி | விட்டிறங்கித் |
| 123 | 21 | இரும்பு | இரும்புக் |
| ,, | 30 | தாண்டி | தாண்டிக் |
| 124 | 22,23 | செலுத்தினேன் | செலுத்தினான். |
| 125 | 18 | சுமாமி | சுவாமி |
| 131 | ,, | கெடிவிபூதியையும் | கெகிடிவிபூதியையும் |
| 147 | 1 | 'ஸியஸ்டர்' | 'ஸியஸ்டா' |
| ,, | 5 | என்றார். | என்றார். அவர் சொற்கள் |
| 174 | 6 | போன | வந்த |
| 176 | 17 | எனக்கும் | எனக்குப் பணம் |
| 180 | 3 | திவான்பஹதூர் | திவான்பஹதூர்) இராமசாமி நாயுடு |
| 180 | 29 | Cornel | Colonel |
| 194 | 14 | இறங்க | உறங்க |
| ,, | 29 | என்றேன் | சென்றேன், |
| 213 | 13 | பேசுவதும். | பேசுவது |
| 215 | 2 | ஆற்காடு | ஆர்க்காடு |
| 223 | 1 | அவ்வான்டின் | அவ்வாண்டின் |
| 224 | 11 | Become Serions | (இந்தச் சொற்களை நீக்கிவிடுக). |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 225 | 7 | அவன் | அவள் |
| 229 | 24 | உள்பொருள்(?) | உள்பொருள் |
| 230 | 2 | பித்துக்கொள்ளி | பித்துகொளி |
| 238 | 7 | Head Asst. Collector | Head Asst. Collector, Collector |
| ,, | 28 | ந. முஹம்மது | B. முஹம்மது |
| 239 | 1 | தம்மிடம் பதில் | தம்மிடம் |
| ,, | 15 | என்னேயே | என்னேயே |
| 256 | 14 | வருவனவற்னை | வருவனவற்றை |
| 260 | 29 | ஒரு பெரிய (Knothy Price of Wood மொக்கையை | ஒரு பெரிய மொக்கையை |
| 263 | 11 | வடிவென்னுத்தான் | வடிவென்னுத்தாள் |
| 269 | 5 | மனிதனேயும் | மனிதரையும் |
| 278 | 8 | சார்பும், | சார்பு, |
| 283 | 1 | உழவர் என்பதும் | உழவர், |
| ,, | 2 | கதைகளும் | கதைகள் |
| ,, | 3 | பின்வருவன வற்தை | பின்வருவன வற்றை |
| ,, | 5 | வர் | அவர் |

---

இந்நூல் உரிமையாளர்கள் முகவரி:—

Dr. வ. ஆ. தேவசேனுபதி, M.A.,

*16*, முத்தியாலு செட்டி தெரு, புரசை, சென்னே-*7*.

செ. பாரிஜாதம் B.Sc., B.T.,

*183*, ஷேனுய் நகர், சென்னே-*30*.